ஸ்ரீ

# ரமண ஞான போதம்

## ஆறும் பாகம்

# அநுபவ விளக்கம்

## (நான்காம் பிரிவு)

ஸ்ரீ முருகனர்

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# ஸ்ரீ

# ரமண ஞான போதம்

## ஆறும் பாகம்

## அநுபவ விளக்கம்

(நான்காம் பிரிவு)

இயற்றியவர்

ஸ்ரீ முருகனார்

பதிப்பாளர்

ஸ்ரீ ரமண கேந்திரம்—புது தில்லி

1990

கிடைக்குமிடம்:—

ஸ்ரீ ரமணாச்ரமம் புத்தக சாலை
திருவண்ணாமலை-606 603, தமிழ் நாடு.

Ramana Kendra,
8, Institutional Area,
Lodi Road, New Delhi-110 003.

Sri Arunachala Ramana Nilayam
Sri Ramana Nagar,
Tiruvannamalai-606 603, Tamil Nadu.

Ramana Kendra,
No. 11, C. P. Ramaswami Iyer Road,
Madras-600 018.

Ramana Maharshi Centre for Learning,
40/41, II-Cross, Lower Palace Orchards,
Bangalore-560 003.

**விலை ரூ. 10**

மத்திய அரசின் உதவி பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது.

Published with the Financial Assistance from the Government of India, Ministry of Education & Social Welfare (Dept. of Education.)

This book has been published on the paper supplied by the Government of India at concessional rates.

அச்சிட்டோர்:

விநாயக ஃபைன் ஆர்ட் பிரிண்டர்ஸ்,
163, வெள்ளாளத் தெரு, சென்னை-600 084.

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# பதிப்புரை

**ஸ்ரீ ரமண** ஞான போதம் என்ற ஒன்பது பாகம் கொண்ட மாபெரும் நூலின் ஆறாவது பாகமாக வெளி வரும் இந்த **அநுபவ** விளக்கம் நான்காம் பிரிவு, முருகனார் சுவாமிகளின் நீண்ட கால நண்பர் தவத்திரு சாது ஓம் சுவாமிகளாலேயே பொருள் கருதித் தொகுக்கப்பட்டு, உரிய அத்தியாயத் தலைப்புகளும் தரப்பெற்ற நிலையில் இருந்தது. அப்பெரியார் மறைவின் பிறகு ஸ்ரீ N. T. கணேச பாஸ்கரன் அவர்கள் செய்யுள்களை உருவம் கருதி ஒவ்வொரு தலைப்பின் கீழ் வரிசைப்படுத்தி பதிப்பு வேலையைச் செய்து முடித்துள்ளார். அவருக்கும், இத்திருப் பணியில் உடன் உழைத்த மற்ற அன்பர்களுக்கும், தில்லி ரமண கேந்திரத்தின் நன்றி.

இந்த நான்காம் பிரிவுடன் 7,817 செய்யுள்களைக்கொண்ட **அனுபவ விளக்கம்** என்ற பெரும் பகுதி முடிவுறுகிறது.

அடுத்து இன்னும் மூன்று பாகங்கள் வெளி வர உள்ளன. சுமார் 3150 செய்யுள்களைக் கொண்ட **உபதேச விளக்கம்** என்ற இரண்டு பிரிவுகளும் ஞான போதத்தின் ஏழாவது எட்டாவது பாகங்களாக வெளிவர இருக்கின்றன. முதற் பிரிவில் 'அறிவுரை' என்ற பொருளும், இரண்டாம் பிரிவில் 'உபாயமுரைத்தல்', 'உறுதியுரைத்தல்' 'இலக்கணம் கூறல்' என்ற பொருளும் அமைந்துள்ளன.

ஒன்பதாம் பாகத்தில் சுமார் 3250 கண்ணிகளைக் கொண்ட 'பாதமாலை', 'தெய்வமாலை' என்ற நூல்கள் அடங்கும் (இந்த தெய்வமாலை புதிய படைப்பு; இது 1939-ம் ஆண்டில் ஸ்ரீ ரமணபாதானந்தரால் வெளியிடப்பட்ட 207 பாடல்களைக் கொண்ட 'ஸ்ரீ ரமண தேவ மாலை' என்ற நூல் அன்று).

தர்மாலயம்,
சென்னை-18

**கி. சுவாமிநாதன்**

# உள்ளுறை

**28.** ஞானம்

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசல ரமணாய

# ஸ்ரீ ரமண ஞான போதம்

ஆறும் பாகம்

# அநுபவ விளக்கம்-IV

---

## 1. பாடலும் பயனும்

(வெண்பா)

1. அந்தமில்பே ரின்ப வருட்கடலா வாண்டவவ்
வந்தணனை யெண்ணி யகங்குழைந்து—செந்
[தமிழாற்
பாடக் கிடைத்தவருட் பாக்கியத்தாற் பாதமுடி
சூடக் கிடைத்த தெனக்கு.

2. சாவுக்குச் சாவாத் தழைத்தவருட் பாதவொளி
நாவுக் கருங்கலமா நண்ணியதே—கூவிக்குற்
றேவல்கொண் டென்னிதயத் தின்புறத்தான்
காவலால் வாக்கிற் கலந்து. [செய்தருளுங்

(கொச்சகக் கலிப்பா)

3. மூடலுற்ற மோக முனைப்பறக்கூர் கண்ணேக்கால்
ஏடனு வென்னையடிக் கேற்றுக்கொண் டாண்டவன்
பாடலுற்றே னுள்ளுணர்விற் பாசமறப் பற்றியது [சீர்
தேடலுற்றார் தம்முருவாத் தேறுசிவச் சிற்பரமே.

## 2. வாழ்த்தலும் பயனும்

(வெண்பா)

4. முன்னமே யாண்டான் முழுமுதலா மெய்த்தன்மை
யின்னதென வோர்த்துணரா வேழையேன்—என்னே
அவனைநான் வாழ்த்த லெனக்கேவாழ் வாக
வவனுருவே நானுயி னேன்.

(கொச்சகக் கலிப்பா)

5. ஞானு ரியனடிச்சீர் நாத்தழும்ப வாழ்த்தலுற்ற
தீனனே னுக்குத் திருவருளா லுள்ளத்து
மோனனு பூதியா முற்றலுற்ற முத்தியுணர்
வானு தகமகமென் றன்புருவாப் பொங்கியதே.

6. ஓயாக்கர்த் தத்துவப்பா ரூழ்த்தையுணர் வாலமுங்கிப்
பேயாத் திரிந்தபெரும் பித்தனேன் கற்பனையிற்
சாயாத் திரஞான மோன சமாதிபெற்றேன்
வாயார வாழ்த்தியதால் வள்ளற் பிரானையே.

## 3. ஆண்டவன் அருள்

### க. ஆண்டவன் அருளியல்பு

(கொச்சகக் கலிப்பா)

7. நம்பினூர் தம்மை நலியவிடான் கண்டீர்மெய்
யன்புமே விட்டா ரகத்திற் குதூகலப்பே
ரின்பமெழப் பொங்கு மிறைவன் குருரமணன்
தம்பமா விவ்வுலகைத் தாங்குபர தத்துவனே.

8. ஒன்றுன வுண்மை யொளிவெளியா வுள்ளத்து
நன்று வியல்சொருப நம்பனைநான் கண்டுகொண்
[டேன்
குன்றுத மோனக் குலாவாலென் றென்றென்றும்
பொன்றுத சுத்தவருட் பூரணமா வுள்ளானே.

## உ. ஆண்டவன் அருள் மாட்சி
(கொச்சகக் கலிப்பா)

9. பிழைபட் டொழிந்தேன் பிரான்பா லடியேன்
குழைவுற் றதுநோக்கிக் குற்றம் பொறுத்தான்;
உழையோர்பாற் பேதைமையா லுண்டான குற்றப்
பிழைதாம் பொறுத்தல் பெரியோர் குணமே.

10. ஆன்ம சொரூப வறிவொளியின் வண்ணமாத்
தான்மருவு சுத்த சதாசிவசற் பூரணத்தை
யான்மகிழக் காட்டி யிதயத் தனுபவமாத்
தான்மருவு மேகான்ம தத்துவன்சீர் சாற்றரிதே.

11. தாகமா வாண்டவனைச் சார்ந்தோர் அகந்தைமனோ
வேகமா மோகமயல் வேட்கையற, மிக்கசிவ
போகவாழ் வானவருட் பூரணசாந் தானுபவ
வோகைமீ தூர வொளிர்வர் சிவபதத்தே.

12. எளியார்க் கெளிவரலா லெம்மான் இயல்பா
லெளியன்போ லெண்ணி யெளிமைப் படாதீர்;
ஒளியோ ருணர்வர் உளத்தூ டொளிசேர்
வெளியா விளங்கலவன் வித்தகமெய் யென்றே.

13. பெண்கள்பாற் றன்னடியர் பேதுபடா தன்னரகத்
தெண்களிக்கச் சொக்க வியல்வடிவா வீற்றிருந்து
கண்கொள்ளாக் காட்சிமனக் கண்களிக்கக்
[காட்டுவான்
விண்கொள்ளா நுட்பவொட்ப விண்ணுனை மெய்யனே.

14. எண்ணுநின் றேன்பா விருள்சே ரகந்தையற
நண்ணுநின் றுன்சொருப ஞான வொளிப்பிழம்பா;
உண்ணுடை லூற்று ருளத்தொளியா வோங்குபர
விண்ணுனை மெய்யனிரு வேறலன்மெய் யன்பருக்கே.

## ௩. ஆண்டவன் அன்புச் செயல்
(வெண்பா)

15. பேதபுத்தி தீரப் பிரிவித்தான் சிற்சொருபப்
பாதபத்தி யுள்ளம் பதிவித்தான்—போத
குருநாத னுனவருட் கோமா னெனக்குப்
பெருநா யகமாம் பிரான்.

### ௩. ஆண்டவன் சின்முத்திரை

(வெண்பா)

16. நானற் றெழுமுகுமெய்ஞ் ஞானசொரூ பானுபவ
மோனத் தியல்பான முத்தியே—மோனத்
திருவார்த்தை யாற்கடவுட் செம்பொருளைத் தேற்றுங்
குருமூர்த்தி தன்சிற் குறிப்பு.

### ௪. ஆண்டவனைப் பணிதலால் சொரூப அடைவு

(வெண்பா)

17. எழுதவொண்ணாத வெழில்சேர் கழலைத்
தொழுதெழலா லார்வமெழத் தோய்ந்தேன்—பழுத
போதசொரூபவருட் பூரணமா வென்னிதயப் [கல்சற்
போதலர்ந்த வாழ்க்கைப் பொலிவு.

ஆர்வமெழத் தொழுதெழலால் எனக் கூட்டுக;
ஆர்வம் — பேரன்பு.

### ௫. ஆண்டவனைப் பாடிப் பெற்ற பரிசு

(கலி விருத்தம்)

18. கூடக் கிடைத்த குருமணியைச் செந்தமிழாற்
பாடக் கிடைத்தவருட் பாக்கியத்தாற் பாதமுடி
சூடக் கிடைத்துநான் சோபிக்கத் துன்றியது
நீடக் கிளர்சொருப ஞேயப் பெரும்பதமே.

குறிப்பு:— நீடத் துன்றியது எனக் கூட்டுக;
நீட - சாசுவதமாக.

(வெண்பா)

19. இன்பவருள் வாழ்வா யிதயத் திருந்தொளிர் மெய்
யன்புவடி வானவென் னாண்டவன்சீர்—துன்பமயல்
பற்றாத மோனவருட் பார்வையாற் கற்றறிந்து
சொற்றேன் சுபம்படைத் தேன்.

## 4. கடவுட் காட்சி

(குறள்)

20. கண்டுகொண்ட சுத்தவருட் காட்சியெவ் வாற்றானுங்
கண்டனைசெய் யொண்ணாக் கழல்.

21. அந்தக் கழலே யடியேன் கிரந்திபந்தஞ்
சிந்தத் தெறித்த தகத்து.

22. கண்ட வருட்காட்சி, கண்ணே யொளிவெளியா
மண்டு சிவக்கே வலம்.

23. சிவக்கே வலத்திற் செறிந்தழிந்த சிந்தை
சிவக்கே வலமே தெரி.

(வெண்பா)

24. கல்விப் பயனுங் கடவுட் பெரும்பதமெய்ச்
செல்வமெனக் காரவுளந் தேக்கலால்—நல்குரவுச்
சிந்தையிலேன் மிக்க சிவானுபவக் காட்சியாற்
புந்திமகிழ்ந் துள்ளேன் பொலிந்து.

(கொச்சகக் கலிப்பா)

25. அங்கமகம் புத்தி யகன்றுங் கனுபவமா
எங்கும் பரந்த விறைவனை நான் கண்டுகொண்டேன்;
துங்கவருட் போத சொரூபப் பரவெளியாத்
தங்கு சதாசிவசாட் சாற்காரம் பின்னமன்றே.

குறிப்பு:- அனுபவமாக் கண்டு கொண்டேன் என வியையும்.

26. உண்டின் றுருவருவென் றென்றிரண் டன்றென்றே
மண்டுபல வாறு மதங்கள்வா தாடவூற்ற
வண்டனியற் பெற்றி யபரோட்ச மாவடியேன்
கண்டுகொண்டேன் சுத்தவருட் கைவல் லியத்திலே.

## 5. சந்நிதி மாட்சி

(கொச்சகக் கலிப்பா)

27. முட்டாத மோனகுரு மூர்த்தி * விலாசஞ்சூழ்
வட்டார முற்றார் வளம்படவாய்க் கப்பெறுவர்
துட்டாகங் காரமனச் சூதர் சுவைப்பதற்
கெட்டாக் கனியான நிட்டானு பூதியே.

* விலாசம் - அருள் விலாசம்.

28. சுவசொருப வுண்மை துலக்கும் பரம
சிவவொளியா வான்றவருட் சிற்பர மோனம்
தவழ விளங்குமிறை சந்நிதியில் ஞானத்
தவமெளிதின் முற்றத் தழைப்பர்சார்ந் தோரே.

29. என்றென்று முள்ள வியல்பான வுண்மையுணர்
வொன்றவெ ன்னுள்ளத் தொளிவெளியா நின்றபிரான்
முன்றி லடைந்தோர் முகப்பர் முகத்தலரு
நன்ருன சுத்தமெய்ஞ் ஞானு பூதியே.

## 6. ஸத்

### க. சத்தரிசன வாழ்வு

(குறள்)

30. சாதுவா வென்னைச் சரிப்பித்தான் யானென்னும்
பேதுகடிந் தாண்ட பிரான்.

31. சாதுவாத் தன்பாற் சரிக்கின்றேன் சுத்தவருட்
போதவாழ் வுள்ளம் பொலிந்து.

### உ. சத் உபாசனையும் பயனும்

(குறள்)

32. அறிவினு வுண்மையைநன் காராதித் தென்னிற்
பிறிவிலா வாழ்வுபெற் றேன்.

### ங. சற்போதம்

(குறள்)

33. பொருளாக வுள்ளதுசற் போதமே யாக
மருளற் றுழிந்தேன் மனத்து.

34. ஆண்டவன்சற் போத வருட்பதவாழ் வுற்றேனுனுக்
கீண்டவினி யாது மிலை.

35. பேதவிவ காரம் பிழைபடப்பொங் குற்றதுசற்
போத சொரூபப் புலம்.

36. பாசமயற் பார்வையறப் பற்றியது நானெனும்பா
மேசகல்சற் போத வியல்.

37. கலக்கமற்ற வுண்மைக் கடவுளியல் சாலத்
துலக்கமுற்ற தென்னுட் டொடர்ந்து.

(வெண்பா)

38. அப்பாலுக் கப்பாலா மந்த வதீதமெனக்
கிப்பாலுக் கிப்பா லியல்பேயாய்—எப்பாலுக்
கெப்பாலு மாக விருந்தொளிர்சற் போதவெளி
யொப்பாக வோர்ந்தே னுளத்து.

39. விருப்புலவா வின்ப விழுப்பதமா மோன
வருட்புலமே யென்சொருப மாக—மருட்புலமாம்
பேத மயக்கப் பிழைதீ ரனுபவசற்
போதமுறப் பெற்றேன் பொலிந்து.

## 7. சக்தி நிபாதம்

### க. சக்தி நிபாதச் சார்பு

(குறள்)

40. பரம சிவசொருபம் பற்றியதென் னுள்ளம்
பரமசிவ சத்தி பதிந்து.

41. மித்தையகல் வித்தை விளங்கியதென் னுள்ளுணர்விற்
சத்திநிபா தத்தாற் சதிர்த்து.

42. சிற்பரா சத்தியாற் றீர்ந்த துலகுருவக்
கற்பனை ஜாலக் கதை.

(கொச்சகக் கலிப்பா)

43. ஓர்க்குற் றுணர்வுருவா வுள்ள சொருபசிவ
நோக்குற் றருட்பரமா நுண்ணுணுகி நான்பரந்தேன்
மாக்குற்ற மான மனப்பா ழகந்தையறத்
தாக்குற்ற சுத்தசிவ சத்தித் திறத்தாலே.

44. தாக்கற் றியல்சொருபத் தத்துவமாந் தன்மையாற்
போக்குவரத் தற்றொளிர்சற் பூரணவாழ் வானவருட்
சேர்க்கையால் மோகச் செருக்கோ டகிலமுந்தீர்
மோக்கமே முற்றமுழுத் தன்னியல்பா மூண்டதே.

45. தெளிவார்ந்த வுண்மைத் தெரிவால் அகந்தைக்
களியார்ந்த மோகமனக் கற்பனைகெட் டுள்ளத்
திளிவில்பே ரின்ப வியல்பான சாந்தி
அளியனே னுர்ந்தே னருட்சத்தி யாலே.

46. அகப்பாழ் கடக்க வகத்திலருட் சத்தி
மிகப்பாய் வுறலால் விளங்கிற்று மெய்ம்மை
தொகப்பரந்த கற்பனை சொப்பனங்க ளெல்லாம்
இகப்பவெளி யாயிற் றெழிற்கே வலமே.

47. அதிநுட்ப மான வருள்வா லறிவாப்
பதிவுற்ற சத்தி நிபாதப் பரிசால்
எதிரப் படாத வியற்செம் பொருளாங்
கதியொட்ப மாகக் கலந்ததென் னுள்ளே.

48. ஆனந்த மோன வருட்சிற் பராசத்தி
ஊனந் தவிரவெனக் குள்ளத் தொளிர்கின்றாள்;
யானந்த மில்லா வியற்சிற் பரசொருப
வானந்தா னாக வளர்தலுற்றேன் வாழ்க்கையே.

49. ஆழ வகத்தி லருட்சத்தி பாய்ந்ததால்
ஏழையே னுள்ளத் தியற்பரமார்த் தந்துலங்கப்
பாழி லியன்ற பசாசரதத் தோற்றமாங்
கோழுலக வாழ்விற் குணசார மற்றதே.

50. யத்தன மின்றி யியல்பா விளங்குசிவ
சத்தி நிபாதவருட் சார்பால் விளைந்ததகத்
தொத்த சமத்துவங்கூ றுண்மைஞா னனுபவ
பத்தி, சொரூப பகவன் பதத்திலே.

51. சித்தத் தெளிவிற் சிவோகஞா னனுபவ
புத்தத் துவம்பொலியப் பொங்குசிவ சத்தியாற்
புத்தமுத வாழ்வு பொருத்தினன் பொன்னடியிற்
பொய்த்ததியா னென்னுமயற் புன்பிறவித் துன்பமே.

52. மாயா விலாச மகத்தா முருவெளியிற்
பேயா மகந்தைப் பிறப்பா லிறப்புற்றேன்;
தாயாம் பெருங்கருணைத் தத்துவமாஞ் சிற்சத்தி
தோயாநின் ருன்ம சொரூபவுயிர்ப் புற்றேனே.

53. பொய்யைமெய் யாகப் புலம்பு மகந்தைமனக்
*கையறிவாற் கற்பனையிற் காளாழ்ந் தழுங்கலுற்றேன்;
எய்யா திதயத் திருந்தொளிர்சிற் சத்தியருட்
செய்கையா லுய்ந்தேன் சிவசொரூபச் செப்பதத்தே.

* கையறிவு- சிற்றறிவு.

54. யாப்புற்ற பந்தவுணர் விற்றெழியச் செற்றொளி
தாய்ப்பரையா வுள்ள சதாசிவசிற் சத்தியால் [மெய்த்
வாய்ப்புற்ற சுத்தவருள் வைப்பிற் கடவுளியற்
காப்புற்ற வாழ்வு கலந்து மலிந்ததே.

55. கற்பனு ஜாலங் களையெல்லாந் தன்னிடத்தோர்
சொப்பனமாத் தோற்று சுதந்தரசிற் சத்தியாற்
கற்பனையின் முற்றக் கழன்றுசிவக் கேவலமாத்
தப்பிநா னுய்ந்தேன் சதாமோனச் செப்பதத்தே.

56. சூதங்க மானமனச் சுட்டறிவாங் கற்பனைப்பட்
டேதங் கடிதுழந்தேற் கீசனருட் சத்தியுற
யாதுங் கலக்கமில்பே ரின்பப் பரவுணர்வாற்
போதங் கடந்தசிவ பூரணவாழ் வுற்றதே.

குறிப்பு:— சந்தி - சத்தி நிபாதத்துக் காகுபெயர்.
போதம் - கற்பனு பேதங் காட்டி மருட்டும் மானு
பிமான மயக்க வடிவான ஜீவ போதம்.

57. புத்திக் கொளியாகப் பொங்கும் பரசொரூப
வித்தையா வென்னுள் விளங்கலாற் சிற்சத்தி
சித்தக் கலக்கச் செருக்கான ஜீவியப்பாழ்
பொய்த்தொழிய மோனவருட் பூரணவாழ் வெய்
[தியதே.

58. புத்திக் கலக்கமறப் பொங்குசிவ ஞானவருட்
சத்தித் திறத்தாற் சதிர்த்தவென் னுள்ளத்து
முத்தித் துலக்கஞ்சேர் மோனப் பரவெளியா
வொத்தசம நோக்க வுணர்வுயிர்ப்பா வுற்றதே.

59. மாயா விலாச மயக்கக் கனுநனவாப்
பேயா ணவத்தின் பிடிப்பாற் பிரமைகொண்டு
நாயா வுழன்று நலங்கெடநான் மாழ்குங்காற்
றுயான சுத்தவருட் சத்தியொளி சார்ந்ததே.

60. அதுவிதுவென் றேசுட்டி யாயப் படுஉம்
எதுவுமன்றி யுள்ளத் திருந்தொளிரவ் விஞ்சைப்
பொதுவெளியா மோனப் *புரணமா வுள்ளேன்
பதிதலுற்ற வாண்டான் பரங்கருணை யாலே.

*புரணம் — ஒளி, விளக்கம்.

61. தற்பரமாத் தங்குசிவத் தன்மையே யென்னுருவாச்
சிற்பரா சத்தித் திறத்தால் விளங்கலாற்
புற்புதமே போலப் புலப்படுஜீ வத்துவப்பொய்க்
கற்பனை மோகக் கலக்கங் கழன்றதே.

62. அலைப்புறு மோக வகந்தையேன் மாட்டுத்
தலைப்படு தன்னருட் சத்தித் திறத்தால்
உலப்பிலா வுண்மையா வுள்ள சொரூபக்
கலப்பிலே வாழ்வின் கனமாண்புற் றேனே.

63. தொன்றுதொட்ட வாழ்வு சொரூபமா வுள்ளத்து
மன்ற விளங்க மடுத்தவருட் சத்தியாற்
பொன்ற வழிந்ததகங் காரமனப் பூசலாக்
கன்றியவெம் பாசக் கலக்கமாங் கற்பனையே.

64. அனகவருட் சத்தி யழுந்தலால் யானென்
றுனியுழன்ற பாழ்ம்பே யுடற்செருக்கு மாள
இனையதென வொண்ணு வியற்சிற் பரவாழ்
வெனதியல்பா வுள்ளத் தெழுந்ததுதான் றனே.

குறிப்பு:—அழுத்தல் - பதிதல்; உனி (உன்னி) - முனைத்தெழுந்து. அழுத்தலால் எனவும் பாடம்.

65. நெக்குருகு மன்பிலா நீசனே னெஞ்சத்திற்
புக்கவருட் சத்தியாற் போதானு பூதியா
ஒக்க வொளிர்சொருப வுண்மையிலே நானெனும்
[பாழ்ம்
பொக்கமனக் கற்பனையின் பொல்லாங் கொழிந்ததே.

66. அற்பனு மென்னைநன் காண்டுகொண்ட சுத்தவருட்
சிற்பரா சத்தியாற் சிச்சடம்பே தித்தலாற்
கற்பனு மோகக் கலக்கங் கழன்றெழியத்
தற்பரவாழ் வான சதாமுத்தி சார்ந்ததே.

67. நீக்கமற்ற வுண்மை நிலையா வொளிர்சொருப
நோக்கமே யாக்கமாத் தேக்கவென் னுள்ளத்துத்
தாக்கலுற்ற சுத்தவருட் சத்தியால் யானெனும்
மூர்க்க வகப்பேய் முனைப்பற் றெழிந்ததே [பொய்ம்

68. செத்துப் பிறந்துமனக் கற்பனையிற் சீரழிந்தேற்
கத்தனருட் சத்தி யகங்கிளர்ந்தாங் கென்னுருவு
சுத்தப் பரசிவமாத் தோயத் துலங்கலால்
மத்தவகப் பேய்க்கலக்க மையாப் பகன்றேதே.

69. பொய்த்தத் துவங்களின் பொக்கப் புணர்ப்பான
சித்தக் கலக்கத் தெருமரல்விட் டுள்ளத்திற்
புத்தத் துவம்பொருந்தப் பொங்குகுரு நாதனருட்
சத்தித் திறத்தாற் சதிர்த்தேன் சதாசிவத்தே.

70. அர்த்திப் பதற்குமற் றன்னியமில் கைவல்ய
முத்திப் பரமா முழுமுதல்வாழ் வுள்ளுணர்விற்
சித்திப்ப தாகத் திருவருட்கண் ணேக்குசிவ
சத்தித் திறத்தாற் சதிர்த்தேன் சதாசிவமே.

71. என்னையடிக் காண்ட விறைவனுக்குத் தொண்டு
கன்னியமல் லாதசுத் தான்மசொரூபமா [பட்டேற்
மன்னியசற் போத மகத்துவமென் னுள்ளத்துத்
தன்னிழப்பா மோனவருட் சார்பில் விளைந்ததே.
குறிப்பு:—அருட்சார்பு-சத்தி நிபாதம்.

72. சுத்தவறி வான சொரூபமா வுள்ளத்து
மத்தமனக் கற்பனையை மாற்றினுன் சுத்தவருட்
சத்திநிபா தத்தாற் சதிர்த்தேன் உபசாந்தப்
புத்தமுத போகமாப் பொங்கவென் னுள்ளுணர்வே.

73. உய்த்துணர்வில் லாதபா மூத்தையகப் பேய்மனத்
கத்தனருட் சத்தி யகங்கிளரச் சேர்ந்தாங்கு [தேற்
சுத்தப் பரசிவத்திற் சொக்கலுற்ற வுள்ளுணர்வாற்
சித்தக் கலக்கமறச் சிற்பரவாழ் வொன்றியதே.

74. முற்படயா தோன்றும் முயன்றிலா மூர்க்கனேன்
சிற்பரமா மோனந் தெளிதலுற்றேன், சிச்சடப்பாழ்ங்
கற்பனை மோகவகங் காரமறக் கண்டவென்
னப்பனருட் சத்தி யகம்பாய்ந்த வாற்றாலே.

75. ககனமா வெங்குங் கலந்த சிவத்தைத்
தொகவே யதுவென் சொரூபமே யாக
மிகவே யுளத்தில் விளங்கவே கண்டேன்
பகவனருட் சத்தி பதிந்தவாற் றாலே.

76. உய்த்துணர்வில் லாதபா மூத்தைமடப் பொல்லேற்கு
வித்தகன்சிற் சத்தி விளைதலா லுள்ளத்திற்
சித்தமல மான செருக்கறவுட் பொங்கியது
சுத்தவறி வான சொரூபானு பூதியே.

77. பிதிராத முற்றமுழுப் பெற்றிசே ருண்மைச்
சதிராள ஞான தயாபரன்சிற் சத்தி
பதிவா லிதயத்திற் பாச மயக்கச்
சதிசே ரவிச்சையறத் தப்பியதென் மாட்டே.

குறிப்பு:—அறத்தப்பியது - அறவே தப்பியது.

78. சொற்பனமே சாக்கிரம்போற் சுட்டறிவான் மோகித்
கற்பனையூ டாழ்ந்து கலங்கலுற்றே னுள்ளத்திற் [துக்
சிற்பரஞ் சோதித் திறத்தால் விளங்கியது
கற்பதற்கொன் றில்லாக் கடவுட்கை வல்லியமே.

79. உளைந்துலகச் சேற்றி லுழன்றிடா தென்பால்
விளைந்தவருட் சத்தியால் வீட்டுணர்வு பொங்கத்
தெளிந்த சொரூபவருட் செல்வமென் னுள்ளத்
தளைந்திடவே யார்ந்தே னமுதவியல் வாழ்வே.

## உ. சக்தி நிபாதமும் பயனும்

(வெண்பா)

80. அற்புதமா மோன வருட்சிற் பராசத்தி
நிற்பதா லன்புறவென் னெஞ்சகத்தே—கற்பனைசேர்
வஞ்சக் கலக்கமன மாயக்கூத் தானசதி
துஞ்சித் தொலைந்தது காண்.

(கொச்சகக் கலிப்பா)

81. கற்பனை முற்றக் கழன்றொழியக் கண்டவருட்
சிற்பரா சத்தித் திறத்தாலே நுண்ணுணுகித்
தற்பரமாத் தங்கு சமாதியிலே யாழ்ந்தமனத்
தற்பமுமின் றாக வழிந்ததகப் பேய்முனைப்பே.

82. முற்றவமோ சற்றுமில்லா மூர்க்கப் பதடியேற்
கற்றமறச் செற்றென்னை யாண்டவருட் சத்தியால்
இற்றெனவொண் ணாத வியற்பரத்து நானதுவா
முற்றியது கைவல்ய மோனானு பூதியே.

83. தோன்றாத் துணையாகத் தொன்றே யிதயத்துத்
தான்றானா வுள்ளவருட் சத்தியொளி பாய்தலான்
மான்றவகங் கார மயக்கமனக் கற்பனைதீர்
வான்றானா மோன வளங்கிளர்வாழ் வுற்றதே.

## 8. சிவம்

### க. சிவ ரமணம்

(குறள்)

84. அறிவிலே யென்னையணைந் தாண்டான் முயக்கச்
செறிவிலே கண்டேன் சிவம்.

### உ. சிவ பதம்

(கொச்சகக் கலிப்பா)

85. உண்மை யுணர்வா முபசாந்த போகமே
வண்மைசேர் வாழ்வா வளரத் திளைத்தலால்
எண்மைசேர் துச்சப்பா ழேடணையின் மாழ்கலின்
[றித்
திண்மைசேர் சுத்தசிவச் செம்பதஞ்சேர் வுற்றதே.

### ங. சிவ போகம்

(வெண்பா)

86. மறதிதீர் சுத்தவருள் வாலறிவாப் பொங்கு
முறுதிசேர் தாணுவா வுள்ளோன்—மறதியா
மோகக் கலக்கமரு மோன சொருபசிவ
போகமாம் புந்திப் புலத்து.

## ச. சிவ போதம்

(குறள்)

87. கருமவடி வான கலக்கமறக் கண்டேன்
பரமசிவ ஞானப் பதம்.

88. புத்தியிலே பொங்குசிவ போதமே சுத்தவருள்
வித்தையா மீக்கூர் வது.

(வெண்பா)

89. அருளா லடைந்த வமைதிசேர் சுத்தத்
தெருளாற் சிவோகமாச் சேர்ந்தேன்—இருள்சேர்ந்த
சித்தக் கலக்கமாஞ் சீவமதி யற்றசிவ
புத்தத் துவமுட் பொலிந்து.

## ரு. சிவ மாதல்

(வெண்பா)

90. ஞானவருட் பத்தி நலஞ்சான்ற சாந்தியெனக்
கூனமற வுள்ளத் தொளிர்தலாற்—றீனமனப்
பாசபந்த மோகப் படர்சே ரகந்தையற
வோர்சிவந்தா ளுயிற் றுணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

91. சிவத்தியலே யான் திருவருளே கண்ணுச்
சிவத்தியல்காண் குற்றுச் சிவவடிவே யானேன்
சிவத்துருவு நம்மாற் றெரிபவற்றோன் றன்று
சிவத்திறும்வே றுகத் திரிபுடியோன் றின்றே.

92. அறிவுமடம் பட்டவெனக் கான்ம சொரூப
வறிவு விளங்கலுற்ற வாற்றால் அயற்சுட்
டறிவுகளு வாவொழிய ஆன்றமைந்த மோனச்
செறிவுசிவ மாகத் திளைத்தலுற்ற வாறே.

### சு. சிவத்தியானமும் பயனும்

(குறள்)

93. சிவத்தே தெளிந்த தியானக் கிளர்வால்
உவத்தலுற்ற தென்னுள் ளுணர்வு.

### எ. சதாசிவ மாட்சி

(வெண்பா)

94. அருட்பத்தி யாலே யடைந்த தெனக்கு
மருட்கலக்க மற்றபெரு மாட்சி—இருட்குலங்கெட்
டான்ற வருட்பே ரமுதவெளி யாகவளஞ்
சான்ற சதாசிவமாஞ் சால்பு.

## 9. அருள்

### க. அருட் பதம்

(வெண்பா)

95. தாழ்வே யிலாதபரந் தாமமெனக் கான்றபெரு
வாழ்வா வொளிர்சொருப வைபவமே—மாழ்கா
தயற்பதங்க ளூடே யறிவுண்மை யாந்தன்
னியற்பதங்கண் டேமமுற் றேன்.

### உ. அருட்பத வாழ்வு

(குறள்)

96. வள்ளலருட் செம்பதத்தில் வாழ்தலால், உண்மைசே
ருள்ளமே யாயிற் றுணர்வு.

(வெண்பா)

97. அகந்தையற்ற வாழ்வே யருட்பரவாழ் வாக
வுகந்தருளிச் செய்தா னுடையான்—அகந்தை
யுருவாஞ் சடப்பற் றொழிந்த வகஞ்சிற்
பரமா வுளத்திற் பதித்து.

## ௩. அருளடைவு

(கொச்சகக் கலிப்பா)

98. மயற்படுவெம் பாச மனக்கலக்கம் பேர
நயப்புறுபே ரின்பமா நண்ணியதென் னுள்ளத்
தியற்பரமா மோன விறைவனருள், சீவச்
செயற்படுமோ காணவப்பேய்ச் சேட்டையறச்
[செற்றே.

## ௪. அருள் வெற்றி

(குறள்)

99. ஒன்றியா வூன்று முரன்சால் சொரூபவருள்
வென்றியே யென்மெய் விறல்.

100. மிக்க சொரூபவருள் வெற்றியாற் சிச்சடக்கட்
டொக்கவிடு பட்ட துளத்து.

101. விறுசேர் சுத்தவருள் வெற்றியா லென்னுயிரை
தேறவொளிர் வித்தான் சிவத்து.

(வெண்பா)

102. வடிவாக நிற்றலால் வள்ளற் பிரானுக்
கடியேன் மறப்புநினைப் பற்றேன்—முடிவாக
வென்றுமொன்று வுள்ள வியற்கை நலம் பொங்ககமா
நின்றவென்றி தானே நிலை.

103. நின்று நிகழ்வதொரே ஞேயமாம் போதவருள்
வென்றியன்றி யென்மனத்தில் வேறில்லை—துன்றிநய
மன்றகமா வைகி மனத்தை வசீகரிக்கும்
குன்றமாஞ் சோதிக் குலா.

(கொச்சகக் கலிப்பா)

104. குன்றே யனையகொடுங் குற்றங் குணமாக
நன்றே நயந்தாண்ட ஞான குருநாதன்
தொன்றேயென் னுருபிராத் தொக்க சொரூபவருள்
வென்றியென் னுள்ளத்து மேன்மேல் விளங்கியதே.

## ௩. அருட்பேறு

(குறள்)

105. உளைந்துலகப் பாழி லுழன்று வருந்தா
தளைந்தது நல் லாண்டா னருள்.

106. நேரவொண் ணுதசிவச் சிற்பரமென் னுள்ளுணர்வா
வார்தலுற்ற தாண்டா னருள்.

107. நமோராம ணுயவென நள்ளலுற்றே னுள்ளத்
தமோகமாய் பொங்கிற் றருள்.

108. மயலற் றிடவகத்து வாலறிவா வைகிற்
றயலற்ற வாண்டா னருள்.

109. பெட்புறுசற் போதப் பிரானருளே நானடைந்த
வொட்பதுட்ப வுண்மை யுணர்வு.

(வெண்பா)

110. உள்ளத் தொளிவிளக்கா மும்பரா னிம்பருயிர்க்
கள்ளக் கலக்கமறு கண்ணுனன்—வள்ளற்
பெருமான் குருரமணன் பிச்சையா லேழை
பெருமா வளவனு னேன்.

111. பன்னியபொன் னுதியபற் பல்பொருளின் சார்புமற்ற
பின்னையென் னுள்ளமணிப் பெட்டகத்துள்—என்னை
காண்டா னருட்பாத தூளி யரும்பொருளா [யடிக்
கூண்டலா லில்லேன் குறை.

## ௪. அருட் பேறடைவு

(கொச்சகக் கலிப்பா)

112. விளங்குறுமெய்ஞ் ஞான விசாரத்தால் வஞ்சக்
களங்கவகங் காரங் கரந்தொழியத் தானு
வுளங்கிளரப் பொங்கு முபசாந்த போக
வளங்கலந்த வாழ்வா மலர்ந்ததருட் பேறே.

## எ. அருட் பூரணம்

(கொச்சகக் கலிப்பா)

113. யானெனதொன் றின்றி எலாமோர் முழுமுதலாந்
தான்றனதே யாகத் தலைப்பட்ட மெய்யுணர்வால்
யானெனதென் கின்றவும்அவ் விண்டவருட் பூரண
மோனவியல் பாக முயங்கிற் றனுபவமே. [மாம்

114. சொல்லாத மோனவருட் சொல்லால் அகங்கிளரக்
கல்லாதே கற்குறுமெய்க் கல்வியறி வூட்டினன்
பொல்லா வவிச்சையறப் பொங்கியஞா னனுபவத்
தெல்லாந்தா னவிளங்கிற் றேகபரி பூரணமே.

115. ஊக்கமெனக் கொன்றினுமே யில்லை உளத்திலெனக்
கேக்கமுமற் றில்லை இதயத் தியல்சிவப்பே
ராக்கமாப் பொங்கு மனுபவத்தால் ஊசிமுனை
நீக்கமற வெங்கு(ம்) நிறைந்ததருட் பூரணமே.

116. இருள்சே ரிருவினைக் கீடா விளைந்த
மருள்சேர் பிறவி மயக்கக் கனவென்
றருள்சே ரனுபவத் தேற்றமுண் டாகப்
பொருளா வியன்றது பூரணந் தானே.

## அ. அருட் ஜோதி

(வெண்பா)

117. ஆண்டா னருள்வந் தடைதலெவ்வா றென்றடியேன்
பூண்டகவல் சற்றுமறப் புண்ணியத்தால்—ஈண்டு
நலக்கவென்னை யாண்டகுரு நாதனருட் சோதி
இலக்கமுற்ற துள்ளத் தினிது.

118. ஆவரிக்கும் மோக வனர்த்தமற ஞானவருட்
சீர்வரிக்க லூற்றவென் சித்தத்தே—காவிரிக்கண்
வெள்ளமே போல விசுத்தவருட் சோதிமயத்
தெள்ளமுதம் பாய்ந்தது சீர்த்து.

## ௬. அருட் செல்வம்

(வெண்பா)

119. அவிர்மெய் யகமாக வாண்டான் பதமே
தவமுயர்ந்த தானந் தருமம்—சிவமாக
என்று மெனக்குப்பே ரின்பஞ் சுரப்பதாய்த்
தொன்றுதொட் டென்றுமுள்ள சொத்து.

## ௰. அருள் வியப்பு

(குறள்)

120. உண்டுண் டுறங்கியவென் னூத்தைமனத் தொட்ப
விண்டொளிர்வ தென்ன வியப்பு! [வருள்

121. அனந்தசிவத் தன்மையா லாண்டா னருளே
நினைந்துருக வூற்றதென் னெஞ்சு.

(வெண்பா)

122. நிட்டையே தன்னியல்பா நீடுசிவக் கேவலமெய்த்
திட்டையா மோனவருட் சிற்பதத்தே—பட்டியாஞ்
சித்தக் கலக்கமறச் சேர்த்தகுரு பாதவருள்
வித்தகத்தை யென்வியக் கேன்.

123. வெட்டவெளி யாக விளங்குசிவம் பட்டிமனப்
பிட்டனுளம் புக்குப் பிறங்கலுறச்—சுட்டவருட்
சித்திரமா மெய்ஞ்ஞான சித்தி திருத்தினன்
வித்தகமெய் வித்தை யிது.

124. மனத்திற் பெருமிதமா வாய்க்கப்பெற் றுய்ந்தேன்
எனைத்துங் குணமொன் றிலாதேன்—அனைத்துக்கும்
மீதான மாக விளங்குங் குருரமண
பாதார விந்தப் பதம்.

125. மறவியற மாற்றும் மருந்தான ஞானக்
குறிவளர்செங் கையன் குகேசன்—அறிவறியாப்
பேதையா மென்பாற் பிரம்ம சொரூபவருட்
சோதியா யூண்டதென்சொல் கேன்.

126. மருட்சுட் டறிவின் மயங்கலே யன்றி
யருட்சிற் பரத்துக்கு நானூர்—விருப்புற்
றருட்பரனே யென்னை யடிக்காண்டு கொண்டான்
மருட்சுட் டறிவை மறுத்து.

127. நிற்றலா யுண்மை நிலையிலே யாண்டவன்றுட்
பற்றிலே யூறிப் பழுத்தவுயிர்—கற்றிலா
மூடனே னுள்ளத்தே முற்றலுற்ற தந்தநிலை
ஈடிலா வீச னருள்.

128 நல்லசிவ மாக நடுநின்ற வாண்டவனிங்
கெல்லவர்க்குந் தானினிய னென்றாலும்—நல்லவராம்
பல்லவர்தம் முள்ளுமிகப் பட்சம்பொல் லாத
புல்லியது காணற் புதம். [வெண்பாற்

129. சொக்கத் துரிய சொரூப வொளியாலே
பொக்க மயக்கமறப் புந்தியிலே—மிக்க
வருமையா வாண்டா னருட்சித் திரத்தின்
பெருமைநான் பேசப் பெரிது.

130. சுத்தவருட் பார சொருபநிலை வித்தகரா
மெய்த்தவருக் கன்றி விளைந்திடுமோ—மத்தமனப்
பொல்லேனுக் கத்தகுசற் போதானு பூதிநிலை
வல்லே விளைந்ததென்ன வாய்ப்பு.

131. சிவசா தனையொன்றுஞ் செய்தறியேன் சுத்த
சிவமா வொளிர்சொருபந் தேர்ந்தேன்—சிவமயமா
மோனந் தெளிய முனீந்திரன்சற் போதவொளி
யானந்த மாயிற் றகத்து.

132. *சிந்தையா ளுண்டவருட் செல்வ னினிநமக்குச்
†சிந்தையில்லை யென்றுநான் செம்மாந்தேன்—அந்
[தரமாச்
*சிந்தையற வென்னைச் சிதைத்தா னிதுபோலுஞ்
†சிந்தையற வாழுந் திறன்.

* சிந்தை – மனம்
† சிந்தை – கவலை

133. சித்தசுத்தி யின்றித் தெரிவரிய சுத்தவருட்
பத்திச் சுவைததும்பு பாதவொளி—மத்தசித்தப்
பொய்யனே னுள்ளே பொருந்த லெனையாண்ட
மெய்யனருட் பார்வை விளைவு.

134. கள்ளமனக் காட்சிவெறுங் கட்டுக் கதையாக
வுள்ளக் கதவ முடைத்தெறிந்தான்—கள்ளக்
கதவ முடைத்தெறிந்த காட்சியான் மோன
மதவலியார் சாற்றவல் லார்.

135. அருள்வெளியா வெங்கு மளைந்தா னகச்செம்
பொருள்சிவமாப் பொங்கும் புராணன்—பொருள் [போலும்
புந்திமனஞ் சிந்தை பொருளலவாய் மங்கவொளிர்
விந்தையைநா னென்வியக் கேன்.

136. சாந்திமய மான சதாசார புத்தியா
லோர்ந்துபா சித்த வுணர்வுடைமை—வாய்ந்தசி
ரத்தகவே சார்ந்திவ் வறிவிலாப் பொய்யனுமெய்ப்
புத்திவழி பாடியற்ற லென்.

(கொச்சகக் கலிப்பா)

137. அலைப்புற் றகப்பே யறிவால் உலக
வலைப்பட் டுழன்றமனே மாயமற, உள்ளத்
துலைப்பிற்சற் போத வொளிவெளியா வென்னைத்
தலைப்பெய் தருளினான் சால்புரைக்கற் பாற்றே.

138. அருளறிவே வல்லாண்என் னாருயிருக் கென்றால்
மருளறிவை ஏனோ மதித்துக் கலங்கல்
வெருளுறுபொய்ம் மாயமனே வேகமற உண்மைத்
தெருளுறுவித் தாண்டசிவ தேஜனரு ளுண்டே.

139. உள்ளத் தொளிசே ருபசாந்த மோனவுணர்
வுள்ளப் படாப்பொருளை யுள்ளும் பரபத்தி
கள்ளக் களிசேர் கடியேன் கருத்திலந்தத்
தெள்ளத் தெளிந்தவருட் சீர்மை விளைந்ததென்னே.

140. பின்னப் படாதசிவப் பேற்றுக் குபாயமா
என்னைப் பொறுத்தவரை யாளென் றியற்றிலேன்
என்னப்பன் பார்வையா லெய்திற் றிதயத்து
நன்னர்ப் பரசொருப ஞானானு பூதியே.

141. அளவறிந்தார்க் கேனும் அகந்தையெறா மோன
வுளவறிந்தா லன்றியுளத் தோரவொண்ணு மெய்யன்
களவகலா மோகக் கடியேன்பாற் சற்றும்
பிளவறியாப் பெற்றி பிறங்கலுற்ற தென்னே.

142. உடையா னருட்பேற்றுக் கூத்தையகப் பேயா
மடியனேன் சற்று மருகதையில் லாதேன்
தடையான பாசந் தகர்ந்தொழிய நோக்கிக்
கடையேனை யாண்டவருட் காருண்ய மென்னே.

143. கண்ணுக்குக் கண்ணாக வுள்ளவருட் கண்மணியே
விண்ணுக்கும் விண்ணாக வுள்ளவருள் விண்மணியா
அண்ணிக்க லுற்றஞா னானுபவ வாழ்வகத்து
நண்ணக் கிடைத்தகுரு நாதனருட் பேறென்னே.

குறிப்பு:- கண்மணி என்பது ஆன்மாவையும், விண்மணி என்பது பிரம்மத்தையும் குறிப்பன.

144. இதம்படுமெய் யன்பர் இதயம்பே ரின்ப
முதம் பெருக நோக்கும் முனீந்திரன்கண் ணேக்
[கால்
மதம்படுவெம் பாழகப்பேய் மாண்டொழிய மூண்ட
சிதம்பரவாழ் வானவருட் சீர்மையின்மாண்
[பென்னே.

145. *தீண்டலரு யோகத் தெளிவான சிற்பரவாழ்
வீண்டலுற வுள்ளத் தியல்பாக வாண்டவனைக்
காண்டலுமே மோனவியற் கைவல்ய மாட்சிபெற்
[றேன்
ஆண்டவன்மெய்ஞ் ஞான வருள்வெற்றி சாற்றரிதே.

*தீண்டலரு யோகம்-அஸ்பரிசயோகம், ஞானயோகம்

146. ஞான சொரூபகுரு நாதனரு ளென்வியக்கேன்
தான தருமந் தவநியமஞ் சற்றுமில்லா
ஈன வெளியேற் கிதய வருள்வெளியா
மோனவுணர் வானபர முத்திசித் தித்ததே.

147. தன்னே ரிலாத சுதாசிவமாந் தன்மையாற்
பொன்னே யனேயவருட் புண்ணியன்பா லுள்ளூர
நன்னேய மான நயப்பிலா வென்னேயுவந்
தென்னே யருட்பெருமை யின்பமுற வாண்டதுவே.

148. அறிவுக் கறிவான வம்மா னடியோ
முறவுக் குகந்த வுடையான் அகந்தை
யிறவிற் சிறக்க வெறுதுண்மை தானு
வறிவிற் கலந்தவா றச்சோவச் சோவே.

149. அச்சோவச் சோவென் றதிசயிக்கத் தன்னடியேற்
கெச்சோர்வு மின்றியகத் தின்பக் கிளர்ச்சியுறத்
தற்சோரஞ் செய்தவகப் பேய்ச்சதியின் சற்பனையைத்
தற்சோ தனேயாற் சதிர்படப்போய்ப் பித்தானே.

150. சோதனேயா லன்றித் துலங்கவுரு சொச்சொருப
சாதனேயென் னுள்ளத்துத் தானேசா தித்தவித்தான்
ஆதலினு லென்க வுயாச மாகவருட்
போதனேயி னுண்மைப் புலன்கண்கூ டாயினதே.

151. தன்னே ரிலாதபரந் தாமவாழ் வென்னிதயத்
தின்னே யளித்தா னிமைப்பொழுதிற் கண்ணுேக் [கால்;
என்னே *யிருந்தாங் கருட்சிறப்பென் றெண்ணி [யெண்ணி
நன்னேய முற்றேன்மெய்ஞ் ஞான சொரூபனுக்கே.

*இருந்தாங்கு - உள்ளபடி

152. பெம்மான்பா லன்புப் பெருக்கமெனக் குண்டாகப்
பெம்மா னருளியதோர் பேற்றையே யெண்ணி [யெண்ணிப்
பெம்மானுக் கேழேழ் பிறப்புந்தொண் டாற்று [கின்றேன்;
பெம்மான் கருத்தென்னேப் பேய்ப்பிடியாப் பற்றியதே.

153. நீலமனே பாவனை நீசப் புலத்தூடு
மாலுறவா லேங்கி மயங்கியவென் னுள்ளத்தில்
வாலறிவா வுள்ளவருள் வாழ்வு மடுத்ததேல்
வாலறிவா வுள்ளவருள் வள்ளலருள் காரணமே.

154. பசுத்துவமா மோகவகப் பாழிருளைச் சாடி
விசுத்தசிவக் கைவல் லியமா வகத்தில்
விசைத்தெழுந்த சுத்தவருள் விஞ்சைப் பிரான்சீர்
இசைத்திட நான் யாரென் கவித்திறன்றான் யாதே.

155. அளியனேன் யாதோ ரறிவுநூல் கல்லேன்;
வளியின் மனம்வைத்து வாசிநா னேட்டேன்;
வெளியாக வுண்மை விளங்கவென் னுள்ளத்
தொளியாக வுள்ள துடையா னருளே.

156. உறையுளா வுள்ளத் தொளிர்சொருப மான
விறைவ னருளுக் கிலக்கானேன் உண்மை
நிறைவான சுத்தமெய்ஞ் ஞேயநிலை பெற்றேன்
முறைப்படவெந் நோன்பும் முயன்றிடா தேனே.

157. நேரியதம் முண்மை நிலைநிற்பார் ஊடுருவுங்
கூரியமெய்ஞ் ஞானக் குறியாளர்; கூர்மையிலேற்
கோரியல்பா வுள்ளத் தொளிர்சொருப மோனவருள்
வீரியமெய் வாழ்வு விளைத்தான் குருமணியே.

158. வஞ்சவகங் கார மனோவேகங் கெட்டொழியச்
செஞ்செவே யாண்டவருட் செங்கணன் சேவடியில்
விஞ்சைசேர் வாழ்வா விளங்கலுற்ற மெய்யுணர்வு
தஞ்சனே னென்ன தவஞ்செய்தேன் சாரவே.

159. தக்கவா ருன்றோர்பாற் சாத்திரங்கற் றுத்தேர்ந்தாங்
கொற்கமுற வுள்ளத் துபாசனைசெய் யாதேற்குச்
சிற்குறியிற் பேராச் சிவயோகச் சீர்மைவளர்
தற்குறியா மோனநிலை சற்குருவாற் சார்ந்ததே.

160. மனோமயவாழ் வான மயக்கமற வுள்ளத்
திணைதயமாப் புக்க விறைவனருட் சீர்மை
சனதனமா வுள்ள சதாசிவமெய்ச் சால்பஃ
தெனவெடுத்துக் கூற வெணைத்துங்கூ டாதே.

161. மிண்டுசேர் மோக வெறிச்செருக்கால் வேறுபட்ட
முண்டனும் பாமரப்பாழ் மூர்க்கனே னுள்ளத்து
மண்டுசிவ போக மதுக்களிமீப் பொங்கவெனைத்
தொண்டனு வாண்டசிவச் சொக்கனருட் சித்திரமே.

162. பாழிலே யாழப் படிந்து கிடந்தேனுக்
கூழிதோ றாழியுளத் துற்றோ னுடனுக
வாழியோ வாழியருள் வாலறிவால் வஞ்சவிருட்
பாழை விழுங்கிப் பரமா விளங்கினனே.

163. யானறிந்த மட்டில்யா னெத்தவமுஞ் செய்திலேன்!
தீன மயக்கத் தியக்கச் செருக்கான
வூனமில்பே ரின்பவுணர் வோங்கலுற்றேன், மோன [வருள்
வானமா வென்னை வளைத்தபிரான் மாட்சியிலே.

164. பேரின்ப வாழ்வாப் பெருகியதாண் டான்கண்டேனுக்
காரம்ப னுமென் னகத்தென்ன வாச்சரியம்,
கூரம்பு போன்ற கொடுங்கண் ணியர்வலையிற்
சேரும் படிற்றொழுக்கச் சித்தையறத் தன்பாலே!

165. யானே தவஞ்செய்தேன் யானே பயன்பெற்றேன்;
தானேநா னுகத் தழைத்தொளிரக் கண்டவருட்
கோனே யெலாமாக் குலவு சொரூபமன்றி
நானேதுங் காணு நலந்துலங்கப் பெற்றேனே.

166. தெள்ளத் தெளிந்த சிவானுபவஞ் சேர்ந்திடவென்
கள்ளத்தை மாற்றிக் கடவுட்கை வல்லியமா
வுள்ளத்திற் பொங்கு முடையான் பெருங்கருணை
வெள்ளத்தால் வையம் வியாபிக்கப் பெற்றதே.

167. கற்பனையூ டாழ்ந்து கலங்கி மலங்கலுற்ற
வற்பனேற் கான்டா னருள்வினைந்த வாறென்கொல்
சிற்பரமா வெல்லாஞ் செழித்தொளிர வுள்ளத்துத்
தற்பரமெய்ஞ் ஞான சமாதிதலைப் பட்டதே.

168. என்னே ரிலாத விழிசினேன் பாலிரங்கித்
தன்னே ரிலாத சதாசா ரியரமணன்
பொன்னே யனையவருட் போதம் புகட்டினான்
என்னே யவனருட்சீர் யாரிசைக்க வல்லாரே.

169. இருள்சே ருலகியலில் யானெனதென் றாழ்ந்த
மருளனேன் பாச மயக்கமற வுண்மைப்
பொருளான ஞானனு பூதியளித் தாண்டான்;
அருளாழி யானவென் னம்மானன் பென்னே.

170. மித்தைசேர் மாயா விலாசத்தே நானெனதென்
றெய்த்தொழிந்த பேயேனுக் கென்னவிந்தை நானறி
சுத்த வொளிவெளியாத் துன்றுமோ னனுபவ [யேன்
முத்தியுணர் வாவகத்து மூண்டதாண் டானருளே.

171. நுண்மைசேர் கைவல்ய நோக்கங் கிளரவகத்
துண்மையா லென்னை யுடையபிரான் செய்தவருள்
வண்மையையென் னென்று வழுத்துகேன் அத்
[திறத்தா
லண்மையிலு மண்மையெனக் காயிற் றரும்பரமே.

172. ஆனி யிலாத வருட்சிற் பரவெளியாத்
தானியல்வாழ் வான சதாமுத்தித் தற்பதத்தில்
யானியல வென்னை யிதயத் தறிவொளியா
யானறச்செற் றுண்ட விறைவன் கருணையென்னே.

173. ஏனையோ ரென்பா லிறையியல்கேட் கின்றுருக்
கியானெதுவுங் கூறுங்கா லென்னறிவைச் செற்ற
[கத்துத்
தானொளிர்மெய்ஞ் ஞான சமாதியிலே யாழ்த்தலுற்ற
கோனருளின் மாட்சிநான் கூறுந் தரமன்றே.

174. ஈண்ட வியப்பதெவ்வா றீசன் றிருவருளை
மூண்டபா ழாணவத்தே மூழ்கிக் கிடந்தேற்கு
மாண்டொழிய நானென்னும் மாணு வகந்தையகத்
தாண்டவனு லார்ந்ததுகத் தான்ம சொரூபமே.

175. சொற்பனமே ஜாக்கிரமாத் தோற்றுவிக்கும் [வாசனையாற்
கற்பனையே யுண்மையாக் கண்டுழல்கின் றேனுக்குத்
தற்பரமாஞ் சிற்பரமெய்த் தத்துவஞா னுபவத்
துப்புரவா மோனந் துலங்கியதோர் விந்தையே.

176. பரமாக வுள்ளசிவ பத்தியின்மெய் உள்ளத்
துரமாக வுள்ள வுணர்வான மோனம்
தரமான பக்குவமோர் சற்றும்பற் றுத
மரமனையே னுள்ளத்தில் வாய்த்தவிந்தை யென்னே.

177. சச்சித்தா வுள்ள சதாசிவத்தை மெய்யன்போ
டிச்சித்தா ருள்ளம்பே ரின்பமெழப் பொங்குமென்பர்;
அர்ச்சித்தே னல்லே னருட்பதத்தை யென்னினுங் [கோட்
டுச்சித்தே ஞகவெனக் குள்ளுவகை யள்ளியதே.

178. ஆழத் துருவியகத் தாய்ந்தறிந்த நானல்லேன்
பாழுக்கப் பால்விளங்கும் பாரப் பரசிவமிவ்
வேழைத் தொழும்பனை நன் கீடேற்ற வெண்ணியகத்
தாழைத் திறந்திதயத் தற்பரத்தைக் காட்டியதே.

179. ஊழ்வே ரொழியவுளத் துள்ளமாத் தெள்ளவொளிர்
வாழ்வு சிவக்கே வல்மான தன்மையாற்
பாழ்வா தனைகள் பகற்கொள்ளை போயிற்றே
தாழ்வா மகந்தைமனச் சர்ப்பனைதீர் வுற்றதே.

180. மதத்துத் திரிந்தவுன் மத்தமனப் பேயேன்
சதிர்த்துத் தெளிந்தேன் சதாசிவத்தில்; யாதோர்
விதத்திலுமுள் ளத்தில் வியாகுலமின் றுன
பதத்துப் புரவு படைத்தியல்கின் றேனே.

181. உள்ளத்தே யூன்றி யுறையுமனத் தோருணர்வில்
வெள்ளத்தே ஞக விளைசொரூ பானுபவம்
கள்ளப் புலவுலகக் கற்பனையூ டாழ்மனத்தே
ளுள்ளுணர்விற் பற்றியதோர் சித்திரமுள்
[ளற்குரித்தே.

182. அளப்பரு கேவல மாந்தற் பரத்தை
இளப்பமா வெண்ணி யிகழ்ந்தநான் மிக்க
வளப்பமா வஃது மலர்ந்தாங் கறிவில்
விளர்ப்புற வெட்கினேன் விஞ்சை யருட்கே.

183. காண வொணுதவருட் காட்சியாங் கைவல்யம்
மாண விளங்குபர மாட்சி தலைப்படநான்
வேணவா வாகவருள் வேட்கைமீக் கூர்ந்ததன்றிப்
பேணிலேன் யாதோர் பிரயாச சாதனையே.

184. தேனு ரமுதவருட் சிற்பரமோ னுனுபவம்
வானுக வென்னை வளைத்ததொன்ரு, தன்னைமறந்
தியானென்று நான்மே லெழவொண்ணு தென்னை
தானு தழுத்திற் றதுவேநா ஞகவே. [யுளத்

185. மனத்தைத்தன் பாலே மடுக்குமா ருேரேன்
தனிக்கலுற்ற சாந்த சதாநிஷ்டை பெற்றேன்;
முனைக்கு மகந்தையற மூண்டகத்துத் தானு
வெனைத்தன் னிடத்தி லிருத்திற் றருளே.

186. மாயா விலாச மகத்துவத்திற் புத்திமருண்
டோயா துழன்றலுத்த வூத்தையகங் காரமடப்
பேயே னகத்திற் பிரம்ம சொரூபமெய்ந்
நேயானு பூதி நிகழ்வதருட் சித்திரமே.

187. கலமந்தி போலக் கலங்கு மனத்தால்
அலமந்த மோக வகப்பே யடியேன்
துலங்குசற் போத சொரூபானு பூதி
நலங்கலந்த வாழ்வகத்து நண்ணலுற்ற தென்னே

188. சிற்பரமாத் துன்று சிவத்திலே மோகமனக்
கற்பனையாத் தோன்று கனுவுலகிற் கற்பனைக்கண்
முற்படு நா னென்னு முனைப்பாலாழ்ந் தேற்கிதயத்
தற்புதமெய்ஞ் ஞான வருட்கதிகாண் குற்றதே.

189. உள்ளம் பரவசமா வுள்ளுமெய் யன்பரிடைக்
க ளப் போ திந்தவகங் காரக் கடியேனேற்
குள்ளன் பிலாத வுளத்திற்பே ரின்பவருள்
வெள்ளம் பரக்க விளைந்ததருட் சித்திரமே.

190. பேணக் கடவதொன் றும் பேணுது புன்புலத்தில்
வீணக் களியனு வேர்த்தமூன்றே னுக்கருளால்,
காணக் கடவசிவக் கைவல்ய வுண்மையா
மாணக் கிளர்சொருப வாழ்வகத்தில் வாய்த்ததே.

191. சற்றுஞ் சரியாதி சாதித் திலேனுக்கு
வெற்றவெளி யாக விளங்கு சொருபவருட்
பெற்றியா லானவகப் பேய்மானம் பேர்ந்தொழியப்
பற்றியது சுத்தப் பரமசிவப் பான்மையே.

192. உண்மையே வாழ்வாக வுள்ளத் தொளிர்சொருபத்
தெண்மையே தேறத் தெளிந்தியல்சீ வன்முத்தி;
நுண்மைசேர் தற்பரமெய்ந் நோக்கா வகங்கிளரவ்
வண்மைசேர் மாட்சி மலர்ந்ததருட் பாக்கியமே.

குறிப்பு:—தெண்மை - தெளிவு.

193. எத்தனே னுக வியன்றேன் பரமெண்ணேன்;
சுத்தவருள் வாலறிவாத் துன்று சொருபகதி,
உத்தமசற் பத்தி யுணர்வில்லா வூனமட
மத்தனேன் காண மடுத்ததென்ன விந்தையே.

194. மூடரினும் மூடன் முழுமூட னுவுலகத்
தேடனேன் மாழ்கி யிரங்குங்கா லென்னவிந்தை
தேடருமெய்ஞ் ஞானத் திருவருட்சத் தித்திறத்தால்
ஆடலசை வற்றமோ னுனுபவ மார்ந்ததே.

195. பந்த மயக்கமறப் பற்றியதோர் சுத்தவருள்
விந்தையையென் னென்று வியக்கேன்! பரமார்த்த
சொந்த சொரூபந் துரியப் பரவெளியா
முந்தையே யுள்ள முழுமுதலாக் காட்டியதே.

196. அத்தகநிற் குங்கூ ரறிவிலா மூடமனப்
பித்தனே னன்பிலாப் பேயனே னுள்ளத்தே
சுத்தவருட் பூரணமாத் துன்றும் பரமார்த்தப்
புத்தமுத மோனானு பூதி புணர்ந்ததென்னே.

197. தன்னிலே தானாத் தழைத்து விளங்குசிவப்
பொன்னிலே யானெனும்பொற் பூணான தன்மை [கெட்டுத்
துன்னினேன் சொந்த சொரூபவியல்; சிற்பரமா
மன்னியமோ னானுபவ வைபவமென் னென்பதே.

198. செய்யபரஞ் சோதிச் செழும்பதமே தேடுங்காற்
றுய்ய சொரூபமாத் துன்றுஞா னானுபவம்
பொய்யிலே யாழ்ந்தகொடும் புன்புலைநா யேனகத்து
மெய்யினுமெய் யாக விளைந்ததருள் விந்தையே.

199. என்னையே நானா ரெனத்தெரியா வேழைமையாற்
றுன்னுமனக் கற்பனா சொப்பனத்தா டாழ்ந்துழல்
பின்னமற்ற சுத்தப் பிரம்ம சொரூபமே [காற்
யென்னுருவா வுள்ளத் திலகலுற்ற தென்கொலோ.

200. அற்றமா மோக வகப்பா முணர்த்தமறச்
சற்றுமோர் சாதனையுஞ் சார்ந்திடேற் கெவ்வாறோ
நற்றவமா வுள்ளத்து நண்ணியசற் போதவருட்
பொற்பதமே வாழ்வாகப் பொங்கியது பூரணமே.

201. உற்பவமெங் கென்றுதன் னுண்மையையோர்ந் [துள்ளொடுங்கிக்
கற்பனா பேதங் களைக்கடந்த சுத்தவருட்
சிற்பரவாழ் வுள்ளந் திளைத்தவாற் சிந்தையற்றேன்
தற்பரமா வுள்ள சதாசிவசாந் தப்பதத்தே.

### கக. அருட் கவித்துவம்

(வெண்பா)

202. தவத்துருவா நின்ற சிவத்துவத்தா னென்றன்
கவித்துவத்தைத் தூண்டியசெங் கண்ணுல்—கவித்த
வுலகமயற் பாழை யுடற்றியெனை யாண்ட
தலைவன்றாள் சார்ந்த துணர்வு.

குறிப்பு:—'தலைப்பட்டாள் நங்கை தலைவன்றாளே' என்னும் அப்பர் திருத்தாண்டகம் ஈண்டுக் கருதற் பாலது.

203. நெஞ்சிற் கலந்தசிவ நின்மலச்செம் பொற்பாத
விஞ்சையா லன்பு விளைதலாற்—செஞ்சொற்
கவிதையெழச் சிந்தை கசிந்துருகிற் றின்பச்
சுவைதருசற் பத்தி சுரந்து.

### கஉ. அருட் சுதந்திரம்

(வெண்பா)

204. நிராதார மாமென் னிலையே யுலகுக்
கொராதார மாக வுறலால்—பராதீன
மாக வெதற்கு மடிமைப்பட் டென்னறிவு
சோக முறுவதன்று சோர்ந்து.

### கங. அருள் நிதி

(வெண்பா

205. எனக்கெனக்கென் றேங்கி யிரங்கு மகந்தை
மனக்கலக்க மானமிடி மாயத்—துனிக்கலறு
சிந்தைநிறை வானவருட் செல்வப் பெருநிதியாற்
புந்திநிறை வுற்றேன் பொலிந்து.

### கச. அருட் பரவசம்

(குறள்)

206. சிவசொருப. வாழ்வு திளைத்தலா லுள்ளத்
தவசமா நின்ற தறிவு.

குறிப்பு.—அவசம் - பரவசம்.

## 10. அருளலும் பயனும்

### அ. அருட் பார்வை

(குறள்)

207. பரமாக வுள்ளவருட் பார்வையின் கூர்மை
உரமாக வூன்றிற் றுளத்து.

208. உளத்திற் பதிந்த வுணர்வான வுண்மை
தளத்திற்கெல் லாமெய்த் தளம்.

(வெண்பா)

209. பரந்து விளங்குவதென் பாழ்மயக்கம் பாழாக்
கரந்தொழியக் கண்டவருட் கண்ணே—அரந்தையற
வுள்ளத் தியல்பா வொளிர்சொரு பானந்த
வெள்ளமா மோன விழி.

210. மயற்காட்சி யான மனேமயச்கட் டாம்பொய்
யயற்காட்சி யற்றே னகத்தே—இயற்காட்சி
யானபே ரின்ப வருட்சிற் பரவெளியா
வூனமறப் பெற்ற துணர்வு.

211. வாழ்க்கைப் புலமாக வண்மைசேர் மெய்ப்பதத்திற்
காழ்த்தலுறக் கண்டவருட் காட்சியாற்—பாழ்த்த
மனக்கலக்க மான மயக்கந் தெளிந்தாங்
கெனக்கிலக்க மாயிற் றியல்.

(கொச்சகக் கலிப்பா)

212. ஈன மயக்க வியற்கையால் யானிதுவென்
றூன வகந்தை யுருவா முனைத்தலற
வானமா வென்னை வளைத்துக்கொண் டாண்டவருட்
பான சொருபவியற் பார்வையகம் பற்றியதே.

213. பரசிவத்து மோனவருட் பார்வையென் னுள்ளத்
தொரசைவற் றுத் தன்மயமா வூன்றலாற் சைவப்
பரவசத்தில் யானென்னும் பாசமுனைப் பற்றுத்
துரியவெளி யாயிற்றென் சொந்த வடிவே.

214. ஆடு மகப்பே யறக்குலைய நெஞ்சத்து
நீடுசிவ பூரணமா நின்றவருட் பார்வையாற்
பீடுசேர் சுத்தப் பிரம்ம சொரூபவியல்
வீடு விளங்கிற் றகம்பரமா விஞ்சவே.

215. உள்ளதன்மேற் கற்பனையா வுற்ற வகந்தைமனக்
கள்ளமறக் கண்டவருட் காட்சியாற் கைவல்யத்
தெள்ளமுத மான சிவானுபவ வாழ்விதயத்
தள்ளியது, முற்ற வகன்றதுசிந் தாகுலமே.

216. ஒருமைசே ருண்மையா வூன்று சொரூபப்
பரமசிவப் பார்வையகம் பற்றலான் மோகக்
கருமவச மான கலக்கமகல் சுத்தப்
பரமசுப மோனப் பயன்படைத் தேனே.

217. சுத்தவறி வான சொரூபப் பரமார்த்த
வித்தையா லுண்மை விளங்கலாற் பொய்மயல்போய்
அத்துவித மோன வருட்பரமாந் திட்டியில்மற்
றத்தனையுங் கண்மாய மாகக் கரந்ததே.

218. பொய்கலந்த பாசப் புலவுலகப் பாழ்ங்கலக்க
மையலற மங்க வசீகரமாப் பொங்கியது
மெய்கலந்த சுத்த வெளியே விழியாக
வுய்யவென் னுள்ளத் தொளிர்சொருபப் பார்வையே.

## உ. அருட் பார்வையும் பயனும்

(குறள்)

219. பரமா வொளிர்சொருபப் பார்வையா லூறிற்
றுரமான சாந்தி யுணர்வு.

220. அங்கணன் கூர்ந்தவருட் பார்வையா லார்ந்ததெனக்
கெங்கணுந்தன் மோன வியல்பு.

221. அருள்வடிவா வுள்ளத் தணைந்தசிவ நோக்கே
பொருள்வளமாப் பொங்கலுற் றேன்.

222. அத்தன் சொரூப வருட்பார்வை யாலடியேன்
சித்தந் தெளிதலுற் றேன்.

223. பட்டனருட் பார்வையாற் பற்றியசற் பத்தியால்
விட்டதுவெம் பாச விடாய்.

224. மூர்க்கமா மோகமுனைப் போய வருட்பரமே
நோக்கமா வார்ந்த தகத்து.

225. பளிச்சென் றொளிர்சொருபப் பார்வையாற் பாச
வுளைச்ச லகன்ற துளத்து.

(வெண்பா)

226. அருட்பார்வை யார்ந்தவெனக் கைம்புலமா(ம்) மோக
விருட்பா மூறுங்கலக்க மில்லை—யிருட்பாழ்
கடந்தொளிர்பே ரின்பவருட் கைவல்ய பூமி
படர்ந்ததெங் கெங்கும் பரந்து.

227. இன்பவுணர் வூற விதயத்தே நல்கிஞா
னன்புமய மான வருட்பார்வை—தன்பதமே
சாந்தபத மான சதாகதியாத் தானளோயத்
தோய்ந்த தமுதத் துவம்.

228. இன்ப நிதியா விதயத்தில் வாழ்வளித்த
அன்பனருட் பார்வையுயிர்க் காரமுதாத்—துன்ப
மரணக் கலக்கமற மாற்றிற் றுடையா
வரணமா வென்ற னகத்து.

229. ஆண்டகுரு நாத னருட்பார்வை யூடுபொதிந்
தீண்டவளர் மாட்சியா லெப்பொருளும்—காண்டகு
கல்விபிறி தின்றியே கல்விமுற்றக் கற்றபயன் [நூற்
மல்கவுறப் பெற்றேன் மனத்து.

230. அறிவான மோனமே யாண்டா னெனக்குக்
குறியா விளங்கக் கொடுத்தான்—பிறிவறவம்
மோனவருட் பார்வையிம் மோகவுல கைக்கரந்து
தானவிர்வ தென்னுருவாத் தான்.

231. அறிவொளியாந் தெய்வ வருட்பார்வை யாலே
யிறைபதங்கண் டேற்ற மடைந்தேன்—நிறைவெளியா
மன்னுசிவ் பூரணமெய் வாழ்வா மனுபூதி
என்னதியல் பாயிற் றினிது.

232. ஒள்ளியபே ரின்பவுணர் வூற்றான பார்வையான்
வெள்ளவருட் பார்வையென்பால் வீசலுமென்—[உள்ளமே
புத்தமுத மோனவருட் போகமாப் பொங்கலால்
இத்தமியே னேழைமைதீர்ந் தேன்.

233. பாழுக்கிப் பாலே படருமனக் கற்பனையப்
பாழுக்கப் பாற்படராப் பான்மையால்—பாழைக்
கடந்த சொரூபவருட் காட்சியா லென்னுட்
படர்ந்ததுப சாந்தப் பதம்.

234. புத்திக்குட் போதவருட் பூரணமாப் பொங்குபர
முத்தனியற் பார்வையொளி மூண்டநான்—தத்திக்
கரைபுரள்சாந் தானுபவக் காட்சிசேர் மோனப்
பரசொருப பானுவா னேன்.

235. பொய்ம்மா லகன்றுசிவ போதவருட் பூரணத்திற்
சும்மா வமர்தல் சொரூபசித்தி—அம்மான்
அருட்பார்வை யாலெற் கனுபவமாப் பொங்கிற்
றிருப்பாமல் வுண்மை யியல்.

236. மோன வருள்வெளியே மூர்த்தியாத் துன்று குரு
யானவனைக் காண விமைப்பொழுதில்—ஞான
சொரூபவருட் சேமவியல் சுத்தவெளியாக
திருபணஞ்செய் தானுளத்து நேர்.

237. மருட்பார்வை யான மனக்கலக்கந் தீர
வருட்பார்வை யாண்டா னளித்தான்—இருப்பா
இருந்தொளிர்வ தான வியற்பரத்தே முற்றக்
கரந்ததுபுன் மோகக் கருத்து.

(கொச்சகக் கலிப்பா)

238. கடந்த வருட்சிற் ககனமா வெங்கும்
படர்ந்தமெய்க் காட்சி படைத்தலான் மோக
விடந்தரு கற்பனு வேக மனங்கெட்
டடைந்த தியற்பர மான்ம நிலையே.

239. உள்ளவோர் சற்று மொனுதவா றுள்ளுமவ்
வுள்ளமே யாக வொளிர்சொருபக் காட்சியாற்
கள்ள மயக்கமனக் கற்பனையின் கற்பனைதீர்
வெள்ள வருள்வெளியா விஞ்சியது மோனமே.

240. ஊனவகப் பாழற் றெழியவகத் தூடுருவி
ஞானவருட் பார்வையொளி நண்ணலால் அன்புசிவ
மானவிசுத் தானுபவ மார்ந்ததுசச் சிற்பரமா
மோனவெளித் தன்மை முகக்கவென் னுள்ளமே.

241 கற்பனைசேர் மோகக் கலக்கமறக் காண்குறுசச்
சிற்பரமாத் துன்றுசிவச் சீர்மைசேர் மோனவருட்
கற்பகமா வுள்ள கருத்தாற் கடவுளியற்
பொற்பதவாழ் வுள்ளம் பொலிந்தியல் கின்றதே.

242. வன்புசேர் துன்ப மனக்கலக்கப் பீழைதீர்
அன்பறிவா வண்டா னருட்பார்வை யார்ந்தேனுக்
கின்பவியல் பொங்கலா லென்னையழித் தற்புதமெய்
யன்பின் சொருப மறியத் துலங்கியதே.

243. பட்ட னளித்தவருட் பார்வையின் கூர்மையால்
உட்டெளிவில் லாதபா ழூத்தைப் பசாசனேற்
கிட்ட மனிட்ட மிரண்டுமறத் துன்றியது
முட்டற் றொளிர்சொருப மோனனு பூதியே.

244. ஆக்கமா வாண்ட வருட்சிற் பிரான்சொருப
நோக்கமே கூர்வாளா நானெனும்பொய்ச் சிச்சடத்
தாக்கலாற் பாசபந்தந் தட்டழியத் தன்னுருவே [தைத்
மோக்கமா முற்றியது மோனனு பூதியே.

245. சுட்டறிவா மோகமறத் துன்று சுவானுபவ
நிட்டையிலே மோனமா நிற்க வருளியவென்
பட்டனருட் பார்வையொளி பற்றலுற்ற வுள்ளத்திற்
சட்ட விளங்கியது சச்சிதா னந்தமே.

246. உண்டுபோற் றேன்று முல கூனமனக் கற்பனையா
விண்டதுகாண் சுத்த வெறுவெளியாஞ் சிற்பரத்து
மண்டு மகப்பாழ் மனங்கரக்க வாண்டவனைற்
கண்டுகொண்ட சுத்தவருட் கைவல்யக் காட்சியிலே.

## ட. அருட் காட்சி

(குறள்)

247. எல்லாமாத் தோன்று மிறைவன் சொரூபவருள்
அல்லா தயல்காண் கிலேன்.

(கொச்சகக் கலிப்பா)

248. கலகமனக் கற்பனையே காண்பேதக் காட்சி
அலகிலா வுண்மை யறிவொளியா வுள்ளங்
குலவு சொரூபசிவக் கோமா னொளியா
லிலகக்காண் கிற்ப வியற்சிற் பரமே.

குறிப்பு:—காண்கிற்ப - காணப்படுபவை.

249. சுட்டப் படாமெய்த் துரீயப் பரவெளியாய்க்
கட்டுப் படாதவருட் காட்சியாக் கண்டதுநான்
உட்டப்ப வொண்ணு வுரிமைசே ருண்மையாப்
பட்டப் பிரானெனக்குப் பாலித்த வொண்பதமே.

250. விரிதலுற்ற சுத்த வெளியொளியா வுள்ளத்
தரதையறச் செற்றென்னை யாண்டபிரான் மோன
நிரதிசயா னந்த நிலத்திலே யுண்மைப்
பரகதிகாட் டிக்கொடுத்த பார்வைநீங் காதே.

## அ. அருட் காட்சியும் பயனும்

(வெண்பா)

251. வெள்ளப் பரங்கருணை மெய்யனருட் காட்சியாற்
கள்ளப் புலமயக்கக் கற்பனைபோய்த்—தெள்ளத்
தெளிந்தேன் சிவசொருபஞ் சித்தமலங் கெட்டு
விளிந்தே னகந்தை வெறி.

252. வெள்ளப்பே ரின்ப விழுப்பொருளா வென்னைநான்
கள்ளமறக் கண்டவருட் காட்சியால்—துள்ளித்
தவித்தவகங் காரமனச் சஞ்சலஞ்சேர் மோக
வவத்தையகன் *றோர்வெளியா னேன்.

* ஓர்வெளி – அதீதமான துரீயவெளி.

253. கடந்த சொரூபவருட் காட்சியே கண்ணுத்
தொடர்ந்துமனஞ் சொக்கித் தொலைந்தேன்—படர்ந்த
புலவிடயக் காட்சிமிகப் புற்கென் றறிவிற்
பொலிவழியப் புக்கொடுங்கிற் றுல்.

(கொச்சகக் கலிப்பா)

254. சுத்தவருட் காட்சி துலங்கலா லுள்ளத்து
மத்தமனக் காட்சியா மங்கியது மற்றனைத்தும்;
முத்தித் துலக்கமா முற்றமுழுச் சிற்பரவாழ்
வத்துவிதப் பெற்றிசே ரந்தவருட் காட்சியே.

## ஆ. அருள் வாழ்வு பெறல்

(வெண்பா)

255. ஆண்டவனைப் பெற்றே னனந்தபதப் பேரருள்வாழ்
வீண்டுவதன் றென்று மெவராலும்—பூண்டொழுகப்
பெற்று ரருட்காதல் பெம்மா னருட்பதத்தா
டுற்றார்பே ரின்ப வுலகு.

256. நானென தென்று நயக்கவெனக் காண்டவனுந்
தானே பொருளாத் தழைத்தலால்—ஊனமகல்
பூரணமாம் போதப் பொலிவிலே நல்லநமோ
நாரணமாய் வாழ்வுற்றேன் நான்.

257. உய்வதற்கு யாதோ ருறுதியு(ம்)நா னோராது
தெய்வமே யென்று திகைத்தொழிந்தேன்—தெய்வத்
தவஞான மோன தயாநிதியாற் சார்ந்தேன்
சிவஞான வாழ்க்கைச் சிறப்பு.

258. ஆண்டபர மேசற் கடிமையாய் நானெனமேற்
றூண்டுமதி யான சுதந்தரம்போய்—மூண்டேன்
சிவசத்தி யென்னைச் செலுத்துமா செல்லும்
பவிசொத்த வாழ்க்கை பரத்து.

259. நிலையாக வூன்றுபர நிர்வாண சித்திக்
கலையான மோனக் கழலே—தலையான
போதவருட் செல்வமாப் பொங்கவகம் பொய்ம்மயக்க
வாதனையற் றோங்கியது வாழ்வு.

260. சதிர்த்தசிவ ஞானத் தபோதனரே போல
மதர்த்தியல்சற் போத மனத்தால்—அதிர்த்துமுழங்
காசுரப்பே யான வகந்தைக் குறும்பழிய
மாசிவப்பே றுற்றது வாழ்வு.

261. குருபுங் கவன்சொரூபக் கோலவொளி யாலென்
னுருதங்க மாக வொளிரத்—தெரிதுங்க
ஞானுறு பூதியே நாட்டமா மோனவருள்
வானுறு வளர்வதென் வாழ்வு.

262. நேயத் தமுந்தியவென் னெஞ்சத்தே பொய்ம்மாயக்
காயத் தகந்தைக் கலக்கமறப்—போயதனுல்
ஊனவுடற் பாச வுணர்வற் றுளிர்சொரூப
வானகமா மன்னியது வாழ்வு.

263. பாதவருட் சேமவொளி பற்றுக நிற்றலால்
ஆதவன்போ லாக வகம்பொங்கப்—பேதவெருட்
பான்மைசேர் மோகவகப் பற்றற் றுயிர்தழைப்ப
வான்மயமாய் மேவிற்று வாழ்வு.

264. சிற்பரமா நின்றசிவச் செம்பொருள்சிந் தாமணியுங்
கற்பகமு மாகக் கருத்திலே—அற்பமனப்
பான்மைசேர் மோகப் பசுத்துவங்கா ணுமலருள்
வான்மயமா மன்னியது வாழ்வு.

குறிப்பு:—கற்பகமு மாக - கற்பகமுமா யிருக்க, கற்பகமுமா யிருத்தலால்.

265. பொருள் விளங்கு ஞானு பூதியா லுள்ளத்
தருள்வெளியே நானு வமைந்தேன்—இருள்வழங்கு
பேதப் புலன்களிற் பேயா வுழன்றமல
வாதனையற் றேய்ந்ததருள் வாழ்வு.

266. குருமணியா லன்றிக் குவலயத்தே நாயேற்
கொருமகிமை யில்லை யுணரில்—குருமணியாந்
தெய்வவொளி யென்னுளத்திற் சேர்தலாற் சிற்சொருப
வைரவொளி பாய்ந்ததென் வாழ்வு.

267. சிந்தையற்ற சத்தவருட் சிற்பதத்தே நானெனுமவ்
விந்தைசேர் சிந்தை விளிந்திடலால்—சிந்தைசெய்த
பந்தமுத்தி யாவும் பகற்கனவாப் போகவெளி
வந்ததுதன் சொந்தவியல் வாழ்வு.

268. மறந்தே னினைந்தேன் மடிந்தேன் பிறந்தேன்
மறந்துநினைந் தேங்குமனம் மாண்டேன்—இறந்து [பிறந்
தேங்கியநா னின்று மியற்பரமாந் தன்சொருபத்
தோங்கியதால் வாழ்வென் னுயிர்க்கு.

269. மானுபி மான மயக்கமறத் தன்னிழப்பால்
யாறுகை வுள்ள வியல்வடிவில்—ஆறு
நிகழ்ச்சிசேர் மோனதிட நிஷ்டானு பூதித்
திகழ்ச்சிசேர் வாழ்வுசேர்ந் தேன்.

270. சஞ்சீவி யான சதாசிவசற் போதமே
என்சீ வனமா வியல்வதால்—வஞ்ச
மரணக் கலக்கஞ்சேர் மாயமனஞ் செத்துத்
தரணவாழ் வுற்றேன் சதிர்த்து.

271. மோனமே மிக்கபர முத்தியாத் துன்றுசிவ
ஞானமென் னுள்ளத்து நண்ணலால்—ஊனமனக்
கற்பனையாம் பாசக் கலக்கமில்சாந் தானுபவச்
சிற்பரவாழ் வுற்றேன் சிறந்து.

குறிப்பு.—சிற்பரவாழ்வு சிறக்கவுற்றேன் என்க.

272. மோனமே ஞான முடிபா மனுபவமெய்ஞ்
ஞானவொளி யென்னுளத்து நண்ணலால்— ஊன
கற்பனு பேதங் களுக்கிடமின் ருகவருட் [மனக்
சிற்பரவாழ் வோங்கியது சீர்த்து.

273. எல்லாமா யல்லதுமா யென்றுமுள்ள வோர்பொருளை
யல்லா துயிர்க்கோ ரரணில்லை—நல்லா
னருளா லதுவேநா னுனவனு பூதித்
தெருளால்வாழ் கின்றேன் செழித்து.

குறிப்பு:—நல்லான் என்றது அருள்வடிவான
ஆண்டவனை.

274. மலர்தலுற்ற ஞானவொளி மாண்பாலே சாந்தி
யலர்தலுற்ற தாக வகத்தே—உலர்தலுற்ற
வாருயிர்வாழ் வோங்கிற் றழகிதாந் தன்சொருபச்
சீருயர்வ தாகச் செழித்து.

275. புகலாக வுள்ளவருட் போத சொருபப்
பகலான வாழ்வு படைத்தேன்—அகலாத
மோனசொரூ பானுபவ முத்திப் பெருஞ்செல்வம்
வானளவ வுள்ளம் மலர்ந்து.

276. அவச்சோம்பி யாக வழிந்துபடா தென்னைச்
சிவச்சோம்பி யாகச் செறித்தான்—சுவச்சமாத்
துன்றுசொரூ பத்தே சுவத்தமாச் சிந்தையற
மன்றவாழ் கின்றேன் மகிழ்ந்து.

277. மெய்ப்பதமா நின்று விளங்குங் குருபாத
வைப்பகமா மோனவருள் வாழ்வுற்றேன்—சொப்பன
துன்றுமயற் பேதமற்ற சுத்தவருட் கேவலமா [மாத்
நின்றொளிர்மெய்த் தன்மை நிறைந்து.

278. தட்டுளுப்புப் பட்டுத் தடுமா றுலகியல்கை
விட்டிளைப்பா றுற்றசிவ மெய்ப்பதத்தில்—இட்டளப்பட்
டென்றுமினிச் சற்று மிரங்கலறச் சிற்பரவாழ்
வொன்றியது மன்ற வுளத்து.

குறிப்பு:—இளைப்பாறற் கிடமாகவமைந்த சிவபதம் உளத்தில் இட்டளப்பட் டிரங்கலற மெய்ப்பதத்திற் சிற்பரவாழ்வொன்றியது எனக் கூட்டுக; இட்டளம்—வருத்தம்.

279. அருளின்வே றல்லே னகத்தே யவிர்மெய்
யருளேநா னாக வமைந்தேன்—அருளே
சொருபமாத் துன்று சுபோதானு பூதி
மருவலுற்ற சாந்தி மடுத்து.

280. கடையா மசுத்தவுடற் காம மயக்கம்
அடையா தகத்தென்னை யாண்ட—உடையான்
பதத்திற் கிளர்ந்தெழுசற் பத்தியே தூய்தா
மதர்த்தவருள் வாழ்வென் மனத்து.

281. அந்தமில்சற் போத வகண்டானு பூதியொளி
சொந்தவியல் பாகச் சுடர்பதத்தே—பந்தமயற்
சிந்தையற்ற வாழ்வு திருத்தினன் மோனவுணர்
வந்தமில்பே ரின்ப மகத்து.

282. விளங்குசிவ ஞான விபூதியாற் பாசக்
களங்கவகப் பேய்கடிந்து காத்தான்—வளங்குலவு
சாந்தவாழ் வான சதாசிவமாங் கைவல்யம்
ஆர்ந்தவா றுற்றிற் றகத்து.

283. பாழைக் கடந்த பரசிவத்தே நானென்
றூழப் படிந்த வறிவொளியால்—பாழிற்
படர்ந்த மனக்கற் பனைஜாலம் பேர
வடைந்ததியல் வாழ்வென் னகத்து.

284. என்சொருப வுண்மையா வென்னிதயத் துள்ளவிறை
தன்சொருப வாழ்வு தலைப்பட்டேன்—பொன்செய்த
வாண்டா னடிமைப் புதுமையெனைத் துண்மையி
னுண்டவனு நானு மனைத்து. [லென்

285. அருட்பார்வை யாலே யருவா வறிந்தேன்
உருப்போ லுழன்றவென் னுண்மை—மருட்புன்
கருவுளியல் வாதைக் கலக்கமற முத்திப்
பரவொளியில் வாழ்வுபடைத் தேன்.

286. உள்ளமே தானு வொளிர்சொருப மோனவருள்
வெள்ளமிக வோங்கி விசைத்தலாற்—கள்ளமனக்
கற்பனையாம் பாசக் கலிமுடிந்து கைவல்யச்
சிற்பரமெய் வாழ்வுதிளைத் தேன்.

287. ஓலமிட்ட வுள்ளத் துணர்வுருவா மோனவருட்
சீலவொளிப் பார்வை சிறத்தலால்—வாலறிவா
முண்மையே நானு வொளிரும் பரசொருபத்
திண்மைசேர் வாழ்வுதிளைத் தேன்.

288. கடமை யுணர்ச்சிக் கலக்கமறப் பொங்கு
திடமெய் யுணர்வுத் திறத்தால்—அடர்மொய்
யபிமான பந்தமகன் றாசத்தி யற்ற
சுபமான வாழ்வுதோய்ந் தேன்.

குறிப்பு:— அபிமான பந்தம் - ஆசாநிகளம்;
ஆசத்தி யற்ற . . . . . வாழ்வு - ஆசையற்ற
அருள்வாழ்வு.

289. பைத்தியமாம் புத்திப் பதற்றமற மெய்ஞ்ஞான
வைத்தியனு மோனவருள் வள்ளலாற்—பைத்தியத்துக்
குண்மைமருந் தாக வொளிர்சொருபச் சிற்பரத்தில்
வண்மைசேர் வாழ்வுபடைத் தேன்.

290. தன்னியலே சார்ந்தவுயிர் சாந்த சதாசிவமாய்
மன்னியபே ரின்பவருள் வாழ்வுபெற்றுத்—தன்னை
[யலால்
அன்னியமொன் றின்றி யகிலமுந்தன் மாட்சியிலே
பின்னியதாய் வைகுற் றது.

291. வைகியவவ் வாழ்வு மலர்ப்பதத்து முன்னடியேன்
செய்தசிவ புண்ணியத்தின் சீர்மையே—பொய்தவி
பாலதா மந்தப் பதிபுண் ணியமுயிருக் [மெய்ப்
* காலவே வாய்த்த வமுது.

*ஆலவே – மிகவே (அகல என்பது ஆல என மருவிற்று.)

292. சதாகதியா மோன தருமகுரு பாத
சுதாரசமாம் போகச் சுரப்பால்—மதாலசமாய்
மற்றவை யாவும் மறந்தொழியத் தன்மயத்திற்
பெற்றவியல் வாழ்வோ பெரிது.

293. தன்னந் தனியாத் தழைத்த சிவானுபவ
வன்னங் கிளர்சொருப வாழ்க்கையால்—என்னியல்
கற்பனையாந் துன்பக் கலக்கமில்பே ரின்பவருள் [பிற்
வைப்பகமா வுள்ளேன் மகிழ்ந்து.

## ௩. அருள் வாழ்வடைவு

(குறள்)

294. மோனவுணர் வாலகத்து முற்றியது சுத்தவருள்
வானவியல் வாழ்வு மதர்த்து.

295. தப்பலரு வாழ்வெனக்குச் சார்ந்ததுகாண் சுத்தவருட்
செப்பமா வுள்ள சிவத்து.

296. உண்மை யுணர்வா லுளங்கிளரப் பொங்கியது
வண்மைசேர் சுத்தவருள் வாழ்வு.

297. உளந்தெளிந்த வுண்மை யுணர்வால் அருள்வாழ்
வளைந்ததுவெம் பாச மகன்று.

298. மோனவுணர் வாக முகந்ததுசற் போதவருள்
வானவாழ் வென்றன் மனத்து.

299. என்னியல்பே யாக விருந்தொளிர்சச் சிற்பரத்து
மன்னியது மோனவருள் வாழ்வு.

300. என்னைக் கடந்தோங் கியற்சிற் பரசொருப
வன்னத் தளைந்ததுமெய் வாழ்வு.

301. பேணக் கடவசிவப் பேரு விதயத்து
மாண விளைந்ததருள் வாழ்வு.

302. சுவத்தவாழ் வுள்ளந் துலங்கலுற்றேன் சுத்த
சிவத்திலென் னுண்மை தெளிந்து.

303. சிவமயமா வாழ்வு செழிக்கலுற்றேன் உண்மைத்
தவமியல்பா நாளுந் தழைத்து.

304. ஊனமற்ற வுண்மை யுணர்வால் விளைந்ததருள்
வானமா வைகுசுப வாழ்வு.

305. ஞானவொளி நண்ணலா லுள்ளத்து நான்சொருப
வானவெளி வாழ்வுபெற் றேன்.

306. இருள்சே ரகந்தை யிறந்திடப்பே ரின்ப
வருள்வாழ் வலர்ந்த தகத்து.

307. மிக்க விபூதியா மேவுசிவச் செம்பொருள்வாழ்
வொக்க விளைந்த துளத்து.

308. தெளிந்த வுளத்திற் செழித்ததுபே ரின்ப
வளந்ததும்பு வாழ்வு மலர்ந்து.

309. வித்தகவாழ் வாக விளங்கியது சுத்தவருட்
புத்தமுத மோனப் புலம்.

310. ஆக்கமாப் பெற்ற வருட்செம் பதநீர்மை
நீக்கமறப் பற்றியது நெஞ்சு.

311. சிவமான மோனவருட் செல்வவாழ் வாகத்
தவஞான சாதனைமுற் றிற்று.

312. வாழ்விற் படைத்த வளஞ்சே ருபசாந்தி
தாழ்வுக் கெளாமோர் தடை.

313. ஏதமகல் சுத்த வியற்பரவாழ் வார்ந்ததுசற்
போத சொரூபப் புலத்து.

314. துலங்கு தூரிய சொரூப வருள்வாழ்
வலங்கலற வுற்ற தகத்து.

315. சோகமோ கந்தீர் சொரூபநோக் கானசிவ
யோகவாழ் வுற்ற துளத்து.

316. பாழ்கடந்த சுத்தவருட் பார்வையால் ஊழ்கடந்த
வுண்மைவாழ் வுற்ற துளத்து.

317. அந்தப் புரவாழ் வடைந்தேன் அருள்வெளியாஞ்
சொந்தப் பரசொரூ பத்து.

318. தானு விளங்கியது தான்றானு வுள்ளவருள்
வானும் பரமார்த்த வாழ்வு.

319. திருவருட் செல்வச் சிறப்பான மோனப்
பெருவளவாழ் வீந்தான் பிரான்.

320. சிற்பரமா மோனவருட் செல்வமளித் தாண்டகுரு
தற்பரனுல் வாழ்ந்தேன் சதிர்த்து.

321. சதாசா ரியனருளாற் சார்ந்ததுமெய்ஞ் ஞான
சதாசார வாழ்வென் னுளத்து.

322. செம்பரமா வாழ்வு செழித்தேன் குருரமண
நம்பனையே நம்பியதால் நான்.

323. அறிவே சொரூபமா வாண்டவனு லார்ந்தேன்
மறவியற்ற சுத்தவருள் வா வு.

324. உள்ளத் துபசாந்த வூற்றுப் பெருகியது
வள்ளற் பிரானளித்த வாழ்வு.

325. உண்மையா லென்னை யுடையான் சொருபவருள்
வண்மையா லுற்றதென் வாழ்வு.

326. பயனு விளைந்த பராற்பரவாழ் வுள்ளத்
தியல்பா விருந்தொளிர் நல் லின்பு.

327. கடவுளியல் பானவருட் கைவல் லியமெய்த்
தடவெளியில் வாழ்வுசதிர்த் தேன்.

328. காயத்தே யாரோ கணித்த சொரூபான்ம
நேயத்தே வாழ்வுநிறைந் தேன்.

329. வெள்ளவருள் வாழ்வு விளங்கலா லுள்ளத்திற்
கள்ளமனங் காண்கின் றிலேன்.

330. மங்கல வாழ்வா மடுத்ததுதன் மாத்திரமாப்
பொங்குமுப சாந்தப் பொலிவு.

331. உண்மைப் பதங்கண் டுணர்வு தெளிந்தேற்கு
வண்மைபெறச் சேர்ந்தருள் வாழ்வு.

332. வாழ்வாக வொன்றும் மதியேன், சொரூபவருள்
வாழ்வு மடுத்தநான் மற்று.

333. உளந்தெளிந்த வாற்றல், உறுதிசே ருண்மை
வளந்ததும்ப லுற்றது வாழ்வு.

334. அருளின் பெருமை யறிந்தேன் அகப்பா
ழிருளினிகப் பித்தவாற் றல்.

335. மருட்கே வலப்பாழை மாற்றி மலர்ந்த
தருட்கே வலவாழ் வகத்து.

336. அலைவிலா வாழ்வா வடைந்ததகத் தென்று
முலைவிலா வுண்மை யுணர்வு.

337. சிவத்திலே சித்தந் திளைத்தலால் வாழ்வு
சுவத்தமா வார்ந்தேன் சுபம்.

(வெண்பா)

338. அருளே கதியா வடிகளையே சிந்தித்
திருள்சே ரிருவினையை யெற்றி—மருளியல் வெம்
பாசமுனைப் போயப் பரசிவமெய்ச் சிற்பதத்தில்
வாசமுறப் பெற்றதென் வாழ்வு.

339. அஞ்ஞானப் பீடை யறக்கடிந்து பொங்குகின்ற
தெஞ்ஞான மில்லை யிதயத்தே—மெய்ஞ்ஞான
நன்னிதியா நண்ணி நலங்கிளர்கை வல்லியமா
மன்னுதயா மூர்த்தியருள் வாழ்வு.

340. அன்புகூர் சிந்தையே யாக்கமாப் பேறுமுயிர்க்
கின்பமன்றி யென்றுமொரு துன்பமில்லை—அன்பால்
அருள்வாழ்வு பெற்றே னடியேன் சிவம்செம்
பொருள்வளம் பொங்கப் பொலிந்து.

341. நெஞ்சிற் கரியா நிகழ்சொருப மோனவருள்
விஞ்சைத் திறத்தால் வெளிவாங்கி—வஞ்சமனக்
கற்பனையா மோகக் கலக்கமறத் துப்புரவாச்
சிற்பரவாழ் வோங்கியது சீர்த்து.

குறிப்பு :—கலக்கமற வெளிவாங்கி எனக் கூட்டுக.

342. அருட்பதமே யாருயிருக் கற்புதமா முத்தித்
திருப்பதமா வுண்மை தெளிந்தேன்—அருட்பதவாழ்
வுள்ளத் தொளிசிறப்ப வூன்றுசிவக் கேவலமா
வுள்ளவனு பூதியால் யான்.

343. எண்ண விரண்டற் றியல்சொருப வுண்மையெனக்
குண்ணனவா வோங்கு முணர்வொளியால்—வண்ண
வருட்சிற் பரவாழ் வனுபூதி யாகத்
திரட்சியுற்ற தென்ஜீ வியம்.

344. ஈண்டியபொய்ம் மோக விருளகற்று சாதனமென்
னுண்டவன்மெய்ஞ் ஞான வருட்குலா—பூண்டவருட்
காட்சிசேர் தன்சொருபக் கைவல் லியவுணர்வின்
மாட்சியே மோனவியல் வாழ்வு.

345. உண்மை யொளிபடர்ந்த வுள்ளத்தே சாந்தவருள்
வண்மையா லின்ப மகிழ்பொங்கத்—திண்மைசேர்
தற்பரமா மோன சதாசிவமே வாழ்வாக
நிற்பதுயி ரெங்கு நிறைந்து.

346. உள்ளுணர்வை யன்றியுயிர்க் கோருறுதி
[யின்மையா
லுள்ளுணர்வா மோன வொழுக்கமே—உள்ளத்
துறுதியாப் பூண்டுநா னுண்மைப் பொருளின்
மறதியற்ற வாழ்வுபடைத் தேன்.

347. மாயமாத் தோன்றுமனம் மங்கவுளத் தான்றசிவ
நேயவருள் வாழ்வு நிலைத்தலால்—தாயகமாத்
தங்குசிவ பூமி சதோதயமாய் மோனவொளி
பொங்குவதென் னுள்ளே பொலிந்து.

348. அறிவான வுண்மை யறிந்தடைந்த வாற்றூற்
பிறவான மோகமறப் பேர்ந்தே—நிறைவா
விரண்டற் றொளிர்சொருப வின்பவருள் வாழ்வு
திரண்டதுளத் தன்பு செழித்து.

349. இரண்டிலா வொன்றேயா யெல்லா மொருங்கு
திரண்டொளிர்சற் போதத் தெளிவால்—மருண்ட
[மனப்
புன்மயக்க மற்றவருட் பூரணவாழ் வென்னுளத்துத்
தன்மயமாத் தங்கியது தான்.

350. நம்ப னருட்பதமே ஞானப் பெரும்பதமாஞ்
செம்பரமா வுள்ளஞ் செழித்தலால்—இம்பரே
என்பரமன் றூன வியற்சிற் பரசொருப
மொய்ம்புறுவாழ் வுற்றதொளி மூண்டு.

351. துனற்கன் னியமொன்றுந் தோன்ற வுணர்வே
மனக்கலக்க மற்றவருள் வாழ்வா—வெனக்குத்
தெளிந்தவியற் கைவல்யத் தேற்றமுண்டாக
அணைந்ததனு பூதி யகத்து.

352. உள்ளதே நானு வுணர்ந்தவனு பூதிமிகத்
தெள்ளிதா வுள்ளஞ் செழித்தலால்—உள்ளதே
போல மயக்கும் புலவுலக மோகமற்ற
வாலறிவே யாயிற்று வாழ்வு.

353. அருள்வாழ்வு பூண்ட வகத்தே சிவச்செம்
பொருள்வாழ்வு தானே புணர—விருள்வா
யியன்றமனக் கற்பனைச்சுட் டேதுமறத் தன்பா
லகன்றொழியப் பெற்ற தறிவு.

354. இன்பவுணர் வாக விதயத் தியல்சொருப
நம்பனருள் வாழ்வே நவநிதியா—இம்பரே
உம்பருயர் போக மொருங்குசே ருள்ளமைதி
எம்பரமன் றோங்கிற் றினிது.

குறிப்பு :—அன்று – அன்றாக.

355. உள்ளவருள் வாழ்வென் னுளத்திலே மோகமனக்
கள்ளமறக் காட்டியவென் கண்ணுளன்—தெள்ளத்
தெளிந்த சிவானுபவச் சீர்மைசேர் சாந்தி
அளைந்ததெங் கெங்கு மலர்ந்து.

356. உள்ளலற வுள்ளு முணர்வுருவா மோனவருள்
வெள்ளமா வெங்கும் விசைப்பதாம்—துள்ளி
யுணக்கலுற்ற வென்னு ருயிர்தழைக்க வுள்ளத்
திணக்கமுற்ற வாண்டா னியல்.

குறிப்பு :—ஆண்டானியல் அருள் வெள்ளமாக விசைப்பதாம் எனக் கூட்டுக.

357. ஆண்டவனுக் கென்னை யடைக்கல மாக்கினேன்
மூண்டகவ லோட முடுக்கினேன்—பூண்ட
வருள்விலா சத்தி லமைதிசேர் வாழ்க்கைப்
பொருள்வளம்பொங் குற்றேன் பொலிந்து.

358. என்றுமுள்ள வுண்மை யியல்பான மோனவருள்
வென்றியுள்ளஞ் சேர விளைத்தபிரான்—மன்றவெனக்
கன்புமய மான வனந்தசிவக் காட்சியால்
இன்பவருள் வாழ்வா யினன்.

(கொச்சகக் கலிப்பா)

359. அளந்தறிய வொண்ணு வருட்சீர்மை யாளன்
உளந்ததும்பு மோன வுணர்வா வொளிர்வால்,
களந்ததும்பு மோகவகக் கற்பனையில் யான்முன்
னுளைந்ததுபொய் யாக வொளிர்ந்ததுமெய் வாழ்வே.

360. மறவியாத் துன்றுமனே மாயமற மாற்றும்
இறைவ னருளா லிதயம் மலர்ந்த
நிறைவெளியாம் மோன நிலையிலே கண்டேன்
பிறிவில்பே ரின்பவியற் பெற்றிசேர் வாழ்வே.

குறிப்பு:—இதயம் நிறைவெளியாக மலர்ந்த என மாற்றிக் கொள்க.

361. குறிகுணந்தீர் சுத்தவருட் கோமாற்கு நானென்
னறிவே நிவேதனமா வாக்கலாற் பெற்றேன்,
செறிவாக வுள்ளசிவச் செம்பதத்திற் குன்று
நிறைவாக வுள்ளமெய்ஞ் ஞேயவியல் வாழ்வே.

362. அருணப் பிரானென வாண்டவன்கண் ணேக்கால்
இருளற் றெழுந்த விதயத்திற் கண்டேன்,
மரணக் கலக்கமற மன்னு சொரூப
வருள்வெளியாத் தான்பொங் கபரிமித வாழ்வே.

363. முகவிலா சந்தருபுன் மூரலால் எள்ளின்
பகவுமற யானெனும்பாழ்ம் பாசமறச் செற்றூற்
குகவுசே ரன்பா லுளத்தே விளைத்தேன்
தகவுசேர் சாந்த சமாதான வாழ்வே.

364. எழுத வொணுதபே ரின்ப வியற்கட்
டழகுசால் சுத்த வருட்பர மூர்த்தி
கழல்வடி வாகக் கலந்த கருத்தால்
அழகிய தாக வமைந்தது வாழ்வே.

365. வியப்புறவே வேறோர் விசித்திரமுந் தோற்று
தியற்பரமா வுள்ள விறைவன் சொரூப
நயப்புணர்வா மிக்க நலங்கெழுசற் பத்திப்
பயிர்ப்பயனு முற்றியது பாரவருள் வாழ்வே.

366. அறிவு தெளிந்தேன் அகந்தைமுனைப் பற்றேன்
உறவுபிற வற்றி லொழிந்தேன் சொரூப
மறவியறப் பொங்கும் மனத்தாலே மாயப்
பிறவியென்பாற் பேரப் பிறங்கியது வாழ்வே.

367. குருவடிவா லென்வடிவு கொள்ளைகொளப் பட்டுத்
திருவடிமெய்ஞ் ஞானவொளி சேரப்பெற் றேனுக்
கொருவடிவு மற்ற வுதாரவருட் பாரப்
பரவடிவே சொந்தமாப் பற்றியது வாழ்வே.

368. மருள்வண்ண மான மயக்க மனைந்த
வெருள்வண்ண மான விகற்பமற வுள்ளத்
தருள்வண்ண மாக வவிர்சொருப வுண்மைப்
பொருள்வண்ண மாகப் பொலிந்ததென் வாழ்வே.

369. தவத்தால் விளைந்த சதாமுத்தி ஞானம்
பவத்தையே கற்பனையாப் பாற்றலான் மிக்க
சுவத்தமா வுள்ள சொரூபானு பூதி
சிவத்துவமே யாகச் செழித்ததுண்மை வாழ்வே.

370. மருளுற்ற பாச மனக்கற் பனைசே
ரிருள்செற் றிதயத் திலகு சொரூப
வருள்வெற்றி யாக வவிர்ந்தது சற்றும்
வெருளற்ற சுத்த வெளியான வாழ்வே.

371. உளங்கவல்வாழ் வானபா ழூத்தையகங் காரக்
களங்கமற்ற சுத்தவருட் கைவல் லியமா
விளங்கலுற்ற வுண்மையால் வேதாந்தங் கண்டேன்;
வளங்குலவ வுற்றேன் வசீகரமெய் வாழ்வே.

372. உளைந்துபடு துன்பத்துக் கேதுவா வுள்ளத்
தளைந்தபா ழாசையற வாண்டவன்பாற் சித்தந்
தெளிந்தமெய் யன்புத் திறத்தா லகத்தில்
விளைந்ததுபே ரின்ப விபூதிசேர் வாழ்வே.

373. எனக்கே தனக்கே யிரண்டுபட்ட பேதம்
திணைத்துணையு மில்லாத் திறத்தா லகத்தே
நினைக்க வொண்ணாதமெய்ஞ் ஞேயமாய்ப் பொங்கும்
அனைத்தேநான் பெற்ற வனுபூதி வாழ்வே.

374. என்னியல்பா முண்மை இதயத் தனுபவமாத்
துன்னியதால் அன்பு சொரூபத்தி லேயாக
மன்னியே முற்ற மலர்ந்ததுதன் னைட்பநுட்பத்
தன்னியமோன் றற்றவருட் பூரணவாழ் வாகவே.

375. கரந்தொழிய மோகமனக் கற்பனையைப் போக்கு
யிருந்தொளிர்வ தாக விதயத் தியல்பாய்ப்
பரந்தவெளி தானே பரசொருப மாகச்
சுரந்ததுமெய்ஞ் ஞான சுகத்துரிய வாழ்வே.

376. பரந்த மயக்கவகப் பாழ்ங்கார் கரக்கத்
திருந்த விளங்குசிவச் சிற்பதத்திற் சித்தம்
பொருந்தலுற்ற மோனனு பூதியாற் பொங்கிச்
சுரந்ததுபே ரின்பத் துரியவியல் வாழ்வே.

377. அனர்த்தக் கலக்க வகந்தைப் பிழைசேர்
மனத்தைக் கடந்தபெரு மாண்பா விளங்கு
தனித்தத் துவசொருபத் தன்மையாத் தங்கிற்
றினைத்தெனவொண் ணாத வியற்பரமெய் வாழ்வே.

378. ஒளிவெளியா வுள்ளமெய் யுள்ளமே சுத்தத்
தெளிவியல்சே ருண்மைச் சிவலோக மாக
அளியனே னுண்டா னருட்கனிற்கண் டார்ந்தேன்
இளிவரல்சே ராத வியற்பரமெய் வாழ்வே.

379. நிறைவெளியைப் பல்வேறு ஞேயங்க ளாகப்
பிறிவுபடுத் தானவகப் பேயொழிந்த வாற்றால்
அறிவுருவா வுள்ளவெனக் கன்னியமாத் தேற
இறையுமறத் துன்றிற் றியற்பரமெய் வாழ்வே.

380. சிவமயமா வெல்லாஞ் செழிக்க வகத்து
நவநவமா வுள்ளசிவ ஞானனு பூதித்
தவமியல்பா நாளுந் தழைத்திடலாற் சார்ந்தேன்
பவமரண மில்லாப் பரமார்த்த வாழ்வே.

381. சிவமே சொரூபமாத் தேர்தலா லுள்ளத்
தவமான மாய வகப்பா ழகன்றேன்;
எவமேது மற்றபே ரின்பப் பரதத்
துவமே சொரூபமாத் துன்றியது வாழ்வே.

382. பரமான நல்லசிவப் பான்மையென் னுள்ளத்
துரமான வுண்மை யுணர்வால் விளங்கத்
திரமான சுத்த சிவோகவியற் சீரால்
வரமான வைப்பில் வளர்வதென் வாழ்வே.

383. அரங்கமா வுள்ளத் தருட்கூத் தியற்றும்
பரன்கண்ணுற் பாசவிருட் பாழகலக் கண்டேற்
கிரங்கவோ ரேதுவில்லை; ஏக வியற்சிற்
பரங்கிளர்மோ னத்துரியம் பற்றியது வாழ்வே.

384. தெருமரல்சேர் மோகச் செருக்கையடர்த் தாண்டான்
றிருவருளாற் சித்தந் தெளிந்தாங் குளத்தில்
வெருவரல்கெட் டான்ற விசுத்தப் பரமா
மருவியது மோனவியல் வண்மைசேர் வாழ்வே.

385. உலகுக்கோ ராருயிரா வுள்ளோன் அருளா
லிலகவென் னுருயிரு டேகமா வேய்ந்தான்;
குலவு சொரூபமாக் கூர்த்தவாற் கூடிற்
றலகிலா மோன வருட்பெரு வாழ்வே.

386. கலாமுறுமெம் பாசக் கலக்கமற வுள்ளங்
குலாவுறுமெய்ஞ் ஞான குருமணியால் யான்றே
ரெலாமொருதன் பொன்மயமே யென்னு முணர்வாக
நிலாவியது மோன நிறைவான வாழ்வே.

397. நினைக்க வொணாததோர் ஞேய சொரூபம்
எனக்கியல் பாக விதயத் திலங்கத்
*துனிக்களிசேர் தொந்தபந்தச் சூதா மகந்தை
முனைக்கலற்ற மோனமா மூண்டதருள் வாழ்வே.

* துனிக்களி - துன்பவின்பம்.

388. அகந்தையறி வான வனர்த்தப் பிழைசெற்
றுகந்தென்னை யாண்ட வுடையான்பால் ஆன்ற
சுகந்ததும்பு சுத்த சொரூபவுணர் வூற
முகந்ததுமெய் யன்பான மோனவியல் வாழ்வே.

389. அறிவான தன்னி னயலொன்று மில்லா
வறிவே நிறைந்த வருட்பரமா வுள்ளத்
தறிய விளங்கலால் ஆன்ற சொரூப
வறிவிலே யார்ந்தேன்மோ னானுபவ வாழ்வே.

390. உளைந்தமோ கப்பா முலகவுணர் வோய
விளைந்தசுப வேட்கையின் மீக்கூ ருணர்வால்
அளைந்ததகம் பொங்க வருட்சிற் பரமாத்
தெளிந்த சிவானுபவச் சீர்மைசேர் வாழ்வே.

391. குறுக்கே முளைத்த குடில வகத்தைச்
செறுக்கிலல் லாது சிவத்துவஞ் சேரார்;
மறுக்கலுற் றந்த மனத்தை யருளாற்
சிறக்கத் திளைத்தேன் சிவானுபவ வாழ்வே.

392. அருட்சிற் பரத்திலெனக் கன்புமீக் கூர்ந்தாங்
கிருட்சற் பனையா வெதிர்புலநோக் கோய்வால்
மருட்சிகூர் பாசவிடம் மாய்த்தொழியச் சேர்ந்தேன்
தெருட்சீ ரமுத சிவானுபவ வாழ்வே.

393. வெருவரல்சேர் பாசமயல் வெம்பவத்தி னின்று
குருவுருவா வென்னைக் குறிக்கொண்டான் மாட்டு
மருவியமெய் யன்புணர்வால் வாய்ந்ததுபே ரின்பத்
துரியவியல் பான சுவானுபவ வாழ்வே.

394. இறைவ னருளா லிதயம் மலர்ந்து
நிறைவெளியா முண்மை நிலைப்படலா லார்ந்தேன்
மறைமுடிவா(ம்) மோனவியற் கைவல்ய மாண்பால்
அறிவமைதி சேர்ந்தசொரு பானுபவ வாழ்வே.

395. முளிந்த வறட்டுலக மோகப் புலத்தாற்
றளேந்தபசு பாசத் தடுமாற்றந் தீரத்
தெளிந்து விளங்கு சிவத்தியா னத்தால்
அளைந்ததுமெய் யன்புசிவ மானவருள் வாழ்வே.

396. பருவரல்சேர் மாயப் பதைப்பொழியக் கூர்சற்
குருவருளா லுள்ளங் குலாவலுற்ற பேறு
வெருவரல்சேர் மோக விகற்பந்தீர் சுத்த
வருள்வெளியாப் பொங்கு மனந்தசுப வாழ்வே.

397. உள்ளப் படாத வொளிப்பிழம்பா வுள்ளத்துத்
தெள்ளத் தெளிந்த சிவச்சிற் பராக்கினியிற்
கள்ளச் செருக்கான கற்பனு சற்பனைமாய்ந்
தள்ளப் படாத வருட்பெருவாழ் வாயிற்றே.

398. தாறுமா றுகமனந் தத்தளிப்பாற் சஞ்சலஞ்சேர்
ஊறுபா டான வுபத்திரவச் சிந்தையற
வேறுபா டற்றவருள் வித்தகப்பே ராட்சியாம்
கூறுபா டற்றசிவக் கோமளவாழ் வுற்றதே.

399. ஒளிப்பிழம் பான வுடையான் அடியேன்
களிப்ப வுணர்விற் கலத்தலால், உள்ள
மளப்பிலா மோன வருள்வெளி யாக
வளப்படு சாந்தி மலிந்தது வாழ்வே.

400. மரணக் கலக்கமற மாற்றியமெய்ஞ் ஞான
வரணப் பிரான்சே வடியுணர்வா லார்ந்தேன்
கரணங் கடந்தவருட் கைவல்ய வுண்மைத்
தரணமா மிக்கசாட் சாற்கார வாழ்வே.

401. புலத்திற் கருத்துப் பொருந்தாது தன்மெய்ந்
நலத்திற் பதிந்தமெய்ஞ் ஞானா பூதி
சலத்தைக் கெடுத்தருள் சற்குரு சார்பாற்
பலித்தலிற் பெற்றேன் பராமிருத வாழ்வே.

402. மத்தக் கருத்தான மானபி மானமயல்
பொய்த்தொழியக் கண்டவருட் போத சொரூபமே
முத்த வியல்பிற்று முக்காலு முள்ளபர
வத்துவாக் கண்டேன் *வளவியவாழ் வுற்றதே.

* வளவியவாழ்வு – பிரம்மானுபவ வாழ்வு.

403. மெய்த்தன்மை யான வெளிச்சிற் பரசொருப
முத்தவியல் வாழ்வகத்து முற்பட் டொளிர்தலால்,
பொய்த்தன்மை யாகப் புலப்பா முலகிலுழல்
பெத்தவியல் பானவகப் பேய்மயக்கம் பேர்ந்ததே.

404. எண்ணெண் கலையிலெனக் கிச்சை யகன்றொழிய
நண்ணும் பரசொருப ஞானா னுபூதியால்
எண்ணி யியம்பியியற் றெல்லாம்அப் பேரின்ப
வண்ணமே யாகஅருள் வாழ்வு மலர்ந்ததே.

405. ஏனைப் பசுபாச மெல்லாங் கரந்தொழிய
மோனப் பரமே முழுமுதலா யென்னகத்து
நானற் றொளிர்சொருப ஞானா னுபூதியால்
வானத் துரிய வருள் வாழ்வா மலர்ந்ததே.

406. திரிசியமொன் றற்ற திருக்கின் சொருபப்
பரசிவ வுண்மை பரவெளி யாக,
ஒரசைவு மற்ற வுரன்சே ருணர்வால்
விரிசுப வாழ்வு விளங்கலுற் றேனே.

407. கரும கதிகளாங் கற்பனையிற் றீர்ந்த
பரமகதி யென்னுட் பரவெளியே யாகத்
திரவியல்பா வுள்ளசிவச் சிற்பரவாழ் வுற்றேன்
கரவியல்பாம் பாசவகங் காரமறக் கெட்டே.

408. சித்தமலத் தைக்கெடுத்த சிற்பரத்திற் சிந்தையறப்
பொய்த்தொழியப் பொங்குசுப மோனம் புணர்தலால்
அத்தனையுந் தான்கடந்த வானந்தா தீதவியல்
* வத்துவள வாகவகம் வைகியதென் வாழ்க்கையே

* வத்துவள வாக—இருப்பளவாக, சத்தா மாத்திர மாக.

409. பிறிதொன் றிலாத பிரம்ம சொரூப
வறிவின் றுலக்க மனைந்த வகத்தில்
வெறிதுன் றகப்பேய் விளிந்திட மோன
நிறைவின்ப வாழ்வு நிலாயதென் னெஞ்சே.

410. தெள்ளத் தெளிந்த சிவானுபவஞ் சீவனமா
உள்ளப் பரவெளிவாழ் வொள்ளிதா வுள்ளதுகாண்,
உள்ள வெனக்குமற் றொன்றுமிலா வாறுமனக்
கள்ளமறக் கண்டவருட் கண்ணுன சிற்பதத்தே.

411. ஒளிவெளியா வுள்ளவென் னுண்மையைநான் கண்
கிளிவரல்சே ராத வியற்பரவாழ் வுற்றேன் [டாங்
களவுபடு மாயமனக் கற்பனையெக் காலு
மளைவதில்லை அந்த வதீதப் பரத்தே.

412. பரசிவத்தில் வாழப் படைத்தலாற் சித்தத்
தொரசைவற் றுண்மை யுரம்படைத்தேன் உள்ளத்
தரசமா யாவு மகன்றொழியத் தானே
சுரசமாப் பொங்கு சுவானுபவத் தாலே.

413. சிவஞான மோனத் திருவருள்வாழ் வாக
அவிர்கே வலசொரு பானுபவ மாண்பால்
விவகா ரிகநடையில் மெய்போ லியன்ற
பவஞால வாழ்வு பகற்கனவா யிற்றே.

414. இருள்வளர் மைப்பா ழியற்கை யருப்பொய்ம்
மருள்வளர் வஞ்ச மனக்கற் பனைதீர்
அருள்வெளி யானசுத் தான்ம சொருபப்
பொருள்வளர் வாழ்வாற் புலங்கடந் தேனே.

415. இதயத் தலத்தி லியன்றநிட் சேப
நிதியைத் தெருட்டிமெய்ஞ் ஞேயமாத் தந்த
அதியப் பிரான்மெய் யருட்குடி யாகப்
பதிவுற் றருட்பர வாழ்வுபெற் றேமே.

416. அற்றமா மோகப்பா ழாவரணப் பீழையறச்
செற்றகுரு நாதனருட் சிற்பதமே நற்பதமா
முற்றலா லென்னகத்து மோனஞா னுபவம்
பற்றியது சுத்தப் பரசிவவாழ் வாகவே.

417. பரத்துவத்தி லன்றிப் பராற்பரமா வுள்ள
திரத்துவவாழ் வில்லாத் திறங்காட்டி யாண்டான்
தெரித்தபர மார்த்தத் தெளிவான மோனந்
தரித்தவகந் தற்பரமாத் தானலர்ந்து வாழ்ந்ததே.

418. ஊரூரா நான்சென் றுழலாது சுத்தவருட்
பேரூராம் மோனவெளிப் பெற்றி துலக்கினன்;
காரூரா வுண்மைக் கடவுளியற் செம்பதச்சீ
ரூரு டியன்றேன் உலப்பிலா வாழ்வுபெற்றே.

419. சொந்த வியல்பாத் துலங்கு சொரூபத்திற்
*பந்தமுத்தி யில்லாப் பரமார்த்தத் தத்துவவாழ்
வந்த ரியாமி யருள்விளக்க மாகவகத்
துந்தலா னுண்மை யுரம்பெற் றொளிர்ந்ததே.

*பந்தமுத்தி – பந்தமும் முத்தியும் என உம்மைத் தொகை.

420. ஊனப்பா ழூடமுந்தி யூழ்த்துக் கிடந்தேனைத்
தானொப்பா ரில்லாத் தனித்தலைவன் கைதூக்கி
ஞானப்பா தத்துக்கு நல்லுரிமை நல்கியதால்
மோனப் பதவாழ்வு மூண்டதென் னுள்ளத்தே.

421. பெற்றவருட் பேற்றின் பெருமாட்சி உள்ளொளிசேர்
வுற்றவருக் கன்றி யுரூர்க்கு விளங்காது;
*நற்றவமுற் பாக்கியமா நண்ணும் பெருமிதவாழ்
வற்றமறக் கூடிற் றனுபவமா வுள்ளத்தே.

*நற்றவமுற் பாக்கியம்- நற்றவமாகிய முற்பாக்கியம்; தவமும் தவமுடையார்க்காகும் (திருக்குறள் 262) என ஆன்றோர் கூறுவது காண்க.

422. வீட்டு நலஞ்செய் விழுத்தயமா வென்னகத்து
நாட்டுகுரு பாதமெய்ஞ் ஞானவருட் பத்தியால்,
காட்டுமற்றொன் றற்றவோர் கைவல் லியசொரூபப்
பீட்டுயர்வாழ் வுற்றேன் பிரம்மபதச் சீர்மையிலே.

குறிப்பு:—பத்தியால் உற்றேன் எனக் கூட்டுக; காட்டு - எடுத்துக் காட்டு.

423. தணவாத சுத்தசிவத் தன்மை விளங்க
வுணர்வான மோனவொளி யுள்ளத் தனைவால்
அணவா வதீத வருட்பரவாழ் வுற்றேன்
புணர்வோடு போக்குவர வில்லாப் புலத்தே.

424. என்புத்தி யைத்தன் னியற்செம் பதத்திற்சேர்த்
தன்புணர்வு பொங்க வருளியவென் னுண்டவனல்
வன்புறுபொய்ம் மாய மனக்கட் டவிழ்தலிற்பே
ரின்பப் பராவமுதா வெய்தியதென் வாழ்க்கையே.

425. வேண்டலுற்ற சுத்த விழுப்பதவாழ் வுள்ளத்திற்
காண்டலுற்றேன் மிக்கவருட் கைவல் லியமாக;
ஆண்டவன்சீ பாதத் தவிர்தலுற்ற வுண்மையா
லீண்டவெழு ஞான வியற்பரமோ னத்தாலே,

குறிப்பு:—மோனத்தாற் காண்டலுற்றேன் என வியையும்.

426. உளங்கிளர்வுற் றோங்க வுடையான் பதத்தில்
விளங்கலுறப் பெற்ற விசுத்தஞா னத்தாற்
களங்கமாம் பாசக் கலக்கமற வுண்மை
வளங்குலவு வாழ்வா மலர்ந்ததென் மெய்யே.

427. மோனவுணர் வேசொரூப முத்திக்கு வாயிலா
நானறியத் தேற்றியமெய்ஞ் ஞானகுரு நாதனால்
யானழியப் பெற்றுங் கிதயமூ லத்திலருள்
வானப் பரசொரூப வாழ்வு மடுத்ததே.

குறிப்பு:—இதயமூலம் - இதயமாகிய மூலம்; மூனைப் பற்றொழிந்த மோனவுணர்வே வுண்மை யான இதயமென்றறிக.

428. சிந்தனு மோகத் தெருமரல்விட் டோய்ந்தொழிய
விந்தைசேர் நோக்கால் வெளியொளியா வாண்ட
[பிரான்
சொந்தனூா ஞான்ம சொரூபமாத் துன்றலால்
அந்தமிலா மோன வருள்வாழ் வடைந்ததே.

429. ஊனப் பதங்களிலே யோடியுழன் றேனுளத்து
ஞானப் பிரானை நம்பனெனக் குள்ளுணர்வாய்
மோனப் பெரும்பதமா முத்தி துலக்கலால்
வானப் பரசொருப வாழ்வு மடுத்ததே.

430. ஞான சொரூபகுரு நாதனருட் போதத்தால்
ஊன வுபாதியுணர் வோயவென் னுள்ளத்து
மோனந் தெளிந்த முகூர்த்தமே சுத்தவருள்
வானப் பரசொருப வாழ்வு மலர்ந்ததே.

431. தானுக வென்னைத் தலைப்பெய்த தம்பிரான்
மோனனு பூதியா முற்றலா லென்னகத்து
மானுபி மான மயக்கப்பா ழாணவந்தீர்
வானுன சுத்தவருள் வாழ்வு மலர்ந்ததே.

432. காண்டலரு சாந்திசால் கைவல் லியவரசா
வாண்டான் சொரூப வருட்சிற் பதப்பெருவாழ்
வீண்டலா வுள்ளத் தியல்பே சதாசிவமா
மூண்டதுநா னென்னும் முனைப்பற் றெழியவே.

433. திண்ணியவாழ் வாகச் செழித்ததுசாற் றப்புகிலோ
எண்ணினும்பல் லெண்ணமவை யெண்ணுதை
[வாவொழியத்
தண்ணிலவா மோனந் தழைத்ததுசற் போதவருட்
புண்ணியன்சீ பாதவொளி பொங்கலாற் புந்தியிலே.

434. கழிக்கலுற்று மோகமனக் கற்பனையை நான்கண்
விழிக்கலுற்ற வாற்றல் வெறுவெளியில் வாழ்வு
செழிக்கலுற்றேன், சுத்த சிவமயமா விஞ்சைக்
கழற்கணுற்ற ஞானக் கலையின்மாண் பாலே.

குறிப்பு:—கலையின் மாண்பாலே கழிக்கலுற்று எனப் பூட்டுவிற் பொருள் கோள் பற்றிப் பொருள்கொள்க.

435. உண்மையா வென்னை யுடையான் சொரூபவருள்
வண்மைசேர் பார்வை மலர்ந்தாங் கிதயத்தில்
விண்ணினுமிக் கான்ற வியன்பரமோ னுபவத்
திண்மைசேர் வாழ்வு சிறக்கச் செழித்ததே.

436. ஏங்க வெனக்கினிமேல் யாதும் விதியில்லை;
ஊங்குக்கு மூங்கா முடையான் சொரூபவருட்
பாங்கனு வாழ்வு படைத்தேன் பசுபாசத்
தீங்ககன்ற சுத்தசிவச் சிற்பரமோ னப்பசத்தே.

437. ஊத்தையகப் பேயை யுருக்குலையச் செற்றகுரு
மூர்த்தி சொரூபமா மூண்டவென் னுள்ளுணர்வு
தீர்த்தமாப் பொங்கு சிவானந்தத் தெண்கடலாப்
போர்த்தலால் வாழ்வு புதுப்பொலிவு பெற்றதே.

438. ஆண்டகுரு நாத னருட்சே வடிப்பெருவாழ்
விண்டலாவ் யானென்ற வென்னை யிழந்தொழிந்
மூண்டமோ னுபவ முத்தித் துலக்கத்திற் [தேன்
காண்டலுற்றே னுண்மைக் கடவுட் பரத்துவமே.

439. தன்னந் தனிப்பரமாத் தங்குறுமெய்ஞ் ஞானவருட்
பொன்னம் பலமாகப் புந்தியிற்புக் காண்டபிரான்
தன்னடியில் வாய்த்ததுமெய்த் தற்பரசாம் ராச்சிய
துன்னுபெரு வாழ்வு சொரூபவியல் பாகவே. [மாத்

440. அடியே னடைந்தேன் அபரிமித சாந்தித்
தொடையான வாழ்வு சுபாவமா நாளும்,
தடையாது மற்றபெருந் தாமமென் னுள்ளத்
துடையா னருளா லொளிர்வுற்ற தாலே.

441. சித்தக் கலக்கமறச் செற்றொளிர்மெய்ஞ் ஞானவருட்
கர்த்தற் கடியனேன் கண்டுகொண்டேன், ஓர்த்துணர்
புத்திக் கமுதமாப் பொங்குமோ னுபவ [வோர்
முத்திச் சிறப்பான முற்றமுழு வாழ்க்கையே.

442. ஒருபரஞ் சோதியா வுள்ளத் தொளிர்சற்
குருபரன், கூர்சிற் குறியே குறியா
உருவிளங்க லூற்றுங் குளத்தே திளைத்தேன்
இருவிகற்ப மற்ற வியற்பரவாழ் வீண்டே.

443. அணையாக வுள்ள வருட்சிற் பிரான்றுட்
புணையாற் பிறவிப் புணரி கடந்தே
இணையாது மற்ற வியற்செம் பதத்திற்
புணர்தலுற்றேன் சுத்தசிவ போகவாழ் வீண்டே.

444. வித்தகமெய்ஞ் ஞான விலாசத்தா லாண்டவன்றுட்
குய்த்த வுணர்வூ டுபயமனக் கற்பனைதீர்
சுத்தவருட் சிற்பரமாத் தொக்க வியல்வாழ்வாற்
பொய்த்தது நா னென்னுமனப் புன்கலக்க வாதனையே.

445. என்னதுநா னற்ற வியற்சிற் பரசொருப
நன்னிதியா வுள்ளத்து நண்ணியமெய்ஞ் ஞானகுரு
சன்னிதியே யாகத் தழைத்தபரந் தாமத்து
மன்னியபே ரின்பவருள் வாழ்வையென்னென்
[றோதுவதே.

446. கர்த்தத் துவப்பாழ்ங் கலக்கமறக் கூர்ஞான
மெய்த்தவமா வென்னுள் விளங்கலுற்ற வாண்டவன்
சுத்தவருட் போத சொரூபத் துலக்கத்தால் [செய்
வித்தகவாழ் வான விமுத்திநலஞ் சார்ந்ததே.

447. செய்வகையா தொன்றுந் தெரியா துழன்றேனுக்
குய்வருளி யாண்டவென் னுத்தமசற் போதகுரு
மெய்வளமிக் கான்றபத வித்தகவாழ் வுள்ளத்தே
பொய்வளர்வெம் பாசப் புணர்ப்பறக்கை கூடியதே.

448. அண்மையிலே யென்னையழைத் தாண்டவன்கண்
[ணோக்கங்கூர்
உண்மை யுணர்வொளியா லுள்ளத் திருளொழியத்
திண்மைசேர் சுத்தவருட் சிற்பரமோ னனுபவ
வண்மைசேர் வாழ்வு வளங்கிளரப் பொங்கியதே.

449. கற்பனைதீர் சுத்தவருட் கைவல் லியசொருபத்
தற்பனென் றன்னை யறவிழிப்பித் தாண்டவன்செம்
பொற்பதவாழ் வுள்ளத்திற் பூரணமாப் பொங்கலாற்
றற்பதமுந் தொம்பதமு மொன்றிற் றசிபதத்தே.

குறிப்பு:—'தற்பதமுந் 'தொம்பதமு மொன்ருச்
சமைந்ததே' எனவும் பாடம்.

450. உண்ணு ரமுத வொளிப்பிழம்பா வுள்ளத்து
நண்ணலுற்ற சுத்தசிவ ஞானனு பூதியால்
எண்ணவிரண் டற்ற வியற்பரமோ னனுபவ
வண்ணவருள் வாழ்வு வசீகரமாப் பொங்கியதே.

451. உள்ளங் கவர்ந்த வுடையான் சொருபவருள்
வெள்ளமே யாக விளங்குமோ னனுபவத்
தெள்ளமுத போகந் திளைத்தலுற்ற வாழ்வெனக்குக்
கள்ளமற்ற சுத்தசிவக் கைவல்ய மானதே.

452. மற்றனைத்துந் தாந்துறக்க வல்லார்க்கே யன்றிமற் [றேருக்
குற்றிடவொண் ணுத வொராஞேர் பரமார்த்தப்
பெற்றிசேர் கைவல்யப் பெம்மானைப் பெற்றதால்
உற்றிடமற் றெருன் றுமின்று வுற்றதருட் பூரணமே.

453. மருட்சிப் பிழைசேர் மயக்கமறச் சாடி
யருட்சிற் பரமான வாண்டா னெனைநன்
கிரட்சிப்ப தாலே யினிதுவாழ் கின்றேன்
வெருட்சியற்ற சாந்த விசுத்தப் பதத்தே.

454. இத்தனுவே தான்போ லியங்கு மகங்கார
புத்திக் கலக்கமறப் போக்கியென் னுள்ளத்து
முத்தி சொருபமா மூண்ட பிரானருளிற்
சித்தங் கரைதலாற் சிற்பரவாழ் வொன்றியதே.

455. ஊனவகப் பாழினின் றுய்வித்த வாண்டவன்மெய்ஞ்
ஞானவருட் காட்சி நலங்கிளரப் பொங்கலால்,
ஈனக் கலக்கமில்லே ரின்பவுணர் வூறுசுப
வானக் கடவுளியல் வாழ்வு மடுத்ததே.

456. இன்னதெனச் சுற்றுமனத் தெண்ண வியம்பவொணு
அன்னதே தன்சொருப மானஞா ஞனுபவ
வன்னமா மோனம் மடுத்தலாற் சிந்தையற
மன்னுமியற் கைவல்ய வாழ்வு துலங்கியதே.

457. எண்ண மெனக்கென்ப தின்றி யிறைபொருட்டாய்ப்
பண்ணிய புண்ணியப் பைங்கூழ் பலித்தலாற்
றண்ணிழ லாகத் தழைத்தொளிர் சாந்தபத
வண்ணமா மோனவியல் வாழ்வு மலர்ந்ததே.

458. பாசா ணவங்குலேயப் பற்றலாற் சுத்தசிவ
நேசானு பூதியென் னெஞ்சத் துணர்வொளியா
வேசாட லான வியாகுலங்கெட் டான்றமகிழ்த்
தேசாடு மோனவருட் சேமவாழ் வுற்றதே.

459. ஞானுனு பூதி நலங்கிளர வுள்ளம்புக்
கானுத மோன வருட்கடலா வாண்டபிரான்
கோனுக நானவற்குக் குற்றேவல் செய்குடியாத்
தேனுன சுத்தசிவச் சிற்பரவாழ் வுற்றதே.

460. பாதகமே நாளும் பயிற்றியகா ராணவப்பா
ழாதனே னுள்ளத் தகந்தைமனக் கற்பனு
பேதமறப் பேர்ந்தொழியப் பெம்மான் சொருபவருட்
போதவொளி பாய்தலாற் பூரணவாழ் வுற்றதே.

461. ஏதமறத் துன்று மியற்பரசாம் ராச்சியப்பே
ருர்தலுற வுள்ளத் தடியேனே யாண்டபிரான்
பாதவருட் போதம் பரத்தலாற் பாசமனக்
கேதமில்பே ரின்பக் கிளரொளிவாழ் வுற்றதே.

462. தோன்றுன சுத்த சொருபப் பிரான்பதத்து
நன்றுன மோனமெய்ஞ் ஞானுனு பூதியால்
ஒன்றேடு மொட்டா வொளிவெளியே யென்னுருவாப்
பொன்றுத சுத்தவருட் பூரணவாழ் வுற்றதே.

463. இன்று வொழியநா னென்னுமகப் பேயைபடர்த்
தொன்றுன வுண்மையா வுள்ளோனென் னுள்ளத்து
நன்று வொளிர்சொருப ஞானுனு பூதியாற்
பொன்றுத சுத்தவருட் பூரணவாழ் வுற்றதே.

464. உள்ளினே னுள்ள மொளிபெறக்கண் ணோக்கிய [மெய்த்
தெள்ளியோன் சேவடியிற் சித்தந் திளைத்தலாற்
கள்ளமா மோகக் கலக்கமறப் பேரின்ப
வெள்ளமா மோன வியன்பரவாழ் வுற்றதே.

465. ஏதங் கலவாப்பே ரின்பவிறை யானெனுமுன்
மாதங் கலந்த மனோமயப்பாழ்ங் கற்பனை
பேதங் கெடுத்தவருட் பெம்மான் சொரூபசற்
போதங் கிளர்மவுனப் பூரணவாழ் வுற்றதே.

466. ஊற்றமா யாதோ ருறுதியும்போற் றுதேனுக்
காற்ற வொணாத வரும்பிறவித் துன்பமற
மாற்றும்பே ரின்பவருள் வாலறிவா வாண்டவனுற்
சாற்ற வொணாத சதாசிவவாழ் வுற்றதே.

467. சுத்த வறிவே சொரூபமாத் துன்றுபர
வித்தையா லென்னியலே வீடா விளங்கலுற்றேன்
அத்தன் சொரூப வருள்வெளியே யாகவென்
மெய்த்திறங்கண் டேனறிவில் வித்தகவாழ் வுற்றதே.

468. போத சொரூபவருட் புண்ணியனைச் சேர்ந்ததாற்
பேதைமைசேர் மாயவகப் பேய்த்தனம்விட் [டோடவகத்
தாதரமெய் யன்புணர்வவ் வாண்டவற்கே முற்றாட்
ஏதமில்பே ரின்ப வியற்பரவாழ் வுற்றதே. [டாய்

469. உள்ளலரு மாய வுருவொளித்தோற் றங்களிற்பட்
டுள்ளலயர்ப் பாக வுருத்துழல்யா னென்னுமனக்
கள்ளமற்ற மோனவியற் காட்சியாற் பேரின்ப
வெள்ளவருட் பூரணமா வித்தகவாழ் வுற்றதே.

470. பாதத் தியானத்தாற் பாச வகந்தைமனக்
கேத மனைத்துங் கெடவே கிருத்திரிய
பேத விகற்பப் பிழைதீர்சுத் தாத்துவித
போத சொரூபவருட் பூரணவாழ் வுற்றதே.

471. மிக்கவருட் பார வியோமச் செழும்பதத்திற்
சிக்கெனவென் னுள்ளஞ் செறிதலால் வாசனையாற்
றெக்கபசு பாசத் தொடர்பான பாழ்மயக்கப்
பொய்க்கனவி னின்றுசிவ பூரணவாழ் வுற்றதே.

472. வஞ்சவே தாள மயக்க வகந்தையறச்
செஞ்செவே யாண்டசிவச் செம்பிரான் சேவடிக்
னெஞ்சமே கோயிலா நிற்றலாற் பாசமற்ற [கென்
விஞ்சைசே ரின்பவருள் வீட்டியல்வாழ் வுற்றதே.

473. துன்று சிவத்துவமே சுத்த சொரூபவியல்
பென்றறிய வுள்ளத் தியைந்த வநுபவத்தாற்
பொன்றியது ஜீவமயற் போதமுனைப் பானவெறி;
மன்ற வருள்வெளியே வாழ்வா நிரம்பியதே.

குறிப்பு:—ஜீவ. . . வெறி — மயக்கவெறியான ஜீவ போத முனைப்பு.

474. ஒட்பநுட்ப மான வுணர்வொளியா மோனவருட்
பெட்பிலே யுண்மைப் பெருமை விளங்கலால்
கொட்புறுபொய்ம் மோகமனக் கூறுபா டற்றொழியத்
திட்பமுற வூன்றியது சிற்பரவாழ் வுள்ளத்தே.

475. மித்தையுணர் வான விகற்பமனக் கற்பனைதீர்
சுத்தவுணர் வான துரீய விழுப்பதத்திற்
பெத்தவுணர் வானவகப் பேய்முனைப்பற் றேய்தலாற்
புத்தமுத போகவருட் பூரணவாழ் வுற்றதே.

476. சுத்தப் பரசிவத்திற் சொக்கலுற்றே னுள்ளுணர்வில்
முத்தித் துலக்கொளி மூண்டு பாத்தலாற்
சித்தக் கலக்கமறச் சிற்பரமோ னநுபவப்
புத்தமுத வாழ்வுசிவ போகமாய்ப் பொங்கியதே.

477. பாசவிருட் பாழுலகப் பார்வை பரமசிவ
நேசவருட் பார்வையா நெஞ்சத்து மாறலாற்
பாசவித்தை யாங்கற் பனைபேத மாயமல
மாசறுத்து வாழ்ந்தேன் மனோதீதச் சொர்பதத்தே.

குறிப்பு:—மாறியது திருவருட்சித்திரத்தால் என்க; மாயாமல மென்பது மாயமல மென விகாரப் பட்டது.

478. எண்ணவொண்ணாத வியற்சிற் பரசொருப
வண்ணம் பரவெளியா வைகுசுப மோனநிலை
*பண்ணவொண் ணாதசிவ பாக்கியவாழ் வாவகத்து
நண்ணியதே நானடைந்த ஞானானு பூதியே.

* பண்ணவொண்ணாத—ஜீவ போதத்தாற் செய்ய முடியாத.

479. சித்தத்தே சித்தாத் தெரியவிளங் குந்துரிய
சுத்தத்தே மோகமனச் சூதற் றொழிதலால்
முத்தத் துவமான மோனப் பரசொருப
சித்தத் துவந்தெளிந்தேன் சிற்பரவாழ் வுற்றதே.

480. ஈனந் தருபா ழியற்கையறப் பொங்குபர
வானங்க மாக மலர்ந்த சொருபத்தால்,
த்னஞ்சேர் பாசமனே ஜீவியச்சிந் தாகுலந்தீ
ரானந்த மோன வருள்வாழ் வடைந்ததே.

குறிப்பு:—பொங்கு சொரூபம், மலர்ந்த சொரூபம் எனத் தனித்தனியே கூட்டுக.

481. காண வொணாதவருட் கைவல் லியமாக
மாண விளங்குசிவ வண்பதத்தில் யானெனுமவ்
வீணகந்தை வெட்கி விளிந்தாங் கனந்தசுப
வேணவா வான வியன்பரவாழ் வுற்றதே.

482. துருவலுற்றார் காணத் துலங்கு சொருபத்
திருவடிமெய்ஞ் ஞானந் திறம்பாத் திறத்தால்
மருவியது சுத்தவருள் வாழ்வென் னகத்தில்
வெருவலுற்ற மோக விகற்பமறக் கெட்டே.

483. துங்கமெய்ஞ் ஞான சொருப கடாட்சத்தால்
அங்கமகம் புத்திசே ராசாபா சங்குலையப்
பொங்குசிவ ஞானானு பூதிசே ருள்ளத்து
மங்களவாழ் வாக மலர்ந்ததியற் பூரணமே.

484. ஊனக் குறிகுணத்தோ டொட்டியொட்டி யூழ்த்து
[ழல் பொய்ந்
நானற் றொழிய நசிப்பித்து மெய்ஞ்ஞான
மோனக் குறிவிளங்க முற்றலா லுள்ளத்தில்
வானப் பரசொருப வாழ்வு மலர்ந்ததே.

485. மோன வடிவா முதிர்ந்து பழுத்தமெய்ஞ்
ஞானவாழ் வாவகத்து நண்ணியது, நானென்னு
மீன வகந்தை யிறக்க வெழுந்தொளிர்வ
தான துரீயசொரு பான்மானு பூதியே.

486. நானென்னும் மோக நவைசே ரகந்தையறத்
தானென்ற வூற்ற சதாசிவமெய்த் தன்மையால்,
வானவெளி யாக மனந்தெளிந்த சுத்தவருட்
போனகமே வாழ்வாப் பொலிந்ததனு பூதியே.

487. அத்துவித வுண்மை யறிவொளியாற் சீவபரப்
பொய்த்துவித மோகமறப் பொங்குசொரு பப்பதத்திற்
செத்தொழிய நானென்னுஞ் சித்தக் கலக்கமயல்
வித்தகவாழ் வாக விளைந்ததருட் பூரணமே.

488. சுத்தவறி வான துரீய சொருபத்தில்
வைத்த மனத்தால் வளங்குலவு வாழ்வுற்றேன்;
மத்தவகங் கார மனக்கற் பனைபேதம்
அத்தனையும் மங்க வருள்வெளிமீப் பொங்கியதே.

489. சிலுகுமகங் காரச் செருக்கின் முனைப்போ
டுலக மயக்க மொழிதலாற் பாசக்
கலக மகன்ற கருத்திற் கலந்த
தலகில்பே ரின்ப வருட்பர வாழ்வே.

490. சுத்தவறி வாகத் துலங்கு சொருபவருட்
புத்தமுத மோனானு பூதிப்பே ரின்பமகத்
தெத்தனமில் லாத வியல்வாழ்வாப் பொங்கலாற்
பொய்த்தகுவெம் பாசமனப் புன்பிறவித் துன்பமே.

491. ஞானங் கடந்தநிலை நண்ணவுற நானெனும்பா
ழூனங் கெடுத்த வொளிப்பிழம்பாற் சிற்பரமெய்
வானமே யென்னுருவா வைகுமகண் டானுபவ
மோனந் திளைக்க முழுமுதல்வாழ் வுற்றதே.

492. ஊனக் கலக்கமா வுற்ற பிறப்பிறப்பாந்
தீனப் பரிதாபச் சிந்தா குலஞ்செற்று
நானற் றியல்சொருப ஞானானு பூதியா
வானப் பெருமிதமெய் வாழ்வு மலர்ந்ததே.

493. யானென் றெழாதே எனதெனமற் றொன்றிலும்பா
ழூனக் கலக்க முறாதே சுயசொருப
மோனப் பரமா முயங்கு சதாமுத்தி
ஞானவருள் வாழ்க்கை நலங்கிளரப் பொங்கியதே.

494. அறிவான மோன வருட்பிழம்பா வுள்ளத்
துறைவா னடித்தலமே யுண்மைவீ டாகக்
குறைவில்பே ரின்பக் குலாவாழ் வடைந்தேன்
வெறிசே ரகந்தைமனோ வேகமற் றேனே.

495. கள்ளமனக் கற்பனா பேதங் கரந்தொழிய
உள்ளந் தெளியவிளங் குண்மையுணர் வொட்பத்
வெள்ளமா மோன விகத்தப் பரானுபவத் [தால்
தெள்ளமுத வாழ்வு திளைத்தேன் சிவத்திலே.

496. எங்கு மெலாவற் றிலுந்தா னிருந்தொளிர்மெய்த்
துங்க சொருபவருட் சோதிப் பதத்திலெனக்
கங்கமகம் புத்தி யகன்றொழிவா லுள்ளத்து
மங்கள வாழ்வு மடுக்கக் கிடைத்ததே.

497. அறிவோ டளைந்தமெய் யன்புத் திறத்தாற்
பிறிவில்பே ரின்பவருட் பேறு படைத்தேன்;
குறையுறு வாறு குணாதீத மோன
நிறைவே சொருபமா நின்றொளிர்கின் றேனே.

498. கள்ளவகங் காரமறக் கண்டித் தகமகமென்
றுள்ளுணர்விற் சேர்ந்த வுதாரசிவத் தன்மையெனக்
கெள்ள வொணாத வியற்சிற் பரசொருப
வெள்ளவருள் வாழ்வா விளங்கமீப் பொங்கியதே.

499. இருப்புணர்வின் பான வியற்பரமென் னுள்ளத்
தருட்பரவாழ் வாக வடைந்ததால் வேற்று
விருப்பமெழு மோக விகற்பக் கனாவிற்
றிருப்பமுற்றேன் சுத்த சிவக்கே வலத்தே.

குறிப்பு:—கனாவின் — கனாவினின்று.

500. நீடியமெய்ஞ் ஞானநிலை நேர்படவுங் காணவொண்ணு
தோடியது மோக வுலகியலா வுற்றகன்று;
பீடியல்வாழ் வானவருட் பேரின்ப மோனநிலை
கூடியது வஞ்சமனக் கோலா கலமற்றே.

501. விண்மையே போன்ற வெறும்பாழை யூடுருவி
நுண்மைசேர் கைவல்ய நோக்கமே மீக்கூர
உண்மை விளக்கமா வுள்ள சொரூபவருள்
வண்மைசேர் வாழ்வா மணங்கிளர் வுற்றதே.

502. ஓதான மாக விளங்கு துரீயமே
யாதானுந் தன்னிலிரண் டில்லா வியற்பரமாம்
போதானு பூதி புணர்தலா லுள்ளத்தில்
வேதாந்த மோன வியன்பரவாழ் வெய்தியதே.

503. தன்னையே யன்றித் தனக்கோர் சரணில்லை
என்னவே யுள்ளுணர்வில் யானறிந்து பற்றினேற்
கென்னையே யன்றிமற் றின்றென் றிலாதவருள்
வன்னமாற் வாழ்வு மலர்ந்தது தன் மாண்பதத்தே.

504. தீன வகப்பேய்ச் செருக்கான சிச்சடப்பா
ழூனக் கலக்கமற வுள்ளம் பரவெளியா
ஞானவருட் பார்வை நலங்கிளரப் பொங்கலால்
ஈனமில்பே ரின்ப வியற்பரவாழ் வுற்றதே.

505. ஆனு வறிவா வவிர்சொரூபப் பூரணத்தில்
யானே யெனதே யெனாங்கரக்கக் கற்பனையாத்
தானுனை தன்னையன்றித் தன்னின்மற் றென்றுமற்ற
வானுன சுத்தவருள் வாழ்வு மலர்ந்ததே.

506. யானென்னும் மோக விகல்கெட் டொழியவிளங்
கான்ம சொரூப வருட்டிறத்தா லுள்ளத்து
மோன சமாதி முகக்கவே பேரின்ப
வானமா வென்னுண்மை வாழ்வு மலர்ந்ததே.

507. பரமான வுண்மையைப் பற்றலா லுள்ளத்
துரமான மோன வுணர்வுறலின், மிக்க
வரமான சுத்தவருள் வைப்பிலே முற்றத்
திரமான வாழ்வு சிறக்கலுற் றேனே.

508. கள்ள வகந்தைமனக் கார்கரக்க நானுனென்
றுள்ளமே யாக வொளிர்சொருபக் காட்சியால்
வெள்ளவருள் வாழ்வு விளைந்ததுபே ரின்பமா
வுள்ளலற வுள்ளத் துபசாந்தி பொங்கவே.

509. பேர்ந்தகல மோகவகப் பேயுணர்வு நானுரென்
றோர்ந்தறிந்த வுண்மை யுணர்வாலே ஒட்பங்கூர்
சாந்தவருள் வாழ்வு தலைப்படப்பெற் றேனுக்கு
மீந்தவாழ் வெல்லாமும் மாயா விலாசமே.

510. நிரந்தர மானமெய்ஞ் ஞேய வுணர்வால்
அரந்தைதீ ரின்ப வருட்பெரு வெள்ளம்
பரந்தியல் வாழ்வு படைத்தலின் முற்றக்
கரந்தது மோகக் களிசேர் கருத்தே.

511. கேடு படாதசிவக் கேழ்கிளர்மெய்ஞ் ஞானவொளி
பாடு படாமலருட் பார்வையாற் பற்றகத்தில்
வீடுபே ருக விளங்கு வியோமபதப்
பீடுசேர் வாழ்வு பிரம்மானு பூதியே.

குறிப்பு:—பிரம்மானு பூதியே தம்மகத்தில் விளங்க லுற்ற பீடுசேர் வாழ்வென்பதாம்.

512. மறவியறத் தன்னுள் மடுத்த மனத்தின்
செறிவில் விளங்கு சிவானுபவ மோன
நிறைவிலே சாந்தி நிரம்பலுற்ற வாழ்வு
வெறிசே ரகந்தையற்ற வெட்டவெளி தானே.

513. மறதியற்ற சுத்தவருள் வாலறிவா முண்மை
யுறுதிசேர் வாழ்வியல்பா லுன்றலா லுள்ளத்
தறுதியா வற்றதுமூ லாணவப்பாழ் மோகக்
கிறுதுசே ராட்சியாங் கேதக் கனவே.

514. அன்பான சுத்த வருட்சிற் பரத்திற்பே
ரின்பான மோன வியல்வாழ் வடைதலால்
வன்பான பாச மயக்கமனத் தூடெழூஉந்
துன்பவின்பக் கற்பனு தொந்தங் குலைந்ததே.

515. இன்பதுன்ப மற்ற வியற்சிற் பரசொருப
நன்பதத்து நண்ணியமெய்ஞ் ஞானு பூதியால்
வன்புறுவெம் பாச மயக்கமனப் பீழைதீ
ரன்புசிவ மான வருட்பெருவாழ் வார்ந்ததே.

516. திண்மைசேர் சுத்தசிவச் செல்வம்பா விப்பதோர்
அண்மைத்தொண் டான வருட்பெரும் பாக்கியத்
உண்மை யுணர்வா வுளங்கிளரப் பொங்குசுப [தால்
வண்மைசேர் வாழ்வெனக்கு வைகுந்த மானதே.

517. பாட்செய் வளாவிப் பயனிலியாப் பாழ்படா
தாட்செய்ய லுற்றே னகம்புக் கொளிவளரச்
சாட்சியா வுள்ளவருட் சைதன் னியசொருப
மாட்சியா லுள்ளத்தில் வாழ்க்கை மலிந்ததே.

518. சுத்த வருளே துணையாக வுள்ளத்து
மத்தமனக் கற்பனையை மாற்றினே னுக்குமற்
றத்தகவே நிற்குஞா னுன்மசொரு பானுபவப்
புத்தமுத வாழ்வுசிவ பூரணமாப் பொங்கியதே.

519. கற்பனையின் மூழ்கிக் கலங்கியநான் சுத்தவருட்
சிற்பாத்துக் கூனுச் செழித்தவனு பூதியாற்
றற்பரமா மோனந் தலையெடுக்க வாழ்கின்றேன்
பொற்புறுபூ மாவாகப் பொங்குசிவ பூரணத்தே.

520. துங்கமெய்ஞ் ஞானத் துலக்கத்தாற் பொல்லாத
அங்கமகம் புத்திமா ருட்ட மகன்றிடலும்
பங்கமில்வாழ் வாகப் பயில்வதெனக் குள்ளுணர்விற்
பொங்கு சொரூபவியற் பூரணமாந் தற்பரமே.

521. பிரமாத மானவகப் பேயகலத் துன்றும்
பரமான சுத்தவருட் பார்வையால் உள்ளந்
துரமான சாந்தி யுணர்வுருவா வுண்மைத்
திரமான வாழ்வு திளைத்தலுற் றேனே.

522. எண்ணவோ வொண்ணு வியற்சிற் பரசொருபக்
கண்ணுன சுத்தவருட் கைவல்யங் காப்பாக
நண்ணலா லுள்ளத்து நானேர் கவலையின்றித்
தண்ணு ரமைதி தழைக்கவாழ் கின்றேனே.

523. அருளே கதியா வடையலுற் றேனுக்
கிருளற் ெறுழிய விதயம் மலர்வால்
அருள்வெளி யான வதிஷ்டான வுண்மைத்
தெருள்வாழ் வடைந்து சிறக்கலுற் றேனே.

524. பரிசுத்த மானவருட் பார்வையா லுள்ளம்
துரியப் பரவெளியாத் துன்றுங்காண்; முற்ற
விரியப் பரந்து விளங்கு சொரூப
வரியப் பதத்திலருள் வாழ்வுபெற் றேனே.

525. அலங்கலராப் போல வகந்தைவடி வாகக்
கலங்கலுற்ற மோகங் கழன்றொழிய உண்மை
துலங்கலுற்ற சுத்தத் துரியப் பதத்தில்
வலங்கெழுமோ னனுபவ வாழ்வுபெற் றேனே.

526. சிவத்திலே யுண்மை தெளிந்தேன் உலகை
விவர்த்தமாத் தேறி வியாமோகந் தீர்ந்தேன்
கவத்தமா வுள்ள சொருபானு பூதித்
தவத்திலே வாழ்க்கை தழைக்கப்பெற் றேனே.

527. உன்மாத மானபா ழூத்தையகப் பேயகலச்
செம்மாண் பரசொருபச் சீர்மை விளங்கலாற்
சும்மா விருத்தல் சொரூபானு பூதியாப்
பெம்மா னருளாற் பெருகவாழ் கின்றேனே.

528. உள்ளற் கரியவொன்றென் னுண்மையே யாகவகந்
தெள்ளத் தெளியத் தெருட்டியசற் போதவருள்
வள்ளற் பிரான்சொருப வாழ்வடையப் பெற்றேன்மற்
றெள்ளத் தனையு மெதும்பொருளா வுள்ளேனே.

529. சிவசொருப மோனவருட் செல்வச் சிறப்பாம்
பவிசருளி யாண்ட பரஞ்சோதி நோக்கம்
கவசமா வென்னுயிரைக் காத்தலால் யாதோ
ரவசமற்ற வாழ்விதயத் தார்தலுற் றேனே.

530. கொழுத்தவஞ் ஞானக் குழாங்கெட் டுடைய
அழுத்தமா நோக்கலுற்ற வாண்டவன்கண் [ணோக்காற்
செழித்தமெய்ஞ் ஞான சிவானுபவ மோனம்
பழுத்தவருள் வாழ்வு படைக்கலுற் றேனே.

531. ஒருவடிவோ பேரோ வுருதசிவந் தானே
குருவடிவா வென்னைக் குறிக்கொண்ட வாற்றால்
மருவிடயா தொன்றுமற்ற மாண்பதமா மௌனத்
திருவடிவாழ் வுள்ளஞ் செழிக்கலுற் றேனே.

532. கல்லாத மோகக் கசட்டறிவாற் கற்பனையைப்
புல்லியவென் பாசவகப் பூட்டறச்செற் றுண்டவனால்
சொல்ல வொணாத சொருபஞா னுனுபவச்
செல்வமுறு வாழ்வு செழிக்கப் படைத்தேனே.

533. சுயமாத் துலங்கு சொருபப் பரத்தி
லியல்பான சாந்தி யிசைந்த மனத்தால்
அயலாக மான்ற வனைத்து மொரேதன்
மயமான தெய்விக வாழ்வுகண் டேனே.

534. உலக்கலற்ற சுத்த வுணர்வுருவாய்ச் சற்றுங்
கலக்கமற்ற மோனவருட் கைவல்யந் தானே
இலக்கமா வுள்ளத் தியல்சொருப வாழ்வு
நலக்க வெனக்கினிது நண்ணலுற் றேனே.

535. அவிச்சைக் கலக்க மறக்கெட் டொழியச்
சிவச்சிற் பரத்திற் றெளிந்த மனத்தால்
அவச்சொற் படாத வருள்வெளி யான
சுவச்சப் பரவாழ்வு தோய்ந்துநின் றேனே.

536. ஆளாக வென்னையுவந் தாண்டபிரான் பின்னர்ச்சின்
ஞளேற விட்டென்னை நல்லுணவாத் தான்புசித்தான்
தாளே கதியாகச் சார்ந்தேன் சதாசிவத்தின்
மீளாத சுத்தவருள் வித்தகவாழ் வுற்றேனே.

537. தவத்திஞ லன்றித் தலைப்படவொண் ணுத
சிவத்திலே யென்னறிவைச் சேர்த்த பிரான்பாற்
சுவத்தமா மன்னு சொருபவாழ் வுற்றேன்
அவத்தைமோ கஞ்சே ரவலமற் றேனே.

538. அருக்கனு வுள்ளத் தவிர்சொருப ஞான
குருக்களான் மோனக் குறிதுலங்கப் பெற்றேன்;
பெருக்கமார் சுத்தப் பிரம்மானு பூதி
தரிக்கவுற்ற வாழ்வு தலைப்படலுற் றேனே.

539. கோச வகந்தையறக் கூர்விழிவா ளோச்சியமெய்த்
தேசஞு லுண்மை தெளிதலால், ஐம்புலப்பா
ழாசையற்ற மோனஞா ஞனுபவச் செம்பதத்தில்
வாசமார் பேரின்ப வாழ்வு படைத்தேனே.

540. இருள்வளஞ்சேர் வெம்பா ழிடைப்பட் டழுங்கும்
மருள்வளஞ்சேர் மாய மனங்கரக்க வுள்ளத்
தருள்வெளியாப் பொங்குமென் ஞண்டான் சொருபப்
பொருள்வளஞ்சேர் வாழ்வாற் பொலிதலுற் றேனே.

541. உண்ணு ரமுதவுணர் வூற்று வுளக்கினர்மெய்க்
கண்ணு ரமுதன் கழலே கதியாக
உண்ணு டுணர்வா லுதாரப் பரமசுப
விண்ணுட்டு மோன வியன்பரவாழ் வுற்றேனே.

542. என்னு ருயிரா விதயத் தியல்சொருபன்
றன்னு லடியேன் சதிர்த்தனன்; தன்னை நா
னுன்னுத முன்னமென் னுள்ளுணர்வா வுள்ளொளிர்
[செம்
பொன்னுனை யுற்றடியேன் பூரணவாழ் வுற்றேனே.

## எ. அருள் வாழ்வும் பயனும்

(குறள்)

543. ஊனக் கலக்கமற வோட்டியது சுத்தவருள்
வானமாத் தானனந்த வாழ்வு.

544. உள்ளங் கவர்ந்த வுணர்வொளியாந் தெய்வவருள்
வெள்ளங் கலந்த துளத்து.

545. விழுமியமெய்ஞ் ஞான விசுத்தவருட் சீர்மை
கழுமியது சித்தங் கனிந்து.

546. அருட்சிற் பதவொளியா லற்றதுநா னென்னும்
மருட்சற் பனைசேர் மனம்.

547. வண்மைசேர் சுத்தவருள் வாழ்வா மலிந்ததகத்
துண்மைசேர் மோன வுணர்வு.

548. ஆருயிருக் கோருயிரா மான்ம சொருபவருள்
வீரியமுற் றற்றேன் மெலிவு.

549. அருள்விளக்கத் தாலே யறிந்தேன் சொருபப்
பொருள்விபவ வுண்மைப் பொலிவு.

550. கிளர்மெய் யருட்பாக் கியத்தா லகத்திற்
றளர்வற்ற தின்பந் தழைத்து.

551. ஊற்றுக வுள்ளுணர்வூ றுறுசிவா னந்தவருட்
பேற்றாலே வாழ்வுமலிந் தேன்.

552. அருட்சிற் பரவாழ் வடைவாலே மோக
வெருட்சிப் படரொழிந் தேன்.

(வெண்பா)

553. தாபமெனக் கில்லேன் சதாசிவமா மோனவருட்
சீபதத்தில் வாழ்வு செழிக்கின்றேன்—தாபதராம்
பத்த ரினத்திற் பயின்றெழுகும் பான்மையாற்
சித்தமல மற்றுத் தெளிந்து.

(கொச்சகக் கலிப்பா)

554. ஆதியந்த மற்ற வகண்ட வருள்விசும்பாஞ்
சீர்திகழ்வாழ் வுள்ளஞ் செழித்தலான் மெய்ஞ்ஞான
நீதிசே ருண்மை நிலைபெற்ற வுள்ளுணர்விற்
சாதிகுலா சாரச் சரியை தணந்ததே

அ. அருட்பர சாம்ராஜ்ய அடைவு

(குறள்)

555 ஆட்சிப் பதமா வடைந்ததென் னுள்ளத்து
மீட்சியில்பே ரின்ப வெளி.

556. யானற் றெழுந்த விதயத்திற் கண்டேன்மெய்ஞ்
ஞானப் பரசொருப நாடு.

557. பரசிவ வுண்மைப் பதமா மிதயத்
தரசியல் பற்றிற் றறிவு.

குறிப்பு:—உளத்தவி சுறிஞெரு குடைநிழற்
கோவே. (அருணாசலாஷ்டகம்-7)

558. சிற்பரமா மோனந் தெளிதலுற்ற வுள்ளமெனக்
கற்புதமா வான்ற வரசு.

559. பரதெய்வ மாஞ்சிற் பதத்திலே கண்டேன்
அரதையில்பே ரின்ப வரசு.

560. தாளிற் படிந்த தலையாற் றனிக்குடைக்கீ
ழாளக் கிடைத்தே னரசு.

குறிப்பு:—அரசு – பரலோக சாம்ராச்சியம்.

561. உடையா னடியென் முடியே லடைவால்
அடைந்ததான் மீய வரசு.

562. பரசொருப ஞானவருட் பார்வையால் ஆன்ற
வரசுரிமை கூடிற் றகத்து.

(வெண்பா

563. கண்காணி தன்பொற் கழலடிக்கீழ் யானுள
வீண்காணி யாக விளக்கினான்—மண்காணி
யானவெறும் புன்புலத்தே ஞைசைக் கலக்கமற
வானரசின் மன்னினேன் வாழ்வு.

564. என்னுருவே யாக வியல்சிற் பரமணன்
றன்னருளின் மாட்சி தழைத்தலாற்—பன்னரும்பே
ரின்பவெளி யான விதயத் தரசிருக்கை
என்பவிசு யானடைந் தேன்.

565. மெய்கண்ட வாழ்வே விசுத்தவருள் வாழ்வாக
ஐயன்கண் ணேக்கா லனுபவமாய்க்—கைகண்ட
முத்திப்பே ரின்ப முழுமுதலாஞ் சிற்சொருப
சித்திப்பே ராட்சிசேர்ந் தேன்.

566. கள்ளங் கரந்தொழியக் கற்பனைதீர் சிற்பரமே
உள்ளமா வோங்க வொளிர்தலால்—துள்ளுமகப்
பேயகந்தை யற்றவருட் பேரொளிசேர் மோனவெளி
நாயகந்தா னண்ணிற் றெனக்கு.

567. சாட்சித் துவமே சதாசிவமாப் பொங்குபர
மாட்சியுறப் பெற்ற மனத்தாலே—ஆட்சியுறப்
பெற்றவுல குக்குப் பிரானு வொருகுடைக்கீழ்
முற்றரசு சேர்ந்ததென் முன்.

568. மோனப் புலத்திலே மூழ்கித் திளைத்தலால்
ஏனைப் புலம்புற்கென் றின்பமற்று—ஞானப்
பரசொருப மான பதத்திற்பே ரின்ப
வரசுரிமை பூண்ட தறிவு.

569. வஞ்சமனப் போராட்டம் மாய்ந்தொழிய வல்லரண
நெஞ்ச மெனக்கு நிலைப்படலாற்—சஞ்சலமற்
றற்புதமா மோன வருட்பே ரரசுரிமைச்
சிற்பரவாழ் வொன்றியது சீர்த்து.

570. சாந்தமா நிற்குஞ் சதிராண்மை நானுளத்தில்
வாய்ந்தொளிர வாண்டவருள் வல்லபத்தால்—வாய்ந் [தேன்
மனப்பதைப்பாம் பேயகந்தை மாய்ந்தொழியப்
தனிப்பதப்பே ராட்சி தழைத்து. [பொங்கு

571. அனந்தமா மோன வருட்சிற் பாத்தே
முனந்த வகந்தைமதி மூழ்கி—வனந்தமதே
ராச்சியப்பே ராட்சி ரசனையற்றேன் கேவலசாம்
ராச்சியப்பே ராட்சி ரமித்து.

572. தொன்றுதொட்ட போதத் துரிய சொரூபமன்றி
வென்று கொளப்பிறிதோர் மெய்யில்லை—என்றறிந்து
கொண்டவருட் காட்சியாற் கொற்றக் குடையரசாய்
அண்டமுற்று மண்டு மகத்து.

573. தோளா முழுமணியாந் தோன்ற லருட்பதத்துக்
காளாகப் பெற்ற வடிநாயேன்—கேளாத
கேள்வியா மோனக் கிளரொளிசேர் மெய்யுணர்வாய்
ஆள்வதுபே ரின்ப வரசு.

574. நானெக நின்றொளிர்மெய்ஞ் ஞான சொரூபவருள்
வானும் பரமபத வைபவமே—மோன
நடங்கிளர்மெய்ஞ் ஞான நகைத்தாலே யங்க
மடங்கலுமா முற்று மரசு.

575. ஊனமொன்று மற்ற வுதாரப் பரசிவமெய்ஞ்
ஞானவெற்றி யென்னுளத்தே நண்ணலால்—ஊனப்
பசுபாச மோகப் படைகுலையத் துன்றிற்
றசமான வுண்மை யரசு.

குறிப்பு :—மோகப் படைகுலைய ஞானவெற்றி நண்ணலால் உள்ளத்தே உண்மையரசு துன்றிற்று எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

576. அருட்பிதா வாகவென் னுண்டா னிதயத்
திருப்பதால் யான்கவலை யின்றாய்த்—திருப்பதாம்
போருகமாம் போதவருட் பொன்முடிநான் சூடி
சீருலகாள் கின்றேன் சிறந்து. [முத்திச்

(கொச்சகக் கலிப்பா)

577. உண்மையலால் யானெனதென் றூழ்த்தழுங்கா [தொட்பநுட்ப
வண்மைசேர் வாழ்வா மடுத்ததென் னுருயிருக்
குண்மைப் பிரானு வுளத்தொளிர்வோ காட்டிய [மெய்த்
தண்மைசேர் சித்தோப சாந்தசாம் ராச்சியமே.

578. உய்ந்தே னடியேன் உடையா னருளமுதச்
செந்தேன் பருகித் திளைத்தேன் சிவபோகம்;
முந்தே யருளினுன் மோனவருட் கண்ணேக்காற்
றந்தேய மான சதாசிவசாம் ராச்சியமே.

* தந்தேயம் – சுயதேசம்.

579. உள்ளற் கரிதான வுண்மையென் னுள்ளுணர்வாத்
தெள்ளத் தெளிவாத் திகழ்தரலா லுள்ளத்தில்
வெள்ள வருள்வெளியா வீச விளங்குவது
தள்ளலரு மோனச் சதாசிவசாம் ராச்சியமே.

580. உன்ன வொணுத வொருத்தனருட் கூர்மையால்
என்னதுயா னென்ன வியங்குமனப் பாசமறத்
துன்னியது சொந்த சொரூபமாத் தொன்றுதொட்ட
தன்னுரிமை யான சதோதயசாம் ராச்சியமே.

581. காரா ணவப்பாழ்ங் கலியிருள்செற் றுள்ளத்திற்
பேரா தொளிர்சொருபப் பெம்மான் சுரந்தவருட்
சீரான மோன சிவானுபவஞ் சேர்தலாற்
சாரா நின் றேன்பரம சாம்ராச் சியப்பதமே.

582. கன்மாதி சாதனையிற் கட்டுண் டுழன்றேனுக்
குன்மாத மானபா ழூத்தையகப் பேய்முனைப்பற்
றம்மா னருளா லகங்கிளரப் பொங்கியது
பொய்ம்மால் கடந்தொளிர்சற் பூரணசாம் ராச்சி [யமே.

583. பங்கமுறப் பாழ்ங்கற் பனையனைத்தும் தானவை
பங்கமுறு வுண்மைப் பரமே சொரூபமாப் [போற்
பொங்கலுற்ற ஞானா பூதியால் உள்ளத்துத்
தங்கியது கைவல்யத் தற்பரசாம் ராச்சியமே.

584. மங்கலவாழ் வாக மடுத்தென் னிதயத்துத்
தங்கலுற்ற சுத்த சதாசிவமெய்த் தத்துவமே
துங்கமதே தீத சொரூபமாக் கண்டவாம்
பொங்கியதோ ரத்துவிதப் பூரணசாம் ராச்சியமே.

585. மாணக் கிளர்ந்தவருள் வாழ்வா யிதயத்திற்
காணத் துலங்குசிவக் கைவல் லியத்தின்முன்,
பேணலுற்ற பேரவைப் பொய்க்கூத் தகன்றொழியப்
பூணக் கிடைத்ததுகும் பூரணசாம் ராச்சியமே.

குறிப்பு :— கைவல்லியத்தின் முன் அகன்றொழிய
எனவியையும்.

586. நீளத் தொழுதெழுமெய்ந் நேயத் திருத்தொண்டர்
கேளிற் கலந்திறையைக் கீர்த்திக்கப் பெற்றதால்
ஆளக் கிடைத்த தடியேனுங் கண்டவன்மெய்த்
தாளிற் படைத்த சுதந்தரசாம் ராச்சியமே.

587. வானவருள் வாழ்வு வசீகரமாப் பொங்கலுற்ற
மோனவியற் கைவல்ய முத்திப் பதந்தெளிந்தேன்;
ஊனமொன்று மில்லேன்; உணர்விற் கலக்கமில்
யானாதசான் கின்ற விதயசுவா ராச்சியமே. [வேன்

588. வெற்றறிவா வுண்மை விளங்கலுற்ற சுந்தரமாட்
கொற்றமா மோனக் குலாச்சே ரொருகுடைக்கீழ்க்
குற்றமில்பே ரின்பச்செங் கோலோச்சி யாள் கின்
அற்றமற முற்றேன் றங்கசாம் ராச்சியமே. [றேன்

589. கூழுக்குங் காடிக்குங் கூற்று முயிர்த்ததாள்
சூழக் குலவு துரீயப் பரவெளியாய்ப்
பாழைக் கடந்த பரந்தாமச் செப்பதத்தில்
வாழக் கிடைத்தபெரு மாட்சி சுயாட்சியே.

590. கேடு பாடதசிவக் கேண்மையாம் பத்தியுணர்
வீடு மெடுப்புமில்பே ரின்பப் பெருவாழ்வாக்
கூடு மனத்தாற் குலவியது மோனவியல்
விடுபே ருண வியன்பதப்பே ராட்சியே.

591. ஏனை யெதற்கு மிடமின்றி யானெனும்பா
ழூன வகப்பே யுருக்கெட் டொழியத்தன்
மோன வுணர்வு முகத்தலா லுள்ளத்தில்
வானவியல் வாழ்வா மடுந்ததுசிற் பூரணமே.

குறிப்பு :—தன் மோன வுணர்வு - சொந்த சொரூப மான மோன வுணர்வு

592. பின்னியமா மோகப் பிணக்காக் கிரந்தியறத்
தன்னியல்சோ திக்கிற் றலைப்படுசாம் ராச்சியத்தில்.
அன்னியமொன் றில்லை யகந்தைக் கலக்கமில்லை
மன்னியவாழ் வாக வளர்வதுசிற் பூரணமே.

593. சுபமங் கலவுணர்வாத் துன்று சொரூப
விபவங் கலந்த விசுத்த மனத்தால்
உபயங் கரக்க வுளத்தில் விளங்கிற்
றபயந் தருமெய் யருட்பர வாழ்வே.

குறிப்பு :— சுப மங்கல வுணர்வு—கேவல வுணர்வான சுத்தவுணர்வு; உபயம் — மயக்க மனக் கற்பனுபேதமான துவிதம்.

594. மலட்டறிவே சுத்தசிவ மாட்சியாத் தேற
நிலைத்ததுமெய்ஞ் ஞான நிருவிகற்ப நிஷ்டை;
சிலைத்தெழுவே கப்பாழ்ஞ் செருக்கற் றொழியப்
பலித்ததுசுஞ் ஞானப் பரமபத வாழ்வே.

595. மிகத்துலங்கு ஞான விபூதிசே ராண்டான்
உகத்தலா லுண்மை யுணர்வெனக்குண் டாக,
அகத்தே யடைந்ததுசாம் ராச்சியப்பே ராட்சி
புறத்திலடை பிச்சைப் *புகவுபெரு வாழ்வே.

* புகவு – உணவு.

596. வாலறிவ ஞானவருள் வள்ளல் வழங்கியதோர்
மூலபண் டாரமா முத்திப் பரவொளியால்
மாலறிவா மோக மனப்பாழ் வறுமையறச்
சாலவிளங் கிற்றிதய சாம்ராச் சியவாழ்வே.

597. குருமணியா வுள்ளங் குடிகொண்ட கோமான்
அருமைசேர் நல்லருட்சீ ராட்சியின்கீழ்ப் பெற்றேன்
கருமசங் காதக் கலக்கமறப் பொங்கும்
பரமசிவக் கைவல்யப் பார்வையொளிர் வீடே.

598. அடியனேன் வாழ்வை யலர்த்தினான் செம்பொன்
னடியே முடியாக ஆளக் கிடைத்தேன்
குடிகளா வைம்புலனுங் குற்றேவல் செய்யப்
படிமே லருட்சிற் பரசொருப வீடே.

599. அனுபவமெய்ஞ் ஞான வருள்வெளியா வுள்ளத்
தனவரதந் தங்கலுற்ற வாண்டவனை யன்றிப்
பினையெதுவும் பேணேன் பிறிதாக முற்றேன்
றனையவுமோர் தன்மயமா வாட்சிபெற் றேனே.

600. உடையா னருளே யுடைமையா வுள்ளத்
துடையேன் உலகத் துடைமைமற்றேன் றில்லேன்
அடியே னரசரின்மிக் கான்ற சொருப
வடிவிற்பே ரின்பவர சாட்சிபெற் றேனே.

601. ஒளிவளர்செம் பாதமே யுள்ளத் தெனக்குக்
களிவளர்மெய்ஞ் ஞானவருட் கண்ணாகப் பெற்றேன்
இளிவரலொன் றில்லேன் இதயவெளி முற்றத்
தெளிவியல்சாம் ராச்சியமா வாட்சிசெய்கின் றேனே.

602. நரிவிருத்த வாழ்வாகா நானெனும்பாழ் மோகக்
கரிசகற்றி யாண்ட கடவுட் பிரானால்
அரசிருக்கை யான வகஞ்சேர்ந் ததீதப்
பரசிவக்கை வல்யம் படைக்கலுற் றேனே.

603. மடியான மோக மயக்கத் தமஞ்செற்
றடியேனை யாண்ட வருள்விழிக்கூர் வாளாற்
செடியேறு வல்வினைநோய் செற்று னடியென்
முடிசூடி முத்தி யுலகாள்கின் றேனே.

604. சிவமான வுண்மை தெளிந்தேன் இதயத்
தவமான மோக வகந்தைமுனைப் பற்றேன்;
பவமான மாயவகப் பாழ்ங்கலக்கம் பேர
வவிர்மோன முத்திப்பே ராட்சியார்ந் தேனே.

605. மருவு பரஞ்சோதி வார்த்தையால் எங்க
ளுருவுசிவ மாக வுணர்ந்த நிலைக்கண்
உருவருவென் றேதுமொன் றொட்டபநுட்ப முத்திப்
பரவெளியே யாட்சியாப் பற்றலுற் றேமே.

606. ஊனக் கலக்க வுபாதியுணர் வாலெதிர்தோன்
றேனைப் பதங்க ளிகப்பமனக் கற்பனையா,
வானப் பரமார்த்த வாழ்வா மடுத்ததுபொய்ந்
நானற் றெளிர்சொருப ஞானப் பெரும்பதமே.

607. மாற்றவொண்ணுத் தன்சொருப மாண்பான வுண்மை
போற்றக் கடவசிவ பூரணசாம் ராச்சியமாத் [யே
தேற்றலுற்ற வாற்றுற் சிறுமைதீர் தற்பரமா
விற்றிருக்கின் றேனிதய வீட்டுலக வாட்சிபெற்றே.

608. மருட்புலத்திற் சென்ற மயக்கமனம் மாறித்
திருப்பமுற்ற நோக்கத் திறத்தால் இதயத்
திருப்பதுமற் றொன்றுமில்லை என்சொருப மான
வருட்பரத்தை யன்றிநா னாட்சிசெய்வ தஃதே.

609. ஆட்டி யலைத்த வகப்பேய்க்கோட் டாலையறக்
கூட்டியெனை மோனக் குறிவழிக்கே யாண்டபிரான்
வீட்டியல்வாழ் வாக விளங்கவகத் தூடெனக்குக்
*காட்டிக் கொடுத்ததேற் கைவல்ய மாண்பதமே.

* காட்டிக் கொடுத்ததேல் – காட்டிக் கொடுத்த தென்னுே வெனில்.

610. கூடுமோ காவரணக் கோலா கலவிகற்பத்
தூடுநா ளோடி யுழன்றமயல் கெட்டதால்
வீடுபே றாக விளங்குவதென் னுள்ளத்திற்
பீடுசேர் சுத்தப் பிரம்மகை வல்லியமே.

611. நானற் றியல்சொருப ஞானமா மோனவருள்
வானத் தரசுரிமை வாழ்வேசாம் ராச்சியமா
நூனச் சிறுமையற நோக்காலே கைவல்யத்
தானத்தி லென்னைச் சதிர்படத்தான் சேர்த்தானே.

612. பராயணமா வென்னைத்தன் பாதக்கற் றேவற்
கொராவணத்தா லேற்ற வுடையா னுவப்பால்
ஒராதனமா வுள்ளத் தவிசிருக்கை யுற்றேன்
திராதனமாம் பேரரசின் சிங்கா தனமே.

குறிப்பு:—ஆவணத்தால் – ஆவணம் எழுதிக் கொண்டாற் போல் (ஆவணம்-அடிமைப் பத்திரம், உரிமையோலை); பேரரசு—சாம் ராச்சியம்.

613. தோழமைசே ராண்டான் சொரூப வருள்வடிவா
ஏழையே னுள்ளத் தியல்பா வொளிர்தலால்,
ஏழைமையா மோக வியற்கையற மெய்ஞ்ஞான
வேழவெரின் மேற்றவிசில் வீற்றிருக்க வாய்த்ததே.

குறிப்பு:—வெரிந் என்றும் பாடம்.

614. நல்வரவா வென்னகத்து நண்ணலுற்ற சுத்தவருட்
செல்வனடி செம்பொன் முடியா வணிந்தேற்கு
நல்குரவின் றுணமெய்ஞ் ஞானவள நாட்டரசு
மல்குபே ரின்பமகிழ் வாழ்வா மடுத்ததே.

615. ஊனக் கலக்கமற வுள்ளத் தொளிர்சொருப
ஞானப் பிரானுக்கே நல்லடிமை பூண்டதால்
ஏனையமற் றெல்லா வினையுங் கழன்றொழிய
மோனவெளிப் பேரரசு முற்றவகம் பற்றியதே.

குறிப்பு:—ஒளிர் சொருபமாகிய ஞானப்பிரான் என்க.

616. அன்பே சொரூபமா வாண்டவனை யான்றமெய்
யன்பா லுபாசித் தருட்பேறு பெற்றவகத்
தின்பவுணர் வான வியற்பரஞா னானுபவ
நன்பதவாழ் வுற்றதெந் நாளு மொருபடித்தே.

617. தீன மயக்கச் செருக்கறச்செற் றுனடிக்கீழ்
மோனமே முற்றமுழு முத்திப் பெருநலமாத்
தானவிர்மெய்ஞ் ஞான சமாதியாற் பேரின்ப
வானரசு வந்து மடுத்ததென் னுள்ளத்தே.

618. உடையகுரு பாத வொளியான மோனப்
படையா லகிலப் பகைப்புலமுங் கெட்டுக்
குடைநிழற்கோ வாகக் குலாவலுற்றேன் பாசத்
தடையாது மற்றசிவ சாம்ராச் சியத்தே.

619. சுத்த வுணர்வொளியாத் துன்று சொரூபவெளி
அத்த னளிக்க வடைந்தவர சாட்சிக்கு
முத்திரையா மோனம் முகக்கவகத் தீண்டியது
நித்தியவாழ் வான நிரதிசயா னந்தமே.

குறிப்பு:—சொரூப வெளியான அரசாட்சிக்கு என்க.

620. சுட்டப் படாத சொரூபமா நெஞ்சிலொளிர்
பட்டப் பிரான்கூர் பரமசிவப் பார்வையாற்
றுட்டப் பசாசமனச் சூதற்ற சுத்தவியல்
வெட்டவெளி யாட்சி விளைந்ததுமீப் பொங்கவே.

621. சொற்பரமல் லாத சுவானுபவக் காட்சியாற்
றற்பரமாத் துன்றுசிவ சாயுச் சியவியல்பெற்
றற்பனே னுய்ந்தே னருட்சிற் பரன்பதத்திற்
கற்பனை பேதக் கலக்கங் கரக்கவே.

## ௬. சிற்பர வாழ் வுறல்

(குறள்)

622. அயலற்ற சுத்த வருட்சிற் பரமா
வுயிர்தளிர்த்த துண்மை யுணர்ந்து.

# 11. சாட்சாற் காரம்

## க. குரு சொருப சாட்சாற்காரம்

(குறள்)

623. கூறுபா டற்றவருட் கோமான் சொருபமாத்
தேறவிளங் கிற்றென் னுரு.

(வெண்பா)

624. அவனருளா லுண்மை யறிவிக்கப் பட்டாங்
கவனுருவே யென்னுருவா வார்ந்து—சிவனொடுநான்
செவ்வனமே யொன்றித் தினைத்தலாற் றீர்ந்தொழியா
வெவ்வனமே யாயிற் றெனக்கு.

625. ஆண்ட வருள்வடிவென் னுகத் தணைதலா
லீண்டவருந் துன்ப மெனக்கில்லை—மூண்டொளிர்
தெய்வச் சிவபதத்திற் செம்மாந் தமைந்தே [மெய்த்
ருய்வுற்று வாழ்ந்தே னுயிர்.

626. அறிவாக வென்னுயிரை யாண்டா னருளின்
குறியான வுண்மைக் குலாவாற்—பிறிவில்சுத்
தான்ம சொருப வடிவே யென்னுருவா
நானடைந்தேன் ஞானச் சதிர்.

627. என்னியல்யா தென்றுநா னெண்ணுது சுட்டறிவாற்
றன்னியலே யெண்ணித் தடுமாற—என்னிதயத்
துன்னியலே யென்னியலென் றுள்ளுணர்வா
தன்னியமன் றுவொளிர்கின் றுன். [மோனமளித்

628. வித்தகமா வென்று விளங்குசிவக் கேவலவாழ்
வொத்தொளிர வென்றுமென் னுள்ளத்தே—சுத்தத்
திருவருளா லென்சொருபந் தேற்றலால் யான்று
னிருவருமொன் றுனே மிசைந்து.

629. அவனியில்வந் தன்போ டருட்பதத்துக் காண்ட
சிவனியல்சிந் தித்த திறத்தால்—இவனியலவ்
வாண்டா னியலா யருட்பே ரமுதவொளி
யீண்டலுற்ற துள்ளத் தினிது.

(கொச்சகக் கலிப்பா)

630. மோனானு பூதி முடித்துக் கொடுத்தவிறை*
தானே சதாசிவமாத் தங்கியவென் னுள்ளுணர்வின்
யானென வென்னை யிழந்தவனுக் கின்பவருள்
வானு மவன்சொருப வாழ்வடையப் பெற்றேனே.

* இறை – குரு

631. இருவே றிலாது வியற்செம் பிரானங்
குருவே சொரூபமாக் கூர்த்தலால் உள்ளக்
கருவான மோனக் கலாதீத வுண்மை
வெருவா விதத்தால் விளங்கலுற் றேனே.

குறிப்பு:—கலாதீதமான மோனவுண்மை யென்க

632. ஒன்றுவிட் டொன்றுபற் றானமனப் பாசமறத்
துன்றுசற் போதத் துரிய சொரூபவருட்
குன்றமா வென்னுட் குலவலுற்ற கோமானோ
டின்றுநா னென்னை யிரண்டறக்காண் குற்றேனே.

633. திருவடி ஞானந் தெளியவென் னுள்ளத்
துருவிட நோக்கிய வுண்மைப் பிரான்சற்
குருவடி வாகக் குலவிய மோனப்
பெருவடி வாகப் பிறங்கிநின் றேனே.

634. துரீயமா வுன்ன சொரூபானு பூதி
மரீய வுணர்வு மகத்தாங் கதியா
அரீய வியல்வாழ் வளித்த பிரானை
யொரேபடி யாக வுணர்ந்துநின் றேனே.

635. அவனேயென் னுவியாக் கண்டே னருளால்;
அவனேநா னென்னா னனுபவ மார்ந்தேன்;
அவனே பரமார்த்த வாழ்வான மோனத்
தவமாவென் னெஞ்சிற் றழைத்தொளிர்கின் றானே.

636. திருவிலா மூடச் செருக்கனே னுள்ளத்
துருவிலே பாழை யுடற்றியகன் றேக்காற்
பொருவில்சற் போதம் புணர்த்தியவ்வன் னாண்டான்
சொருபமே யாகத் துலங்குகின் றானே.

637. கல்லாத மூடக் கருத்திற் கடிவிடம்போற்
பொல்லா வகந்தைப் புழுக்கமறத் தானென்றே
எல்லாமாத் தான்று மியற்பரஞா னந்தெரிந்த
நல்லான் சொருபமே நம்முருவா நண்ணியதே.

638. ஆண்டவனென் னாண்டவனென் னாண்டவனென்
[னாண்டவனென்
றாண்டவனை நாளுமனு சந்தித்த வாற்றலவ்
வாண்டவனே யென்சொருப மாவலரப் பெற்றேனுக்
காண்டவனை யல்லா தயலில்லை யாதுமே.

639. ஒன்றான வுண்மை யுணர்வா லென்னுள்ளத்தைப்
பொன்றாத சுத்தவநட் பூமியாக் கண்டானைத்
தோன்றான சொந்த சொருபமாக் கண்டுகொண்
என்று விரண்டா விகவோ மினியாமே. [டேன்

640. ஆண்டவனு மென்னை யறிந்தேனுக் கென்னியலவ்
வாண்டவன்மெய் யோடுதா தான்மியமாத் தானவிர்
பூண்ட வுபாதி யுணர்வுகளாற் பேதமன்றி [வாற்
ஆண்டவனின் யான்வே றலேன்பரமார்த் தத்திலே.

குறிப்பு:—இருக்கு மியற்கையா லீச ஜீவர்கள், ஒரு
பொருளேயாவ ருந்திபற, உபாதி யுணர்
வேவே றுந்திபற. (உபதேசவுந்தியார்-24)

641. சிவமா விளங்குபர தெய்வப் பிரான்பாற்
சிவமயமெய் வாழ்வு செழிக்க வெனக்குட்
சிவமயமா மோனந் தெளிதலுற்றேன் காணச்
சிவமயமே யாகத் திகழ்பவெல் லாமே.

642. எண்ணமற வுள்ளத் திலகு சொருபவருட்
கண்ணுடையே னாகக் கடைக்கணித் தாண்டபிரான்
விண்ணினும்விண் ணாக விளங்கு பரஞ்சோதி
வண்ணவொளி சூழ மலர்ந்ததெங் கெங்குமே.

643. சுழிய லரசைத் துரிய சொரூப
விழியா வகத்தில் விளங்கலாற் சற்றும்
பழியிலா மோனப் பரசிவத்தை நானென்
னழிவிலே கண்டே னயல்காண் கிலேனே.

644. தனுகரண மோகந் தனைந்தொழிய உள்ளத்
தனுபவமெய்ஞ் ஞான மடைவித்த வாண்டான்
றனது சொரூபமன்றித் தேருங்காற் சற்று
மெனதுவடி வாகமற் றேதுங்கா ணேனே.

645. தன்னை யடைந்தேனுக் கெல்லாமுந் தானேயாத்
துன்னியசற் போத சொரூபகுரு நாதனின்மற்
றன்னியமொன் றேரேன் அருட்சிற் பரவெளியே
தன்னியலா வென்னகத்துத் தான்றழைத்த வாற்
றிலே.

646. தெள்ளமுத மான சிவானுபவச் சீர்மைசே
ருள்ளமே யான வுணர்வுருவா முண்மையால்
எள்ளளவுந் தன்னின்றிரண் டில்லா வியற்பரமா
வுள்ளுணர்விற் கண்டே னுடையான் சொரூபமே.

### உ. சிவ சாயுஜ்யம்

(கொச்சகக் கலிப்பா)

647. யானென வென்னை யிடமாகக் கொண்டுதனக்
கானு வறிவா வவிர்சொரூபன் காட்டியமெய்ஞ்
ஞானனு பூதி நமச்சிவா யப்பொருளே
தானென தன்மையகஞ் சாரத் தழைத்ததே.

### ட. சிவ சொரூப சித்தி

(வெண்பா)

648. மோனக் குறியிலே முத்தியுணர் வொன்றான
யானிற்க லுற்ற வியல்வடிவே—ஊனக்
கவல்சேர் துவிதக் கலக்கமில்லை யல்லச்
சிவசொரூப சித்தித் திறம்.

குறிப்பு: —இயல் வடிவாக யான் நிற்கலுற்றதே என
ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக.

(கொச்சகக் கலிப்பா)

649. அற்புதமா வுள்ளத் தவிர்சொருப சந்நிதியிற்
கற்பனை சத்தி கழன்றொழியக் கண்டநான்
சிற்பரமா மந்தச் சிவசொருப மேயன்றி
அற்ப மனோமயப்பொய் யாகவுழல் ஜீவனன்றே.

குறிப்பு:—அற்ப ஜீவன் என இயையும்.

## ௪. சிவ சாட்சாற் காரம்

(குறள்)

650. உள்ளத் தொளிர்சொருப வுண்மையிலென் கள்ள
தெள்ளத் தெளிந்தேன் சிவம். [மறத்

651. கற்பனை மோகக் கலக்கமறத் துன்றியது
சிற்பரா னந்த சிவம்.

652. புந்தி பொலிந்தேன் புலக்கலக்க மானமயற்
சிந்தையறத் தீர்ந்தேன் சிவத்து.

653. செருக்கற் றொழிவாற் சிவத்திற் செழித்த
துருக்கமா மெய்யன் புணர்வு.

654. அறிவிலே யென்னை யறக்கரைத்த மோனச்
செறிவிலே கண்டேன் சிவம்.

655. வெளியா விளங்கு விசுத்த சொருபத்
தெளிவா லடைந்தேன் சிவம்.

656. இருள்கரக்க வுள்ளத் திலகியது சுத்தத்
தெருள்வடிவ மான சிவம்.

657. ஒளிவெளியா வுள்ளத் தொளிர்தலுற்றான் மாட்டுத்
தெளிதலுற்றேன் சுத்த சிவம்.

658. தொக்கபர மாகத் துணிந்தேன் ஒளிவெளியாச்
சிக்கெனநான் கண்ட சிவம்.

659. இம்பரும்ப ரெல்லா மிகப்பவுளம் பொங்கியது
செம்பரமா வுள்ள சிவம்.

660. எம்மா னருளா விதயத் திலகியது
செம்மாண் பரம சிவம்.

661. ஒளிவளர்பே ரின்பவுணர் வூற்று வுளத்துத்
தெளியலுற்றேன் சுத்த சிவம்.

662. விரியலுற்ற சுத்த வெளியே வடிவாத்
தெரியலுற்ற துண்மைச் சிவம்.

663. கள்ளக் கலக்கமறக் கைவல்யத் தற்பரமாத்
தெள்ளத் தெளிந்தேன் சிவம்.

664. சித்தந் தெளிந்தேன் சிவத்திலென் னுண்மையுணர்ந்
தத்தகவே யார்ந்தமைந் தேன்.

665. அவத்திலே மாழ்கலுற்ற வற்பனேன் சுத்த
சிவத்திலே கண்டேன் சிறப்பு.

666. சுவத்தமா வுள்ள சொருபத்திற் றோய்ந்தேன்
சிவத்துவமா ருண்மைச் சிறப்பு.

667. பரசிவத்தில் வாழ்வு படைத்தலா லுள்ளத்
தொரசைவற் றோய்ந்த துணர்வு.

668. திருவருளாற் சித்தந் தெளிந்தாங் களைந்த
துருவுசிவ மான வுணர்வு.

669. மோனப் பரசிவமா முற்றலால் யானெனும்பா
ழீனமறப் பெற்ற தியல்.

670. பெற்றவருட் பேற்றுற் பெருகதெனக் கொன்றின்று
வுற்றதகத் துண்மை யுணர்வு.

671 உண்மை யுணர்வா லுயிர்க்கின்றே னுக்குமற்
றண்மையிலு மண்மை பரம்.

குறிப்பு:—"ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வானம் நணிய துடைத்து" என்னும் குறள் இதனோடு ஒப்புநோக்கி யுணரத் தக்கதாம்.

672. மோகவகைப் பேயை முடித்தபரஞ் சோதியால்
*ஏகசிவத் தன்மையுற் றேன்.

* ஏக சிவத் தன்மை—சிவத்தோடேகமான தன்மை.

673. சிவமே சொரூபமாத் தேறத் தெளிந்தேன்
அவமே யழிந்து படேன்.

674. தான்றனு வுள்ளசிவ தத்துவமே மன்றவகத்
தியான்றனு வேய்ந்த பொருள்.

675. தெளிதலுற் றேன் சுத்தசிவச் செம்பொருளென் [னுள்ளத்
தளைதலா லாண்டா னருள்.

676. உள்ளதே நானென் றுணர்ந்தே னெழிந்ததெங்கோ
கள்ளமன மாயை கரந்து.

677. சாந்தியிலே கண்டேன் சதாசிவத்தை; நானதுவா
வார்ந்தியல்பா நின்ற தகத்து.

678. சிவத்திலென் னுண்மை தெளிந்ததாற் சீவத்
துவத்திலெனக் கில்லை தொடர்பு.

679. திளைத்தலாற் சித்தஞ் சிவத்திலே சற்றுங்
களைத்திலேன் கானற் புலத்து.

680. தெள்ளத் தெளிந்த சிவமேசெம் பொற்கிழியா
வுள்ளத் தியைந்த துயிர்க்கு.

குறிப்பு :—அனுபவ விளக்கம் முதற்பிரிவு செய்யுள் 1681-ஐயும் இங்கு வாசித்துணர்க.

(வெண்பா)

681. அதனினும் வேறோ ரதிசயமின் றுவோங்
கதுவே பரமா வறிந்தேன்—அதன்மெய்
யறிவொளியா லன்றோ வனைத்துப் பிறவு
முறுவனவாழ் வென்றோர்ந் துளத்து.

682. ஆண்ட சிவமேநா னாக வனைதலால்
ஈண்டுசச் சித்தாம்பே ரின்பமயன்—பூண்ட மனக்
கேதமெனக் கில்லேன் கிழங்கா மகந்தைமதி
மாய்தலா வில்லேன் மடம்.

(கொச்சகக் கலிப்பா)

683. பவமான மோகப் பகற்களைத் தீர்தத்
துவமான மோனத் துரிய சொரூபச்
சிவமே பகல்போற் றெளிந்தமெய்ஞ் ஞானத்
தவமா வகத்துத் தழைத்தபெரு வாழ்வே.

684. களிவளர்வெம் பாசமனக் கற்பனை பேத
மனையலுற்ற வாணவப்பா ழற்றொழிய வுள்ளத்
தொளிவெளியாப் பொங்கலுற்ற வுண்மையிலே
தெளியலுற்றேன் சுத்த சிவக்கே வலமே. [முற்றத்

685. ஊன வகப்பா முணர்வா மகந்தையோ
டேனை யெலாமு மிகந்தொழிய மெய்ஞ்ஞான
யானையா வுள்ளத் தியல்சொருப மோனவருள்
வான மனைதலால் வாழ்வுசிவ மானதே.

686. கற்பனைதீர் மோனக் கருவாம் பரமார்த்தப்
பொற்புறுமெய்ஞ் ஞானானு பூதி பொருந்தலால்
தற்பரவாழ் வான சதாசிவமே என்னியல்பாய்
அற்பமனப் பொய்க்கலக்க மற்றொழியப் பெற்றதே.

687. அஞ்ஞான மான வனர்த்தமனக் கற்பனைதீர்
சுஞ்ஞான மான சொரூப விலாசத்தாற்
பொய்ஞ்ஞான மோகமறப் போக்கியசற் போதவருட்
செஞ்ஞாயி றானசிவச் சீர்மை செழித்ததே.

688. உள்ள வயர்க்க வுணர்விலெனக் கொன்றுமில்லை;
கள்ளமற்ற சுத்தவருட் கைவல் லியமாக
வுள்ளந் தெளிந்த வுணர்வான மோனத்தில்
வெள்ளப் பரமசிவ வேட்கையீ டேறியதே.

689. எண்ணவிரன் டற்ற வியற்கே வலசொருப
வண்ணமா மோனம் மலர்ந்தவருட் சிற்பதத்திற்
கண்ணிமையா வுண்மை கலத்தலாற் சார்ந்ததுமெய்த்
திண்ணெனவு சான்ற சிவாத்துவித வண்மையே.

690. சற்போத மான சதாசிவத்தில் யானதுவா
நிற்பதா லுண்மை நிலைகண்டு கொண்டேனுக்
கற்புதவாழ் வாமவ் வதீதநிலை எஞ்ஞான்றுந்
தப்பா தியல்பாத் தழைத்தொளிர் கின்றதே.

691. பரம சிவத்திற் பதிந்த மனத்தாற்
பரம சிவமயமாப் பற்றிற்று வாழ்க்கை
பரமசிவப் பார்வையகம் பற்றலால் அந்தப்
பரமசிவப் பான்மையே பற்றிற் றுலகே.

692. உள்ளபரி சுத்த வுணர்வான வுண்மையிலென்
கள்ளமறு மாயங் கழன்றொழியக் கைவல்ய
*வெள்ளவெளி யாக விளங்கலுற்ற மோனநிலை
தள்ள வொண்ணாத சதாசிவமெய்த் தன்மையே.

* வெள்ளவெளி-வெறுவெளி, சுத்தவெளி.

693. சுத்தவருட் பார சொரூபப் பரவெளியிற்
புத்தமுத வுண்மைப் புலங்கண்டு வாழ்வேனுக்
கத்தகவே மிக்க வனந்தசிவச் செம்பதமா
வொத்தியல்வ துள்ளத் துபசாந்தி பொங்கவே.

694. பாழிற் கிடந்து பதைத்தேன் குருபாதக்
கேழிற் பயின்று கிளர்ந்த சமாதியூ
டாழப் படிந்த வகத்தி லவிர்ந்ததெனக்
கூழிகளுக் கூழியா வுள்ளசிவப் பான்மையே.

695. அகிலபா ரங்களுந்தாங் காண்டா னருளே
புகலாக வாழுமென் புந்திப் புலத்தில்
விகலமற வென்று விளங்கியது போகப்
பகலிரவு பற்றுப் பரமசிவ மாண்பே.

696. அறிவாக வுள்ளத் தவிர்சொரூப மோனக்
குறியே குறியாக் குலாவலால் வாழ்விற்
செறிவான சுத்த சிவானுபவங் கண்டேன்
வெறிசே ரகப்பேய் விளியக்கண் டேனே.

697. செம்பாபா வுள்ள சிவந்தைமறந் தூணப்பா
ழைம்புலவா வாங்கனலூ டாழ்ந்தழிந்த பேதை [யேன்
எம்பெருமான் காட்டியபே ரின்பவருட் செந்நெறி [யால்
உம்பருங்கா ணாதவொரு நுட்பவொட்பங் கண் [டேனே.

698. உளைந்துழன்ற மோகப்பா ழூத்தை யகந்தை
விளிந்தொழியத் துன்று விசார விளைவாத்
தெளிந்த சொரூபவருட் சீர்மையா ழுள்ளத்
திளைந்தவனு பூதி யபாரசிவந் தானே.

குறிப்பு:—நானா ரெனமனமுள் (உள்ளது நாற்பது 30) என்ற செய்யுளின் கருத்து ஈண்டுச் சித்திக்கத் தக்கது

699. குறிகுணந்தீ ருண்மைக் குலாவா வகத்திற்
பிறிவறநிற் கின்றவருட் பெம்மான் சொரூப
நிறைவுணர்வு தன்மயமெய்ஞ் ஞேயநிஷ்டை யாகச்
செறிதலுற்றேன் சுத்தசிவச் சீர்மைபெற் றேனே.

700. மருண்ட மயக்க மனத்தாற் கலங்கி
வெருண்ட வகப்பேய் வெறிவிட் டொழிவால்
இரண்டறத் தீர்ந்த வியற்சிற் பரயாத்
திரண்ட சிவத்திற் றிளைத்தலுற் றேனே.

701. தெளிந்தபரஞ் சோதித் திருவருளாற் றேற
விளைந்தசிவ ஞான விபூதிசேர் மேம்பா
டளைந்தவகந் தானே யகண்டசிவ வாழ்வாந்
திளைந்தேன் சிவோகவுண்மை தேர்ந்தமைந் தேனே.

702. தெய்வத் திருவருட் செல்வப் பரசிவங்
கைவரச் சிந்தை கசிந்து கரைந்துகச்
சைவப் பழமாச் சமைந்ததென் ளுருயிர்
பொய்வரு மோகப் புலன்கள் புலம்பவே.

703. சிவத்திற் பிறந்தேன் சிவத்தில் வளர்ந்தேன்
சிவத்திற் செழித்தேன் சிவத்திற் பழுத்தேன்
சிவத்திற் களித்தேன் சிவத்திற் றிளைத்தேன்
சிவத்திற் சிவமாச் சிறக்கவுற் றேனே.

### ௫. சோணகிரி பரசிவ சாட்சாற்காரம்

(குறள்)

704. அண்ணு மலையா மதீத சொருபமெனக்
கண்ணுமலை யாயிற் றகத்து.

(கொச்சகக் கலிப்பா)

705. வீணனே னை வெறியனே னுக்கருளால்
வேணவா முற்ற விளங்கியபே ரின்பவியல்
ஆணவமா மோக வகப்பாழைச் செற்றெரிர்செஞ்
சோணகிரி யான சொருபப் பரசிவமே.

### ௬. சொரூப சாட்சாற்காரம்

(குறள்)

706. ஆண்டகுரு நாத னருட்சே வடியிலெனக்
கீண்டியது சொந்த வியல்.

707. செவ்வே விளங்குசிவச் செம்பொருளான் சொச்சொ
தெவ்வேறு பாடு மிலேன். [ருபத்

708. ஒன்றான வுண்மை யுணர்வால் இரண்டென்று
மின்றா விளங்கலுற் றேன்.

709. ஒன்றாக வுள்ள *வொருத்தன்பா லுற்றேற்கவ்
வொன்றாக வொன்றிற் றுணர்வு.
* ஒருத்தன் — ஒப்பற்றவன்.

710. சுத்தமெய்ஞ் ஞான சொரூபமே நாட்டமா
வொத்தியல் கின்ற துணர்வு.

711. ஆண்டபரஞ் சோதியில்பா னற்றேறிவாற் சிற்பரமா
வீண்டியதென் னுண்மை யியல்.

712. துலங்குபரஞ் சோதி சொரூபனால் உள்ளத்
திலங்கியதென் னுண்மை யியல்.

713. ஆன்ம சொரூப வருள்வெளியே வீடாக
யான்மருவ லுற்றே னியல்.

714. ஆன்ம சொரூபமே யாக விளங்கியது
பூன்ற சிவச்செம் பொருள்.

715. சுத்தவருட் போத சொரூபானு பூதியிலே
பொய்த்ததுவிட் சேபப் புலம்.

716. கலந்த சொரூபவியற் கைவல்ய வாழ்வால்
மலர்ந்ததுநன் கென்புன் மனம்.

717. அறிவு தெளிந்தமைந்தாங் கான்ம சொரூப
நிறைவு துலங்கிற்று நெஞ்சு.

718. அறிவாக நீடு மமுத சொரூப
நிறைவாக நின்றதென் னெஞ்சு.

719. அறிவுண்மை யானசுத் தான்ம சொரூப
நிறைவுணர்வே யாயிற்று நெஞ்சு.

720. அறிவு துலங்கலா லான்ம சொரூப
நிறைவு துலங்கிற்று நெஞ்சு.

721. அருட்பூ ரணமா வவிர்சொரூப வுண்மைப்
பொருட்பொலிவு பொங்கிற் றுளத்து.

722. இன்புணர்வா முண்மை யியல்விளங்கிற் றுண்ட
ரன்பருளா லேயென் னகத்து. [வன்சுடி

723. துரியவடி வான சொரூபமா வுள்ளத்
தரியவியல் சோபித் தது.

724. அற்றமற்ற வுண்மையா வாண்டவனை யென்னுருவாப்
பற்றலுற்றேன் ஞானப் பதத்து.

725. சுத்தப் பரவெளியாத் துன்று சொரூபவுணர்
வத்தன்பா லித்த வருள்.

726. கள்ளமற்ற வுள்ளமாக் கண்டுகொண்டேன் பேரின்ப
வெள்ளமா மென்மெய் வடிவு.

குறிப்பு:—வடிவு உள்ளமாம் வெள்ளமாக் கண்டு கொண்டேன் என ஏற்றபெற்றி மாற்றிக் கொள்க.

727. அன்றென் றெழிய வனைத்துமே வாலறிவா
வொன்றியதென் னுண்மை யுரு.

728. பரத்தி லகந்தை பறிபோய வாற்றுற்
பரத்தியலே யாயிற் *றுரு.

* உரு - சொரூபம்

729. இற்றென் றறிந்தே னிதயத் தனுபவமாப்
பற்றற்ற வுண்மைப் பரம்.

730. தக்காங் கொளிர்சொருப சாட்சாற்கா ரத்திலெனக்
கக்கார மாயிற் றறிவு

731. சுவத்தவியல் வாழ்வு துலங்கலுற்றேன் சுத்த
சிவத்திலென் வாழ்வு தெளிந்து.

732. அதுவே பரமார்த்த மாக வறிந்தேன்
எதுவாக வுள்ளேனோ யான்.

குறிப்பு :—யான் எதுவாக வுள்ளேனோ அதுவே எனக்கூட்டுக

733. சுத்தவெளி யாகத் துலங்குசொரு பானுபவம்
மெய்த்தவமுற் றுற்ற விளைவு.

குறிப்பு :—முற்றுற்ற - முற்றம் பெற்ற

734. தன்சொருப வுண்மை தலைப்பட் டொளிர்தலான்
முஞ்சியது மோக முனைப்பு.

735. சிவமா வியல்சொருபத் தேற்றத்தாற் போயிற்
றவமான மோகவகப் பேய்.

(வெண்பா)

736 சுத்தவறி வான சொரூபவருட் கேவலமே
தத்துவமா வுள்ளந் தரித்தலால்—மத்தவகப்
பேயறிவாம் பேதமனப் பிழைசேர் கற்பனையற்
றோய வெளி யாயிற் றுரு.

737. நீடும் பரஞான நிட்டையாற் றன்சொருபம்
கூடும் படியெனக்குக் கூட்டினான்—மூடுமகக்
காரிருளா மோகங் கழன்றொழிய மெய்ஞ்ஞானப்
பேரருள்கூர் தெய்வப் பிரான்.

கொச்சகக் கலிப்பா

738. உற்றதோ ருண்மை யுணர்வால் விளங்கியது
முற்றமுழுச் செம்பொருளின் மோனப் பெருந் [தன்மை;
அற்றொழிந்த நானெனும்பா பூரணவத்தாற் சிற் [சொருபம்
பற்றியது தான்றுணும் பான்மை விளங்கவே.

739. குறைந்தழுங்கும் மோகக் கொடும்பாட் டகந்தை
யிறந்தொழிய வுள்ளத் தியல்பா விளைந்தேன்,
அறிந்தவறி வெல்லா மறியாமை யாகத்
திறந்தவெளி யேயாத் தெளிந்தொளிர்தன் மெய்யே.

740. வென்றுமற் றெல்லா விவிதமனக் கற்பனையும்
பொன் றயலே தீதமாப் பொங்குசிவ பூரணமாய்
என்றுமென் னுள்ளத் தியல்பா விளங்குவது
துன்றுசுற் போத சொரூப விலாசமே.

குறிப்பு :—பொனற வென்று என விகையயும்.

741. எங்கும் பரந்த வியற்பரமே யென்னுருவாத்
தங்கஞா னனுபவந் தன்றலா னுள்ளத்திற்
பங்கமில்வாழ் வான பரந்நாமங் கண்டுகொண்டேன்
மங்கி யொழிந்ததுபோயம் மாயா விலாசமே.

742. நானே னெனக்குளறு ஞானமஞ் ஞானமாய்
மானபி மான மயக்கமறப் பொன்றவகத்
தானத மோன வருட்சிற் பரமேமெய்ந்
நானாக நண்ணிற்று ஞானனு பூதியே.

743. கிஞ்சித்துஞ் சிந்தைக் குலேச முறுமலென்
னெஞ்சத் தருளா நிறைந்தபரஞ் சோதியால்
வஞ்சக் கருக்கண்டு மாழ்குமுறக் கத்தினின்று
தன்சிற் பதவெளியிற் சார்ந்தேன் விழித்தலுற்றே.

744. சிந்திப் பரிய சிவாத்துவிதச் செம்பதத்தா
டுந்துமுனைப் போய வொடுங்கலுற்ற வுள்ளுணர்வாற்
புந்திப் புலத்திற் பொலிய விளைந்ததுதன்
சொந்தத் துரீய சொரூபானு பூதியே.

745. அத்துவித மானகத் தான்மை சொரூபத்தில்
மற்றனைத்தும் முற்றமலே மாயமாங் கற்பனையாப்
பொய்த் தொழிய வெண்ணியல்சற் போத வருள்
[வெளியா
வொத்தியன்ற தெல்லாவற் றூடுமொருங் கக்கலந்தே.

746. இருட்சிப் படுபா ழிடைச்சித் திரமார்
மருட்சர்ப் பனேயின் மயங்கிக் கலங்கும்
வெருட்சிப் படரற் ருழிய விளங்கிற்
றருட்சிற் பரமெய் யகச்செம் பொருளே.

747. நலந்தீங் கிலாதமெய்ஞ் ஞான சொரூபப்
புலந்தெளிந்த வாற்ருற் புலம்ப லகன்றேன்;
கலந்த சொரூபக் கடவுளியல் வாழ்விற்
புலந்துமற் றெல்லாப் புலன்களும்போ யிற்றே.

748. அறிவான தன்னே யலாதுமற் ருென்றும்
இறையளவு மற்ற விதயத் துறைவாற்
பிறிவேது மற்ற பிரம்ம சொரூப
நிறைவா மனுபூதி நீடிற் றியல்பே.

749. ஒன்ரு வகிலமொடுங் கொட்பநுட்ப வுண்மைநிலே
தொன்ருன சுத்தத் துரிய சொரூபமென்பர்;
நன்ரு விதயத்து நண்ணலுற்ற தந்தநிலே
பொன்ருத சுத்தவருட் பூரணவாழ் வாகவே

750. தொன்றுதொட்ட சுத்த சொரூபங்கூர் மோனவருள்
வென்றியின்மாண் பாகவியல் வித்தகமெய்ஞ் ஞானத்
[நாற்
கன்றுமனச் சிச்சடப்பொய்க் காழ்ப்பாங் கிரந்தியற
வொன்றியது சொந்த வொளிவெளியா முண்மையே.

751. அன்றியொன் றற்றசுத் தாத்துவிதக் கைவல்ய
நன்ரென்ற லுற்றமெய்ஞ் ஞானனு பூதியால்
வென்றிசேர் வீடா விளேந்ததென் ருருயிருக்
கென்றென்று மொன்ரு வியல்சொருபச்
[செம்பதமே.

752. வாஞன சுத்தவருள் வைப்பா மிதயத்தில்
யானே யெனதே யிலாத வியல்வாழ்வா
மோனனு பூதி முகத்துலுற்ற வுள்ளுணர்வாற்
ருனே பரமார்த்தத் தத்துவமாக் கண்டேனே.

753. கடவுட் பரசொருபக் கைவல் லியத்திற்
படர்வுற்ற வெல்லாம் பகற்கனவா மங்கத்
தொடர்வுற்ற ஞான சொருபானு பூதிக்
கடலிற் கரைந்ததக்க் காரா ணவமே.

754. இத்தனுவே நானென் றெழுந்தவகப் பேய்முனைப்பாற்
சித்திரமாத் தோன்றுந் திரிபுடபே தக்கலக்கம்
பொய்த்தொழிய வுள்ளத்திற் பூரணமாப் பொங்கியது
சுத்தவறி வான சொருபவருட் காட்சியே.

755. ஊண்ணமா நானற் றொழியிலன்றித் தன்மயமாக்
காண வொணுதவருட் கைவல் லியவியல்பா
மாண விளங்குசிவ மாட்சி மடுத்தலால்
வேணவா வான வியன்சொருபம் முற்றியதே.

756. கடவுளை யல்லாற் கதியில்லை யென்னுந்
திடவுணர்வா லுள்ளஞ் செறிந்தேனுக் காற்றக்
கடவதொன் றின்றிக் கடவுள் வடிவு
சுடர்வுற் றதுசொச் சொருபமாத் தானே.

757. ஊனமனக் கற்பனையற் றுயவிளங் கொட்பநுட்ப
மோனமே முற்றமுழு முத்திப் பெருக்கமா
நானெனும்பொய்ப் பாசபந்த நல்குரவற்
[றெய்ந்தொழிந்தேன்;
வானளவ நன்று மலர்ந்ததென் மாட்சியே.

758. உள்ளதுபோற் றேன்று முலக விவகாரக்
கள்ளமன மாயையறக் கைவல்ய ஞானத்தால்
உள்ளதேனை யன்றிமற் றென்றுமிலா மோனவியல்
வெள்ளமா நீடு விசுத்த சொருபமே.

759. மோகப் பசாச முனைப்பா மகந்தையால்
ஊகமறப் பாழ்த்தே னுடலுலகக் கற்பனையில்;
கோக விசாரவழிக் கூர்த்தவரு ளாலறிந்தேன்
வேகமறப் பொங்கு விமுத்தி சொருபமே.

குறிப்பு:—கோகம் (க: அஹம்) விசாரம் - நான் யார்
என்னும் விசாரம்.

760. சித்திரமாத் துன்றுந் திரிபுடிபே தப்பிழைசெற்
றித்தமியே னுள்ளத் தியல்விளக்கம் யாவதெனின்
மத்த மயக்க விகற்பமனப் பாழிமைதீர்
சுத்தவறி வாகத் துலங்கு சொரூபமே.

761. ஆனு மயக்க வகுப்பாழ்ங் கிரந்தியற
வானு மலர்ந்த மனத்தியல்பாப் பொங்குசுப
மோனுனு பூதியே முத்திப்பே ரின்பமாத்
தானுன சுத்தசிவத் தன்மை தழைத்ததே.

762. பொங்கிப் பொலிந்தவருட் போத வியாபகமாந்
துங்கத் துரீய சொரூபப் பதமொளியால்
அங்கமங் மாக வழுங்கியபா ழாணவப்பேய்
மங்கிக் கழியவென் மாட்சி மலர்ந்ததே.

763. அண்டபிண் டங்க ளனைத்துள்ளு மூடுருவி
மண்டுமுப சாந்த மகோததியாஞ் சிற்பரத்தைக்
கண்டுகொண் டே னுள்ளக் கருவான மெய்க்கண்ணு;
விண்டதுநா னென்னுமனே வேகக் கலக்கமே.

764. நானுக மென்ன நலங்குலைந்தே னுள்ளத்து
மோனுனு பூதி முகப்ப வகமகமென்
ருனு வறிவா வவிர்வதுசுத் தான்மாவாத்
தானே விளங்குசிவ தத்துவமாந் தற்பரமே.

765. உபயமாச் சற்று முணரவொண் ணுத
விபவமார் சுத்த வெளியா விளங்கு
சுபவியல்வாழ் வான சொரூபமே மிக்க
வபயமா வார்ந்தே னருட்கே வலத்தே.

766. ஈசன் செயலா வெலாமியலக் காண்டலால்
ஏசறவில் லாதபே ரின்பமுற்றேன்; சுத்தசிவ
நேசமா மோன நிலையிலே சஞ்சலப்பொய்ப்
பாச மயக்கமறப் பற்றியது தற்பரமே.

767. தன்னை யலாம லெனக்கோ ரிருப்பின்றித்
தன்னிருப்பே யென்னிருப்பாச் சார்ந்தொளிரக் [காண்டலால்
என்னதுநா னென்னு மிருட்பாழ் மயக்கமறத்
துன்னியது சுத்த சொரூபானு பூதியே.

768. தெய்வந் தெளிந்தவருட் சீர்மையால் உள்ளத்திற்
பொய்வந்த மோகமறப் பொங்கியது மெய்யுணர்வு
கைவந்த நெல்லிக் கனியாக் கலந்ததகத்
தையந் திரிபகல்சுத் தான்மானு பூதியே.

769. உள்ளமே யாக வொளிர்சொருப வுண்மையைமற்
றுள்ளுவதெவ் வாறேவவ் வுள்ளமா நிற்கிலல்லாற்
கள்ளவகங் காரமனக் கற்பனை பேதமறத்
தெள்ளியே சுத்த சிவோகவுண்மை சேர்ந்ததே.

770. மிக்கதோ ருண்மை விளக்கமா வுள்ளத்திற்
சொக்கலுற்ற சாந்த சொரூபானு பூதியால்
ஒக்க வொழிந்த துலகேபோற் கற்பனையாத்
தொக்க சுவையொளியூ றோசைநாற் றப்புலமே.

771. தானேதா னைசாட் சாற்காரஞ் சார்தலால்
யானே யெனதே யெனுங்கலக்க மற்றொழிந்தேன்;
வானை மலர்ந்த வசீகரவாழ் வானசுப
மோனானு பூதியா முற்றியது முத்தியே.

772. முன்னை யிழைத்ததவம் முற்றலால் யானெனத்
தின்னாத பொல்லாங் கிகப்ப வகமகமென் [தோன்
றென்னை ருயிரா விதயத் திலகியது
தன்னாலே தானொளிர்சச் சித்தான தற்பரமே.

773. தன்மெய் யுணர்வாலே தன்னையன்றிச் சற்றுமில்லாப்
பண்மையின் மோகமறப் பாறலுற்ற வுள்ளத்து
நன்மைசேர் கைவல்ய ஞானானு பூதியாற்
றென்மைசேர் சொந்த சொருபவுண்மை [தோய்ந்ததே

774. ஒன்றான வொன்றே யுளதா வொளிர்தலுற்ற
தொன்றான சொந்த சொரூபசாட் சாற்காரம்
மன்றவெறுங் கற்பனையா மாற்றியது மெய்போலத்
துன்றியபொய்ம் மாயமனச் சூதா மனைத்தையுமே.

775 அஞ்ஞான மான வகப்பா முறக்கழன்று
பொய்ஞ்ஞால மோகமறப் பொய்த்தொழிந்த
[வித்தகர்செய்
மெய்ஞ்ஞான வேள்வியா வென்னுள் விளங்கியது
சுஞ்ஞான மான சொரூபானு பூதியே.

776. தானெனும்பொய்த் தன்மை தழைக்கையிலே யானென
னானமனக் கற்பனையூ டுட்கலுற்று மாழ்காது [தென்
மோனப் பரவெளியா மூண்டிதயம் பொங்கியது
நானற்ற சுத்தமெய்ஞ் ஞான சொரூபமே.

777. பரமல்லாப் பொய்க்கற் பனைகளையே பற்றிப்
பரத்தை யகன்றமயற் பாழான பார்வை
பரமேதா னாகவருள் பற்றலாற் கெட்டுப்
பரமோப சாந்தப் பதந்துலங் கிற்றே.

778. ஊனு ருடலகந்தை யோய்ந்தொழியப் பொங்கியது
தானு வெளிர்சொருப சாட்சாற்கா ரானுபவம்;
மோனானு பூதியா முற்றியவவ் வற்புதமெய்த்
தேனூறு சித்தத்திற் சீவநதி யாயிற்றே.

779. குருவருளே கண்ணாக் குறிக்கொண்டு கண்டேன்
வெருவரலில் லாத விசுத்த சொரூபம்;
பருவரலாந் துன்பம் பகற்கனவா மங்கத்
துரியவெளி யாநிறைந்தான் *சூரியான் மாவே.

*ஆன்ம சூரியன் என்பது முன்பின்னாகத் தொக்கது.

780. என்னையோ தன்னையோ யானிரண்டாக்
[காணவொணா
தென்னதுநா னென்ப விகந்தொழியப் பல்படியாத்
துன்னியமா மோகமனத் தோற்ற மனைத்துமொரே
தன்னியல்பா வூன்று சதோதயமீப் பொங்கியதே.

781. மன்றவியல் வாழ்வுகை வல்லிரமே யாகவெனக்
கொன்றியமெய்ஞ் ஞான வுணர்வா விதயத்துத்
துன்றியது சுத்தத் துரியசொரு பானுபவம்
பொன்றலில் லாதவனு பூதிப் பொருள்சிவமே.

782. உடலா னுலகோ டுடனாய் *வடிவாந்
திடவுணர்வா மோனத் தெளிவாற் பரமாய்
நடமாட லுற்றமெய்ஞ் ஞானகுரு மூர்த்தி
அடியே னறிவின் சொரூபமா னனே.

* வடிவு — சொரூபம்.

783. ஆனைக் கலக்க வகப்பேய் முனைப்பறமெய்ஞ்
ஞானக் கினியா லெரித்தொழித்து நாயேனைத்
தானாக்கி யாண்ட சதாசிவமாந் தற்பரமே
யானைத் தெளிந்துபே ரின்பவடி வானேனே.

784. சிந்தையற்ற மோனவருட் செல்வந் திளைக்கவென
கெந்தைதேர் வித்த விதயப் பெருவாழ்வில்
விந்தையொன்று மில்லை விகற்ப மயக்கமில்லை
சொந்தவியல் பான சொரூபவுணர் வல்லாதே.

785. தொண்டுபட்ட வுள்ளந் துலங்கவருட் சிற்பரமாக்
கண்டபரஞ் சோதிக் கருத்தே திருத்தியா
மண்டுமகிழ் வூடு மகத்தா விளைந்ததெனக்
கண்டபகி ரண்டங் கடந்தவிர்மெய்த் தன்மையே.

786. பொன்றாத சுத்தவருட் பூரணமாத் தன்னியல்பு
நன்று விளங்கலே ஞானனு பூதியென்பர்;
தோன்றான சுத்தி சொரூபானு பூதியுற்ற
தோன்றான வுண்மை யொளிவெளியா வுள்ளத்தே.

787. வெருவரல்சேர் மோக விகற்பமற வுள்ளத்
தொருமைசே ருண்மை யுணர்வொளியா மோனப்
பெருமைசேர் வாழ்வு பிறங்கப் பிரான்பாற்
றொருவில் சொரூபானு பூதியார்ந் தேனே.

788. ஈசனு லென்னை யறிந்தேன்; அறிந்தாங்கவ்
வீசன்பா லென்னை யிழந்தொழிந்தேன்; பாசமனக்
கோசவகங் காரங் குலைதலா லென்னுண்மை
ஏசறவற் றேங்கு மியற்பரமா விஞ்சியதே.

789. துன்பமற்ற சுத்தவருட் சூழலாம் மெய்த்துரிய
நன்பதத்து நாயகமாய் நல்ல சிவத்துவப்பே
ரின்பவர சாட்சிபெற் றெக்களிக்க வென்னகத்திற்
செம்பரமாந் தன்சொருப சித்தி கிளர்ந்ததே.

790. உண்மையல் லாத வுணர்வோ உணர்வல்லா
வுண்மையோ என்னு ளுணரப் படாதாக
உண்மையே என்னுருவா யுற்றேன் உணர்வுருவாந்
திண்மைசேர் சுத்தத் தெளிவா லிதயத்தே.

791. யானற் றொழியப்பே ரின்ப வருள்வெளியா
வானப் பிரானென் மனத்தை மலர்வித்தான்;
ஊனக் களிசே ருலகமயற் கற்பனைதீர்
ஞானப் பரவடிவா நண்ணியதென் னுண்மையே.

792. பின்னியவெம் பாசப் பிணக்கான பேய்ச்செருக்கால்
முன்னையா தொன்றும் முயன்றிடா மூர்க்கனேற்
கென்னிலே யானு விறையருளாற் பொங்கியது
தன்னிலே தானுத் தழைத்தொளிர்மெய்த் தத்து
[வமே.

793. கற்போலு நெஞ்சங் கனிந்துருகத் தானென்னை
நற்பாற் படுத்தமெய்ஞ் ஞானப் பிரான்சொருபப்
பொற்பாற் பொலிந்ததென் புந்தி சிவோகமாத்
தப்பாத சுத்த சுதாசார நிஷ்டையிலே.

794. வானு வகத்து மலர்ந்த பரஞ்சோதிக்
கோனு ரியன்சிற் குறிவழியே கூடலால்
யானே யெனதே யெனுங்கற் பனைகரக்கத்
தானேதா னுவொளிர்மெய்த் தன்மை தழைத்ததே.

795. மயலற்ற சுத்தவருள் வாலறிவா வான்மேலோ
ஒரியலுற்ற வாற்று லிதயம் மலர்ந்தேன்;
முயல்வுற் றமைரும்பாழ் மோகமுணைப் போய்வாற்
செயலற் றெழுந்தேன் சிவச்செம் பதத்தே.

796. பொய்க்கா ரவிச்சையறப் புந்தியுள்ளே சிற்பரமா
நக்கான் புகட்டியமெய்ஞ் ஞானறு பூதியாற்
சொக்கார் சொக்கித் துலங்கலுற்றேன் ஆவரண
விக்கேப மற்ற விசுத்த சொரூபத்தே.

797. நேசத்தா ற்றன்னை நினைந்துநினைந் துள்ளுருகும்
பாசத்தா லென்னைத்தன் பாற்பிணித்த வான்ட
ஓர்சத்தா மாத்திரமா வுள்ளபர மார்த்தவுரு [வன்றன்
மாசற்ற சுத்தவருள் வாலறிவாப் பொங்கியதே.

798. இருளுலகந் தேநா ளிடர்ப்பட் டொழியா
தருள்விழியா லென்னையடிக் காண்டுகொண்ட வர்
தெருள்வளர் மெய்ஞ் ஞானத் திறத்தால் அடியே [மான்
னுருவுபர மாக வொளிர்தலுற் றேனே.

799. ஆண்டவனை யன்றியெனக் காரே துணையுள்ளார்
ஆண்டவனே யென்னை யரிதிற்காத் தோம்புகின்றான்
ஆண்டவனே மெய்ச்சார்பா வாராதிக் கின்றேனுக்
காண்டவனே யுண்மையிலென் னுருயிரா வுற்றானே.

800. ஊனவிவ காரங்கட் கெல்லாமோ ரேதுவாம்
ஊனகந்தை யூரா வுணர்வுற்றேன்; சுத்தவருள்
வானமே யென்மெய் வடிவா வளர்தலால்
ஆனந்த மோன வமுதவியல் பெற்றேனே.

801. எந்நிலைக்கும் மேலா வியல்சொருபப் பெம்மானால்
அந்நிலையெல் லார்க்குமோப் பாமென் றருளியதோர்
மெய்ந்நிலை யென் னுள்ளத்து மேம்பட் டொளிர்
[தரலாற்
பொய்ந்நிலைக ளாகமற் றெல்லாம் புலம்பினவே.

குறிப்பு:—'... அந்நிலையெல் லார்க்குமோப் பாம்'
— உள்ளது நாற்பது-3.

802. உள்ள வயர்க்கமற் றொன்றுமற்ற சுத்தவருள்
வெள்ளவெளி யானவென் மெய்ப்பரிசு கண்டு
[கொண்டேன்
கள்ள மனோமயப்பாழ்ங் கற்பனையிற் றப்பவெனக்
குள்ளொளியாய்ப் பொங்கலுற்ற வொட்பநுட்ப வுண்
[மையிலே.

803. மரமே யனைய மதோன்மத்தப் பேயேன்
குருவா யுறைந்தவருட் கோமா னளித்த
திரஞான மோனத் திறத்தா லகத்திற்
பரமே சொரூபமாய்ப் பற்றலுற் றேனே.

804. தன்னை யடைந்தாரைத் தானேயாக் காண்கின்ற
வன்னவனைக் கண்டேன்யா னான்ம சொரூபமா;
என்னினுந்தான் வேறல்லன் றன்னினும்யான் வேறல்
[லேன்
றுன்னுபர மார்த்த சொரூபவுண்மை நோக்காலே.

805. மத்தமனக் கற்பனையின் மாழ்கியநான் சற்குருவின்
வித்தகமெய்த் தாளை விரும்பி வழிபடலால்
நித்தமெனக் குண்மை நிலையாகத் துன்றுவது
சுத்தவெளி யான சொரூபமாத் தேர்ந்தேனே.

806. காண்டலரு சுத்தவருட் கைவல் லியந்துலங்க
வாண்டவனை யன்பா லணுக வணுகவெனக்
கீண்ட விளைந்தபே ரின்ப வுணர்ச்சியாற்
றூண்டலுற்ற வாழ்வு சொரூபானு பூதியே.

807. இறக்கல் பிறக்க லெலாங்கற் பனையா
வறக்கடிந் தாண்ட வறிவனார் பாதம்
துறக்க வொணாத சொரூப வுணர்வால்
மறக்க வொணாது மடுக்கலுற் றேனே.

குறிப்பு:—மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கு என மணிவாசகர் கூறுவது காண்க.

808. புணர்ந்தார் பிரிவரும் போதப் பிரானை
யுணர்ந்தேன் சொரூபமா வுள்ளுணர்வால் உள்ளத்
தணைந்தமா மோக வகந்தை மனப்பாழ்
தணந்தேன் இயற்பரமாந் தன்மைசார்ந் தேனே.

809. என்னுருவா வுள்ளத் திருந்தொளிர்சிற் பூரணமே
மன்னுசிவ போக மகோததியா வைகலால்
என்னதுநா னென்றிதயந் தெந்தவிதப் பற்றுமிலை
அன்னியமொன் றற்ற வருள்வெளியை யல்லாதே.

810. கள்ளக் கரவான காரா ணவமயக்கப்
பள்ளப் படுகுழியிற் பாழ்த்தொழிந்த பேதையேன்
உள்ளத் தொளிவெளியா வுள்ள சொரூபந்தைத்
தெள்ளத் தெளிந்தேன் றிருவருட்கண் ணோக்காலே

811. மும்முதலே போலுயிரை மோகிப்பிக் கின்றவொரு
செம்மைசேர் கைவல்யச் செம்பொருளைக் கண்டு
[கொண்டேன்
அம்மநா னெவ்வா றறிவேனென் றேங்கலுற்றேன்
பொய்ம்முதலாப் பொன்றவொளிர் பூரணமெய்ந்
[நோக்காலே.

எ. சொரூப சாட்சாற்காரமும் பயனும்

(குறள்)

812. தானு விளங்குசிவ சாட்சாற்கா ரத்திறத்தால்
வானு மலர்ந்ததென் வாழ்வு.

813. வாழ்வா வகத்து மலர்ந்த சொரூபத்திற்
பாழா வொழிந்தது பாழ்.

## 12. சாந்தி

(குறள்)

814. உண்மையே வாழ்வா வொளிர்தவாற்
வண்மைசேர் சாந்தி மனத்து.

815. பரமார்த்த வுண்மைப் பதமான சாந்தி
திரமாத் திகழ்ந்த துளத்து.

816. மயக்கமறக் கூர்சொருப வாலறிவாற் பொங்கிற்
றுயக்கமற்ற சாந்தி யுளத்து.

817. வென்றிசே ருண்மையே வீடா விளங்கலால்
ஒன்றியது சாந்தி யுளத்து.

818. *கருத்தற் றொழிய கலந்த வருட்சிற்
பரத்திலே சாந்திபடைத் தேன்.

*கருத்து - மனம், சிந்தனை.

819. பொருளாக வுள்ளம் புணர்ந்த சொருபத்
தெருளா லமைதிசேர்ந் தேன்.

820. சிவத்திலே மோனஞ் செழிக்கலுற்ற ஞானத்
தவத்திலே சாந்திதழைத் தேன்.

821. மாழ்குவே னல்லேன் மகிழ்மல்கு சுத்தவருள்
வாழ்விலே சாந்திமடுத் தேன்.

822. உடையான்பா லுற்ற *வொருப்பாட் டுணர்வால்
அடியே னமைதிபெற் றேன்.

* ஒருப்பாடு - ஒருமைப்பாடு.

823. கழிவிலொடுங் குற்ற கருத்திலுற்றேன் சிந்தைச்
சுழலடங்கு சாந்தி சுகம்.

824. சாந்தி யுணர்வே சதாசார வாழ்வாக
வேய்ந்த திதயத் தினிது.

(வெண்பா)

825. அளந்தறிய லாகா வபாரவருட் சீர்மை
யுளந்ததும்பு சாந்தி யுணர்வால்—வளந்ததும்பு
சுத்தோகம் புத்தோகம் முத்தோக மாகவியல்
சித்தோக மானேன் சிறந்து.

826. சாந்திப் பதவொளியே தாரகமா மோனவருட்
காந்தமா வுள்ளங் கவர்ந்துநின்று—யாந்தப்பித்
தன்பாலே நின்று சலித்தொழியா தெம்முயிரைத்
தன்காவ லாக்கிற்றுத் தான்.

827. இயலறிந்த வாற்றுலே யானென்னுஞ் சீவச்
செயலகன்ற சாந்தி திளைத்தேன்—மயலகன்ற
போதவருட் பூரணமாப் பொங்குசொரு பானுபவ
மேதகவா முத்தி விளைந்து.

828. அருட்சிற் பரமே யனந்த சிவமா
வருச்சிப்ப தான வறிவால்—மருட்சிக்
கலக்கமாம் பேதமனக் கற்பனையற் றோய்ந்து
துலக்கமுற்றேன் சாந்தி சுகம்.

829. அருட்பார்வை யாலென் னகத்தே யடியேற்
கருட்பாற் கடல்சுரக்க வாண்டான்—அருட்பா
லமுதமே யாகவெனை யாண்டான் சொரூப
சமுகமே சாந்திப் பதம்.

830. அருட்பதவாழ் வாக வடைவதுமெய்ஞ் ஞான
குருப்பதமே யான குறிப்பால்—விருப்பெனக்கு
மேன்மேற் கிளர விளைந்ததுஞா னானுபவந்
தேன்மேவு சாந்தித் திளைப்பு.

831. அருட்சிற் பரத்தி லனுபூதி பெற்று
மருட்சற் பனைதீர் மனத்தால்—வெருட்சிப்
படாற்ற சாந்திப் பதவாழ் வுளத்திற்
சுடர்வுற்ற தன்புருவாத் தொக்கு.

832. ஒருமைசேர் மோன வுணர்விலே சாந்திப்
பெருமைசே ரின்பவியல் பெற்றேன்—வெருவரல்சேர்
சித்தக் கலக்கச் செருக்கா மகந்தையறப்
பொய்த்ததுசிற் பூரணமாப் புக்கு.

833. பரபத்தி வாழ்விற் படிந்த மனத்தாற்
கரவற் றுளிர்சொருபக் காட்சி—உரமுற்
றிதயத் திடைவிடா தென்றுமியல் சாந்தி
நதியொத் தியல்வது நன்கு.

834. மோனவருட் கைவல்ய மூத்தித் துலக்கமாத்
தானவிர்சற் போத சதாசிவத்தில்—யானெனதற்
றுள்ளவென் னுண்மை யுருவிளங்க வுற்றதெனக்
குள்ளலரு சாந்தி யுளத்து.

835. மோனப் பதமே முழுமுதலா வுள்ளசிவ
ஞானப் பதமா நடத்தலால்—ஊனமனக்
கற்பனை பேதக் கலக்கமரு சாந்தியே
ஒப்பமா வுள்ள துளத்து.

836. மூலமாப் பொங்குமுழு மோனவருட் செம்பதத்திற்
சாலமனம் பற்றித் தழைத்தலாற்—போலும்
திரோதான மற்றுத் தெளிந்ததோர் சாந்தி
யொரேதாரை யாயிற் றுளத்து.

837. சுட்டப் படாத சொருபவருட் கேவலத்து
நிட்டைப் பயனூன்ற நெஞ்சிலே—மட்டுப்
படாததோர் சாந்தி பராகாசமாக
மடாநின் றதுவென் மனத்து.

838. முற்றுங் கடந்த வியல்பான மோனநிலை
யுற்றங் கிருக்க வுளத்திலே—பற்றுங்
கனசொருப ஞானவருட் காட்சியாற் கண்டேன்
அனிசமுப சாந்தி யகத்து.

839. உள்ளத் தொளிர் சொருப வுண்மை விளக்காலே
கள்ளவகங் காரமனக் கற்பனைபோய்த்—தெள்ளத்
தெளிந்தவருட் கேவலத்திற் சித்தோப சாந்தி
யளைந்துவிளங் கிற்றென் னறிவு.

840. அறிவொளிசேர் மோனமே யான்ற சொரூப
நிறைவெளிவாழ் வாக நிகழ்வால்—மறுகுமனப்
புன்கவல்சேர் மாயப் புணர்ப்பா மயக்கமறத்
தங்கியது சாந்தி தழைத்து.

841. அறிவிற்பே ரின்ப வருட்சீர்மை கண்டு
நிறைவுற்ற மோன நிகழ்வால்—செறிவுற்
றகமே யகமா வவிர்சொருப மாட்சித்
தகவிலே சாந்தி கண்டேன்.

842. இதயத் தியல்சிவத்தோ டென்று மியல்பா
மதியொத் தொழுகலுற்ற மாண்பால்—மதியிற்
பலவிகற்ப மோகப் படர்ச்சியற்ற சாந்தி
குலவலுற்ற தூள்ளங் குளிர்ந்து.

(கொச்சகக் கலிப்பா)

843. அற்பனே னுள்ளம்புக் காண்டபிரான் அங்கெனக்குப்
பொற்புறுவாழ் வானசிவ பூரணங்காட் டிக்கொடுத்
கற்பனைதீ ருண்மைக் கடவுளருட் சிற்பதத்து [தான்
நிற்பதா லற்புதமா நீடியது சாந்தியே.

844. ஆவிக்கோ ராவியா வாண்ட சொரூபகுரு
தேவற்கா ளாகச் சிறக்கலுற்ற வென்னுள்ளத்
தார்வக் குரோத மகன்றெழியப் பொங்கியது
சீர்வளர்சுத் தானந்தச் சித்தோப சாந்தியே

845. உள்ள லகன்றெழிந்த வொள்ளியோ ருள்ளத்துத்
தெள்ளியவாழ் வாகத் திளைக்கும் பரசிவத்திற்
கள்ளமனே வேகக் கடுப்பறநான் கண்டுகொண்
ஒள்ளியபே ரின்பவுணர் வூற்றுன சாந்தியே. [டேன்

846. எட்டலரு முண்மை இதயத் தியல்பாகத்
தொட்டவர்மெய்ஞ் ஞான சொரூபானு பூதியாற்
றுட்டவகங் காரமனச் சூதான சொப்பனப்பாழ்ஞ்
சுட்டறிவு கெட்டொழியத் துன்றியது சாந்தியே.

847. சுத்தவறி வான துரீய சொரூபனருள்
வித்தையா லத்துவித மெய்ம்மைவிளங் குள்ளத்திற்
புத்தமுத மானசிவ போகமாப் பொங்கியதெற்
கத்தகநிற் கின்றமோ னனுபவ சாந்தியே.

848. தள்ளவோ கொள்ளவோ சற்றுமொன்றைத் தற்பரமா
வொள்ளியோ ருள்ளத் தொளிர்சொரூபப் பெம்மானை
நள்ளலுற்றே னுக்குமெய்ஞ் ஞானனு பூதியாத்
தெள்ளியது சுத்தவருட் சித்தோப சாந்தியே.

849. திட்டியே சிட்டியாத் தேறத் தெளிதலாற்
றிட்டியையுட் சேரத் திருப்பிக்கொண் டேனுக்குச்
சிட்டியாற் ருபத் திரயமொன்றுஞ் சேர்தலில்லை;
சுட்டறிவின் சேட்டையறத் தோய்ந்ததுப சாந்தியே.

850. பந்தமுத்தி யற்ற பராற்பரமா வென்றுமுள்ள
சொந்தவியல் சுத்த வெளியா விளங்கவகத்
தந்தமில்பே ரின்பமா வார்வதுநா னென்னுமனக்
கொந்தளிப்பற் றேயக் குலாவலுற்ற சாந்தியே.

851. மூடக் கலக்கமா மூர்க்க வகந்தையறத்
தேடித் துருவித் தெளிந்த சொரூபவியல்
வீடுபே ருக விளங்கலா லுள்ளுணர்விற்
கூடியது மோனக் குலாவான சாந்தியே.

852. வன்ன வருள்வெளியா வைகுசிவச் செம்பதமே
என்னதுநா னற்ற வியலா விதயத்துத்
துன்னுபர மார்த்த சொருபந் துலங்கலால்
மன்னியது கைவல்ய வாழ்வான சாந்தியே.

853. உண்மையே வண்மைசே ரொட்பவாழ் வாகவுறு
திண்மைசேர் ஞானத் திறந்தெளிந்தேன் ஆண்ட
[வனுக்
கண்மையிலே தங்கி யடைந்தவருட் காட்சியால்
வண்மைசேர் சாந்தி வளர்ந்ததும்ப வுள்ளத்தே.

854. தெளிய விளங்கு சிவதற் பரமா
வளையலுற்ற மோன வருட்பெரு வாழ்விற்
றுளையலுற்ற சாந்தி சொரூபமே யாயிற்
ரொளிவெளி யான வுதார வுளத்தே.

855. உண்மைவாழ் வாகவெனக் குள்ளதகத் தொட்ப
[நுட்பத்
திண்மைசேர் சுத்த சிவாத்துவித மோனவியல்
வண்மைசேர் சுத்தவருள் வைப்பா நிகழ்மனத்துத்
தண்மைசேர் சாந்தி தழைத்துச் செழித்ததே.

856. அற்புதமோ னத்தா லடியேனை யாண்டவருட்
சிற்பதமே யன்றித் தெரிந்திடா வாறகத்திற்
கற்பனையா வுற்ற கலக்கந்தீர் கைவல்யத்
தற்பரஞா னுபவ சாந்தி தழைத்ததே.

857. சொற்பரமல் லாத சொரூபமென் னுள்ளத்திற்
சிற்பரமாத் தெள்ளத் தெளிய விளங்கலாற்
கற்பனை பேதக் கலக்கமற் றோய்ந்தொழியத்
தற்பரமாப் பொங்குமுப சாந்தி தழைத்ததே.

858. சுத்தத் துரிய சொரூப சுயஞ்சோதி
சத்திபல் லோர்களுந் தாழ்ந்துவணங் கற்புதத்தாட்
பத்திக் கடலுட் படிந்து திளைத்தலாற்
றத்திக் கரைபுரள்சாந் தானுபவஞ் சார்ந்ததே.

859. நாமரூ பங்களிற்சேர் நானெனதென் னும்மயக்கக்
காம மனைத்துங் கழன்றதாற் கைவல்யச்
சேமமா வுள்ளசிவச் செம்பதமே மிக்கபரந்
தாமமா வுள்ளத்திற் சார்ந்தமைதி சார்ந்ததே.

860. நீதா னதுவெனவே நெஞ்சுறைக்க வாண்டவன்சற்
போதானு பூதி புணர்ந்த வருட்டிறத்தாற்
சூதான மாயமனச் சூறு வளிக்கொடும்பா
ழாதாளி யோய வமைதி யளைந்ததே.

861. குருத்துவஞ்சேர் மெய்ஞ்ஞானக் கோமானுஞ் சீமா
னொருத்தனை நா னுள்ளத் திருத்தலுற்றுங் கூற்றுத்
திருத்தமாப் பொங்கியது சித்தோப சாந்தி,
வருத்தமா மோக மனக்கவலை மாய்ந்தே.

குறிப்பு:—திருத்தம் – தீர்த்தம்

862. சுத்தசிவ மாகத் துலங்குமோ னுனுபவப்
புத்தமுத முண்டு பொலிந்தேன், குருபதத்திற்
செத்த வகந்தையாற் சீவத் துவமயல்சே
ரெத்தனமின் றுவொளிர்பே ரின்பமார் சாந்தியிலே.

863. ஏவற் பணிகொண் டிதயத் தெனைச்செறிவித்
தாவிக் கமுதமா வாண்ட வருட்பிரான்
வாழ்விற் கலந்து மடுத்தலா லோர்படித்தா
மேவிற் றுபசாந்தி வெள்ளமா மெய்ப்பதமே.

864. அற்றமற்ற சுத்த வருட்சிற் பிரானடியிற்
பற்றியமெய் யன்பாற் பராவமுத போகமேனக்
குற்றதுப சாந்த வுணர்வுருவா வுள்ளத்திற்
சுற்றுமுற்று நோக்கிச் சுழன்று கலங்காதே.

865. மன்றவென் னுள்ளத்து மத்தமனக் கற்பனைசெற்
றென்றலுற்ற வாண்டவன்பா லுற்றவுப சாந்தவுணர்
வென்றென்றுந் தன்னோ டெனக்கியைந்த யோகமா
நின்றதென் னெஞ்சத்து நீக்கமறச் சற்றுமே.

866. உள்ளத்தே யென்னை யொடுக்கி யொளிவெளியாத்
தெள்ளத் தெளிவித்த சிற்பரன்பா தாரவிந்தத்
துள்ளவுறப் பொங்கு முபசாந்தத் தெள்ளமுத
வெள்ளமா வென்னுள் விளைந்ததருட் போகமே.

867. துளங்குமனக் கற்பனை சொப்பனம்விட் டோட
விளங்கலுற்ற சுத்தவருள் வித்தையால் உண்மை
வளங்குலவு வாழ்வு வசீகரமாப் பொங்க
வுளங்கலந்த சாந்தியெனக் கொட்பநுட்ப வீடே.

868. ஏதமற்ற சுத்த வியற்பரவாழ் வாகவெனக்
கார்தலுற்ற வாண்டா னருட்பதத்தில் விடுகண்டேன்;
காதலுற்ற மோகவகங் காரமனக் கற்பனையிற்
பேர்தலுற்ற சாந்திப் பிறக்கம்பே ரின்பமே.

குறிப்பு :—காதல் - காதுதல், கொல்லல், வருத்தல்.

869. விஞ்சைசே ரான்ம விசாரத்தில் யானெனுமவ்
வஞ்சவே தாள மயக்கக் கலக்கமறச்
செஞ்செவே சித்தந் தெளிதலாற் கற்பனை
சஞ்சலமில் சாந்தமனத் தன்மை சதாசிவமே.

870. வென்று விளங்குசிவ வீரியஞா னனுபவம்
மன்றவென் றென்றுமுள மாண்பான வென்னியல்
துன்றுமுணர் வான சொரூபசித்தி சேர்தலால் [பாத்
ஒன்றியதென் னுள்ளத் துபசாந்த வுண்மையே.

871. தலைப்படவொண் ணாதசிவ தத்துவத்திற் சிந்தை
நிலைப்படவூன் நிற்று நிரந்தரமா நிட்டை;
அலைப்புறுவெம் பாச வகப்பே யறலாற்
சலிப்பறநன் கார்ந்ததுசாந் தானுபவச் சால்பே.

872. நிராதார மானசிவ நிட்களமே நெஞ்சத்
தொராதார மாமெய் யொளிசேர் வெளியாப்
பராதீன மற்றசிவ பாரமியத் துற்றேன்
ஒராதாளி யற்றேருங் குபசாந்த வாழ்வே.

873. தெளிந்தசிவ மாகத் திகழ்சொருப வாழ்வில்
விளிந்திட நா னென்ற வியாமோகப் பீடை,
அளிந்தமெய் யன்புணர்வா லாசாபா சம்போய்
அளைந்ததுபே ரின்ப வருட்பே ரமுதே.

874. விளங்குசிவ ஞான விபூதியாற் பாசக்
களங்கமனை மாயங் கழன்றேனுக் குண்மை
வளங்குலவு வாழ்வா மடிந்ததோர் சாந்தித்
தளங்கடவுட் கைவல்யத் தற்பதபூ மாவே.

875. கள்ளமனங் காணுங் கடுவெளியே யென்னுருவாத்
தெள்ளத் தெளிந்த சிவக்கே வலவுணர்வாற்
றுள்ளுமகங் காரத் துடுக்கான பேய்த்தனங்கெட்
டுள்ளும் புறமுமொருங் கோய்வு மடுத்ததே.

876. அவத்தையே மெய்போ லறிவு மயங்கி
யவத்தமே வாணா ளழியா தருளாற்
றவத்திலே சித்தந் தலைப்படலாற் சுத்த
சிவத்திலே சாந்தி திளைக்கலுற் றேனே.

877. அளக்க வொணாத வருள்விலா சத்தால்
விளக்கமா வுள்ள விசுத்தத் துரீய
வெளிக்கணே கைவல்ய வீட்டுணர்வு பொங்கத்
துளக்கமில்சாந் தானுபவந் துய்த்திடுகின் றேனே.

878. சிவத்திலே வாழ்வு தெளியிலன்றி மிக்க
கவத்தமா மோனநிலை துன்றாதே; சுத்த
சிவத்திலே சித்தந் திளைத்தலுறு மோனத்
தவத்திலே சாந்திநிலை சார்தலுற்றேனே.

879. பரமான சுத்தம் பளிச்சிடவென் னுள்ளத்
துரமா வுறைந்த வொளிசேர் பதத்தாற்
பிரமாத மோகவகப் பேயாட்டம் போத்
திரமான சாந்தி திளைக்கலுற் றேனே.

880. மயற்கற் பனைதீர் மவுனனு பூதி
இயற்சிற் பரவாழ்வா வெய்தலால் யாதோர்
முயற்சிசேர் மோக முனைப்பில்லேன் உள்ளத்
தயற்சிதீர் சாந்தி யடையலுற் றேனே.

881. போவன போக வருக வருவனவவ்
யாவற் றினுமெனக்கு யாதோ ரியைபுமின்மை
ஆர்வமுறு சுத்தஞா னனுபவத் தாலறிந்து
சாவதா னத்திறஞ்சால் சாந்திசார் வுற்றேனே.

882. கண்ணு ரமுதவியற் காட்சியா என்சொருபக்
கண்ணனை தன்னியலைக் காட்டிக் கொடுத்தவன்
[தாள்
எண்ணும வெண்ணி இருப்புணர்வு மாத்திரமாத்
தண்ணு ரமைதி தலைப்பட்ட தென்னுணர்வே.

883. மயக்க வியற்கையற மாற்றித்தன் னுண்மை
நயக்க வருளியமெய்ஞ் ஞானப் பிரானே
இயக்க வியங்கிலன்றி யார்க்கு மெதற்கும்
இயக்கமின்மை கண்டமைதி யெய்திற் றுணர்வே.

884. பாவனு தீதப் பரசொருப மோனவருட்
சீர்வளா யுள்ளஞ் சிறத்தலாற் றேகோகஞ்
சீவபா வம்போய்ச் சிவோகஞா னனுபவ
வாழ்வளாய் மல்கிற் றுபசாந்த மாப்பதமே.

885. நமற்கரித்தோ மாகவே ஞானப் பிரானை
எமக்குரித்தாப் பெற்றே மிறைபதத்தை யென்றும்
அமர்க்களவாழ் வானசிந் தாகுலவெந் தாபம்
சமிக்க வடைந்ததுப சாந்தப்பே றாறே.

886. சுரமார் மனத்தாபச் சோகமோ கங்கூர்
புரதேக வாழ்வுவறும் புன்புலமட் டாகப்
பரமான மோனவருட் பார்வையால் உள்ளத்
துரமான சாந்தியுணர் வொட்பமுற் றேனே.

887. வெறிசே ரகந்தைமனே வேகமறப் போன்ற
அறிவிற் செறிந்தமோ னனுபவ வாழ்விற்
பிறிவிலா வுண்மைப் பெருநலப்பே றுற்றேன்
நிறைவான சாந்தியென் னெஞ்சுருவா நின்றே.

888. என்னியல்பே யான வியற்சிற் பரவெளியாத்
துன்னியதோர் வாழ்வே சொரூபநிர் வாணமா
மன்னியது சாந்தி மனத்தே, பரமார்த்த
நன்னயமாங் கைவல்ய ஞானத் தெளிவாலே.

889. அறியப் படாதயா தொன்ற னறிவால்
அறிவுமற் றெல்லா மறியாமை யாமோ
அறிவா மதேமெய் யகமா வறிந்தார்ந்
தறிவமைதி சேர்ந்தே னறிவா மகத்தே.

890. உளங்கலந்த வாணவப்பா ழூத்தைமலம் போக
விளங்குசிவ ஞான விபூதிநீ ராடித்
தெளிந்தவருட் கைவல்யச் செம்பதவாழ் வுண்டு
விளைந்த திருத்தியால் வேட்கையற் றேனே.

## 13. சகஜம்

### க. சகஜ சாந்தி

(வெண்பா)

891. நானற்ற தன்மையே நல்லசிவத் தன்மையா
மோனத் தருள்வாழ்வு மூண்டொளிர—ஊனப்
பழிசே ரகந்தைப் படர்ச்சியகல் சாந்தி
யொழியா தியன்ற துளத்து.

892. அறிவொளியா முண்மை யருள்வெளியே நானுச்
செறிவதாற் சித்தஞ் சிவமாய்—மறவுநினை
வொன்றுமெனக் கின்றி யுபசாந்த போகமுளத்
தென்றுமியல் கின்ற தினிது.

## உ. சகஜ சுகம்

(வெண்பா)

893. நான்முனைத்த லற்ற நடுவுநிலை மோனமே
தாண்மடுக்கத் தக்க சதாகதியாய்த்—தான்மருவுற்
றீங்கே சொரூப வியல்பான முத்திசுகம்
நீங்கா தொழுகுவதென் னெஞ்சு.

## ௩. சகஜ நிலை

(வெண்பா)

894. மனந்தன் னுருவம் மடுத்தலாற் றன்னை
நினைந்து மறந்து நினையேன்—இணைந்துமகிழ்
துன்பவின்பச் சிந்தையறத் துன்று சுகசொருபச்
செம்பதத்திற் சிந்தைதிளைத் தேன்.

(கொச்சகக் கலிப்பா)

895. சுத்தப் பரசிவமே தொன்றுதொட்ட வாழ்வாக
நித்தமுத்தி யான நிலைவிளங்கப் பெற்றேனுக்
கொத்தசம மன்றியென்றும் ஒவ்வா விடமயில்லை;
வித்தகமா மோன விளக்கப் பரிசிதுவே.

## ச. சகஜ தவம்

(குறள்)

896. அடிப்படையா வுள்ள வனந்தசிவந் தானே
கடைப்பிடியா வாழுங் கருத்து.

897. சிவமான மோனந் தெளிதலால் வாழ்வே
தவமா வியல்கின் றது.

(வெண்பா)

898 ஆக்கமா மிக்க வருட்சீ ரமுதவொளித்
தேக்கமா வுள்ளவென் சித்தமே—நீக்கமற்ற
சுத்தவெளி யாகச் சுடர்தலாற் பேரின்ப
மெய்த்தவமே யென்னியல்பா னேன்.

(கொச்சகக் கலிப்பா)

899. அவத்தமா மோக வனர்த்தப் பிறப்பில்
விவத்தைத்தே றுது வெருண்டேற் கருளாற்
சிவத்திற் றெளிந்தமெய்ஞ் ஞானத் திறத்தாற்
றவத்தியல் வாழ்வு சரளமா யிற்றே.

900. ஆனந்த மோன வருட்சிற் பரவெளியே
யானுந்த லற்ற வியல்பா மிதயமா
ஞானந் தெளிந்து நடக்கலுற் றேனுக்குத்
தானந் தவமனைத்துந் தன்னியல்பாச் சார்ந்தவே

குறிப்பு:—இயல்பே வெளியாம் இதயமாக என ஏற்ற
பெற்றி மாற்றிக் கொள்க. தானந்தவ
மனைத்தும் - தானம் தவம் முதலான
சமஸ்தமும். தானந்தவம் வேள்வி
உள்ளது நாற்பது -அனுபந்தம்...
என்னும் பகவான் பாட்டு இங்கு நன்கறிய
வேண்டுவதாம்

901. ஒன்றான சொச்சொருப வுண்மைநாட் டத்தின்மற்
றென்ற விழுக்க முறுமையெனக் கென்னெனிலோ
தொன்றான வந்தத் துரீய சொரூபவருள்
வென்றியில்யா தோர்துவித வேற்றுமையங் கின்
[மையே,

902. யாதுமோர் தன்னையன்றி யில்லா வியற்பரமப்
போதுமே யுள்ளத்திற் பொங்குமனு பூதியாற்
சாதனையோர் சற்றுமறச் சஞ்சரிக்கின் றேனடியேன்
சாதுவா மோனவியற் றன்மை தழைத்ததே.

903. அவமதியாந் தேக வகந்தைமுனைப் பாற்சேர்
பவமயக்க மானவெர் பாசமறச் சித்தஞ்
சிவமயவாழ் வாகச் செழித்தலுற்ற ஞானத்
தவமியல்பா நாளுந் தழைக்கலுற் றேனே.

904. சுபமங் களமாகத் தோய்ந்த சொரூப
விபவங் கலந்தவருள் வீரியத்தால் உள்ளத்
தபயங் கிளர்ந்தசுத் தாத்துவித மோனத்
தபமியல்பா நாளுந் தழைக்கலுற் றேனே.

905. இருட்பா மூசப்பே யிகப்ப வுளம்பொங்
கருட்பே ரொளியா லலமரல்கெட் டோயப்
புரிப்பான மோனப் புலந்தெளிந்த வாற்ருல்
இருப்பே யியல்பா வினிதமைந் தேனே.

906. அற்பத் தியேனகத்தா டன்புமிகப் பொங்கவருள்
விற்பத்தி ஞான விளக்கேற்றி வைத்தபிரான்
சற்பத்தி யான சதாசிவசாந் தானுபவத்
*தற்பத்தி லார்ந்தேன் சகஜ சமாதியே.

* தற்பம் – படுக்கை.

907. சீலபோன் றில்லேன் சிவானுபவச் சீர்திளைக்க
ஞாலமே லென்னை நயந்தாண்ட சுத்தவருட்
கோலமே நோக்கிக் குறிக்கொண் டிதயத்திற்
சால விளைத்தேன் சகஜ சமாதியே.

908. கற்பனையா தொன்றுங் கலவாத சுத்தவருட்
சிற்பரமா வுள்ள சிவக்கே வலத்திலெனக்
கற்புதவாழ் வாக வடைந்ததுநா னற்றெளிர்மெய்த்
தற்பரமா மோன சகஜ சமாதியே.

### ௫. சகஜ வாழ்வு

(வெண்பா)

909. பரஞான சித்திப் பயனுறவென் னுள்ளத்
துரமா வொளிர்சொருப வுண்மை—திரமா
வியல்சகஜ வாழ்வா விகம்பரமே யாகப்
பயில்வதனு பூதிப் பரிசு.

## 14. சொரூபம்

### க. சொரூப நலம்

(வெண்பா)

910. உள்ளமே போத வொளியான சுத்தவருள்
வெள்ளமா மிக்கு விளைதலாற்—கள்ளமனத்
துள்ளலரு சாந்த சொரூபானு பூதிநலந்
தெள்ளிதா வுற்றேன் சிவத்து.

### உ. சொரூப ஆரோக்கியம் பெற்றது

(வெண்பா)

911. விருந்தாக வுள்ள விசுத்தவருட் பாத
மருந்தாலென் மாயநோய் மாயப்—பொருந்திற்
றுளசிவமா மோன வுதாரச் சித்தாக்
கிளர்சொருப வாரோக் கியம்.

### ஊ. சொரூப பாக்கியம்

(வெண்பா)

912. எனக்கெனக்கென் றேது மியற்கையற முற்றத்
தனிக்கநிற்கும் கேவலமெய்த் தன்மை—எனக்
[கினிக்க
வுள்ளத் தொளிர்சொருப வொட்பமே பாக்கியமாத்
தெள்ளத் தெளிந்தேன் சிவத்து.

### எ. சொரூப வாழ்வு

(குறள்)

913. புலங்கடந்த வாழ்வாப் புணர்சொருப போதம்
இலங்கலா லுற்றே னியல்.

914. தொல்லியல்பா வுள்ள துரீய சொரூபமே
மல்கியது வா வா மனத்து.

915. சுத்தவெளி யான சொருபானு பூதியெனக்
கத்த னளித்த வருள்.

916. ஒன்றவுளம் புக்க வுணர்வே சொருபமா
மன்ற விளங்கியது வா வு.

917. துன்றுபரஞ் சோதி சொருபமே துப்பாக
மன்றவியல் கின்றதென் வாழ்வு.

918. அனுபவமாப் பொங்குசுத் தான்ம சொருப
நனவியல்பா நண்ணிற்று வாழ்வு.

919. தோன்றாத் துணையாத் துலங்கு சொரூபமே
சான்றாத் தழைத்ததென் வாழ்வு.

920. ஆட்சிசெய் கின்ற வருட்கே வலசொரூப
மாட்சியிலே மல்கியதென் வாழ்வு.

921. அத்துவித வுண்மையா வான்ற சொரூபவியற்
சித்துவத்தில் வாழ்வுதினைத் தேன்.

922. சுத்தவெளி யாகத் துலங்கியவென் னுண்மையே
தத்துவமா நான்சதிர்த் தேன்.

(வெண்பா)

923. அசலமா மோன வருள்வெளியா வுள்ளேன்
நிசசொரூப ஞான நிறைவால்—மசரதமா(ம்)
மாயா விலாச மயல்வாழ் வனைத்துமென்பாற்
சாயா சமூகமே தாம்.

924. அருள்வெற்றி சேர்ந்த வகத்தே யகந்தை
மருளற் றொளிர்சொரூப வாழ்வே—இருளற்
றகன்றபர வுண்மையா வாதிக்கஞ் சேர
முகந்ததனு பூதி முகப்பு.

25. திறந்தவெளி யாகத் திகழ்சொரூப வாழ்வு
மறந்தொழிய வொண்ணுத மாட்சி—சிறந்தியல்சற்
போதவருட் பூரணமாப் பொங்குமனு பூதிமனக்
கேதமற நீடுங் கிளர்ந்து.

926. நான்கெட்ட மோனமெய்ஞ் ஞானவருட் செம் [பதமாத்
தான்கிட் டியசொரூபத் தற்பரமே—ஊன்கெட்
டுயிர்கெட் டுணர்கெட் டுளங்கெட் டுழக்குஞ்
செயல்கெட்ட வாழ்க்கைத் திறம்.

927. மனத்தை யடிக்கே மடுத்தேன் அகந்தை
முனைத்தலறு மோனம் முகந்தேன்—கனத்தவருட்
காட்சியான் மோகங் கரப்பப் பரசொரூப
மாட்சியா லோங்கியது வாழ்வு.

928. முத்திக்கு வித்தான மோன முழுமுதலா
வெத்திக்கும் போற்று மிறைரமணன்—சித்தக்
கலக்கமாஞ் சிச்சடப்பொய்க் கட்டறவென் னுண்மை
துலக்கினன் வாழ்வே சுகம்.

(கொச்சகக் கலிப்பா)

929. *சித்திரமா மோகச் செருக்கான சிச்சடப்பொய்
செத்தொழிவோர் தம்மியல்பாத் தேறித் திளைக்கின்ற
வித்தகவாழ் வாக விளங்குவதென் னுள்ளத்து
நித்தியமா வுள்ளமெய்ஞ் ஞேய சொரூபமே.

*குறிப்பு:—சிச்சடப் பொய்ச் சித்திரமா மோகச் செருக்கு என மாற்றிக் கொள்க

௫. சொரூப இயல் வாழ்வு

(குறள்)

930. பரமசிவத் தன்மைமுற்றப் பற்றலா லுள்ளத்
திரமியமா வுற்ற தியல்.

௬. சொரூப காட்சி

(வெண்பா)

931. சுத்த வெளியே சொரூபமாக் காண்டலான்
மெய்த்தவமே வாழ்வா விளங்கியதே—மொய்த்
[தியல்பல்
பேத வுலகுமுற்றும் பேரவொரு தன்மயமாப்
பாய்தலுற்ற துண்மைப் பரம்.

932. மோனப் பதவொளியே முத்தியாய்ப் பாசபந்த
வூனக் கலக்க மொழிதலால்—ஞானக்
கடவுட் பரசொருபக் காட்சியென் னுள்ளம்
படர்வுற்ற தெங்கும் பரந்து.

௭. சொரூபக் காட்சியும் பயனும்

(வெண்பா)

933. ஒளிவெளியா வுள்ளத் தொளிர்சொருபக் காட்சித்
தெளிவெளியேன் பெற்ற திறத்தால்—களிவளர்
[பொய்ம்
மோகப் புலப்பசைதீர் மோனப் பரசுகவாழ்
வாகப் பரந்த தறிவு.

## அ. சொரூபத்தில் சொக்கினேன்

(குறள்)

934. பொய்க்கா ரவிச்சையறப் புந்தியிற்புக் காறெளியிற்
சொக்காநின் றேன்சுபமுற் றேன்.

(வெண்பா)

935. மேதையாந் தட்சிணு மூர்த்தி விலாசமெழப்
பேதையே னுள்ளம் பிறங்கலாற்—பேதையேன்
சொக்கினே னென்ற சொரூபத்தே மற்றொன்று
கற்கிலே னில்லேன் கருத்து.

## க. சொரூபானுபூதி

(வெண்பா)

936. புத்தி புகுந்தசிவ பூரணத்திற் பொய்ம்மயக்கச்
சித்தமல மான செருக்கழிந்து—சுத்தவருட்
போத சொரூபமாப் பொங்குமனு பூதிவெள்ளம்
பாய்தலுற்ற தெங்கும் பரந்து.

937. போதவெளி யானவருட் பூரணமா மோனநிலை
யார்தலா லென்ற னறிவூடே—பேதமகல்
சுத்தாத் துவித சொரூபானு பூதியின்முற்
றுத்தாங் குறைவ துணர்வு.

938. வாழக் கிடைத்தவருள் வண்பதமே தாரகமாப்
பாழைக் கடந்தசிவ பாக்கியத்தால்—ஏழைத்
தொழும்பனேன் ஞான சொரூபானு பூதிப்
பழம்புசித்தேன் சாந்திபடைத் தேன்.

(கொச்சகக் கலிப்பா)

939. அவத்தமா மோக வகப்பேய் கரக்கத்
தவத்திலே ஞானந் தழைத்தலால், ஆன்ற
சுவத்தமா வுள்ள சொரூபானு பூதி
சிவத்திலே யாரத் திளைக்கலுற் றேனே.

940. சிவத்தையே யோர்ந்து செழிக்கவாழ் கின்றேன்;
அவத்தமா மோக வவலவாழ் வோரேன்;
சுவத்தமா வுள்ள சொரூபானு பூதித்
தவத்திலே நாளுந் தழைக்கலுற் றேனே.

ஙரு. **சொரூபானுபூதியும் பயனும்**

(குறள்)

941. போத சொரூபானு பூதியாற் பொன்றியது
பேதமயல் வாதப் பிழை.

942. அருட்பூ ரணமா வவிர்சொரு பத்தால்
இருட்பா ழகப்பே யிலே.

## 15. தியானம்

க. **சொரூபத் தியானம்**

(குறள்)

943. உலப்பில் சொரூபமா வோர்த்துணர்ந்தேன் வேறு
புலப்படா வுண்மைப் பொருள்.

(வெண்பா)

944. யாங்குமெனக் கீங்கா மிதயமா வுள்ளுணர்வு
நீங்கா தொளிர்சொருப நேயத்தால்—ஓங்கு
தியானானு பூதி செழித்தொளிரா நின்ற
தியானான வாழ்வா வினிது.

945. அருட்சீ ரமுதஞா னனுபவ மோன
வுருச்சேரப் பெற்ற வுளத்தால்—மருட்சிக்
கலக்கமற்ற சாந்தியே கைவல்ய மாநன்
கிலக்கமுற்ற தென்மெய் யியல்.

946. கண்ணவாற் காட்சியிலாக் கண்ணே சொரூபமா
நண்ணலா லென்சொருப நாட்டமே—எண்ணிலா
வண்டாண்ட கோடி யனைத்துமாங் கற்பனையாக்
கண்டாங் கொளிர்வதாங் காண்.

947. அருள்வடிவா வுள்ள வனந்தசிவ சத்தி
இருள்விடிய வுள்ளத் தெழலால்—அருள்வெளியா
வான்ற சொரூபஞா னனுபவ மாட்சிமிக
என்றதியல் பாக வினிது.

948. வெற்றறிவா வுண்மை விளங்கு சொரூபமன்றிக்
கற்றறியேன் மற்றேர் கலைஞானம்—மற்றறியேன்
யாதும் பிறிதாக யானென் பதுமுதலா;
மூதுணர்வா மோனமூண் டேன்.

949. அறிவறி யாமை யகன்றெழிய வுள்ளத்
தறிவுருவா வென்னை யறிந்தேன்—பிறவாம்
அகிலங் களுமென் னறிவன்றி யின்றய்
நிகழ்கின்ற தென்மெய்ந் நிலை.

குறிப்பு:—என்னறிவு - என் சொரூபமாகிய அவ்
வறிவு, இராகுவின் தலை என்றாற் போல.

950. அறிந்துகொண் டேன்பர மார்த்த சொரூபம்
செறிந்திடவென் சித்தஞ் சிவத்தே—மறந்தொழிய
வொண்ணாத மோன வுணர்வொளிகூர் சுத்தவருள்
விண்ணா விளங்கியதென் மெய்.

951. அறிவேநா னாக வறிந்தேன் சொரூப
வறிவின்மற் றென்று மறியேன்—அறிவே
முழுமுதலா வுள்ளவொரு மோனப் பரமாக்
கெழுமியதென் னுள்ளங் கிளர்ந்து.

952. ஒன்றக் கடவதோ ருண்மையாந் தன்சொருப
வென்றியொளி யுள்ளத்தே வீசலான்—மன்ற
விளங்குபர மோன வெளியில்வெம் பாசக்
களங்கங் கரந்தது காண்.

953. உளத்தே சொரூப வுணர்வொளிசேர் வாழ்வு
திளைத்தே சுபாவநிலை சேர்ந்தேன்—உளத்தே
கொளுந்துவிட்ட தாபக் கொடும்பாடு நீங்க
வொழிந்ததுவெம் பாச வுணர்வு.

குறிப்பு:—கொழுந்து விட்ட தாபம் - கொழுந்துவிட்
டெரிந்தாற் போலக் கூறிய சம்சாரதாபம்,
பாசவுணர்வு - சம்சார பந்த வடிவான
மயக்க வுணர்வு,

954. தலைப்பட் டொளிர்சொருப சாந்தானு பூதி
நிலைப்புற் றியன்ற நிறைவால்—வலைப்பட்
டுழன்ருலே போன்ற வுலகியல்வெம் பாசங்
கழன்றதுகண் மாயமாக் காண்.

குறிப்பு:—காண்—முன்னிலையசை.

955. வெளியாக வுண்மை விளங்குறுமெய்ஞ் ஞானக்
களிசேர்ந்த சாந்திக் கலப்பால்—இளிசேர்
மயக்கவகங் கார மனக்கலக்க மான
வுயக்கமறத் தீர்ந்த துளத்து.

956. அறிவான வுண்மை யகமகமென் றுள்ளம்
பிறியா தொளிர்சொருபப் பெட்பால்—வெறிசேர்ந்
துழலுமகப் பேய்முனைப்பற் றுள்ளுணர்வா மோனத்
திழைதலுறப் பொங்கிற் றியல்.

(கொச்சகக் கலிப்பா)

957. நண்ணலரு மோன நலஞ்சான்ற சாந்தியால்
எண்ணவொ ணுத வியற்பரத்தை யெண்ணுகின் [றேன்
கண்ணதுதா னந்தமிலாக் கண்ணு வொளிர் [சொருப
வண்ணமே யாக மனங்கிளர்ந்த வாற்ருலே.

958. உள்ளதே வாழ்வா வுணர்ந்தேன்; உணர்வுருவா
வுள்ள சொரூப வுளத்தினின்று பேய்முனைப்பா
லெள்ளத் தனையு மினிப்பெயரேன், இன்னருளாற்
கள்ளமனப் பாழைக் கடந்த வடியேனே.

## ௬. நிரந்தர தியானம்

(வெண்பா)

959. அகத்தே சொரூப வருள்வெளிவாழ் வாக
மிகத்தெளிந்த ஞான விபூதி—இகத்தே
அடைவித்த வென்னருமை யாண்டவனை நானற்
றிடையரு தெண்ணுகின் றேன்.

960. நிந்தையற்ற மோன நிலச்செம் பதத்திலன்றிச்
சிந்தைநமற் றெங்குமொன் றுஞ் செல்லாது—விந்தைதசே
ரன்புமய மானபே ரின்பவருள் வாழ்வளித்த
நம்பனையே சிந்திப்பேன் நான்.

(கொச்சகக் கலிப்பா)

961. சுட்டறிவுக் கெட்டாத் துரீய சொரூபமெனக்
குட்டெளிவாப் பொங்க வுகந்தருளிச் செய்தபிரான்
கட்டழகு சான்றவருட் கைவல்யச் சிற்பரத்தை
நட்டமனத் ஞாலியல்பா நான்கருது கின்றேனே.

குறிப்பு:— நட்டமனம் - நஷ்டமனம்; இழந்த மனம்; இறந்த மனம்.

## ௬. குருசொரூப நாட்டம்

(வெண்பா)

962. விரிஞ்சாதி தேவர் விழைந்து தொழும் பாதப்
பரஞ்சோதி யான பகவன்—நிரஞ்சனவிஞ்
ஞான சொரூபமெய்ந் நாட்டமெனக் குள்ளுணர்வா
னைமறப் பற்றிந் றளத்து.

## ௭. குரு சொரூப தியானமும் பயனும்

(குறள்)

963. ஆண்டானை யெண்ணியெண்ணி யன்பால் அகந்
தூண்டாநின் றேன்மெய்ச் சுடர். [தெளியத்

964. அருளே சொரூபமா வாண்டவனை யெண்ணி
மருளேத மற்றேன் மனத்து.

(வெண்பா)

அண்ணலைநா னெண்ணி யகமகிழும் பேரின்பம்
பண்ணியமுற் புண்ணியத்தின் பாக்கியமே—
மழகிதா மந்த வருட்பாக் கியச்சீ [வண்ண
ரெழுகதா னென்று மெனக்கு.

966. அண்ணலே நா னென்னலா வெண்ணலேபிக்
[கோய்தலுறப்
பண்ண லுறும்பவளிற் பற்றற்றேன்—நண்ணலுறு
சங்கந் தணந்தேன் சதாசார மோனமே
யெங்குங் கலத்தலுற் றேன்.

967. அலைந்தமெய் யன்பே யருள்விளக்க மாகத்
தெளிந்த தியானமென் சித்தத்—தலைந்தியல்பா
ஊற்றெடுக்க லான வொழுக்கமே யாடவெனக்
காற்றொழுக்காய்ப் பாய்ந்த தகத்து.

968. கடையே னறிவிற் கருணையா லுன்மை
நடை புகட்டி யாண்டவென் னாற்பன்—அடியே
னுளங்கோயில் வாழ முடையான் சொரூப
வொளிக்கோல முள்ளு முணர்வு.

969. குறிக்கொண்ட தான குருசொரூ பத்தைச்
சிறைக்கொண்டு நெஞ்சிற் செறித்தேன்—சிறைக்
[கொண்ட
அஃதறிவு டாக்கிற் றகண்டவருட் சிற்பரமா
வெஃகு சிவானந்த விளைவு.

970. தெருமரலின் றகவகச்* செம்பொருளைத் தேற்றும்
திருவருளின் மாட்டுசேர் செம்மல்—குருரமண
தன்ம சொரூப தயாநிதிதன் சிற்பதத்தை
என்மனத்தே வைத்தே னினிது.

*அகச் செம்பொருள்—அகம்பத லக்ஷ்யார்த்தமான
பிரம்ம சொரூபம்.

971. தெள்ளத் தெளிந்த சிவோகமோ னனுபவ
வெள்ளத் துருவான மெய்ப்பதத்தை—உள்ளத்தி
னுள்ளே யுணர்த்தி யுதவியவென் னுண்டவனை
யுள்ளாதே யுள்ளு முணர்வு.

972. எந்தையை யெண்ணலெனக் கின்பம் பயத்தலால்
எந்தை சுகசொருப மென்றறிந்தேன்—எந்தையை
மோனவுணர் வாலே முகந்துகொண் டென்னுளத்து
நானுமது வானேன் நயந்து.

(கொச்சகக் கலிப்பா)

973. என்பாலே தன்னை யிலக்கியவாற் றுலினிதாத்
தன்பாலே யென்னைத் தரிப்பித்தே தண்ணளிகூ
ரன்பாலே யென்னையடிக் காட்கொண்ட வம்மானைப்
பொன்போலே போற்றிப் பொதிந்துவைத்தேன்
[புந்தியிலே.

974. மோனப் பரவெளியா முற்றலுற்ற வுள்ளத்து
நானற் றெளிர்சொருப ஞானூ பூதியுற்றேன்
யானத்த னை விறைவனை மெய் யன்புபட்டுத்
தேனைத் தினிக்கத் தியானித்த லாற்றலே.

குறிப்பு :—யான் தியானித்த வாற்றல் எனக்கூட்டுக.

975. ஞானப் பிழம்பான நம்பனைச்சிந் தித்தலால்
ஊனக் கலக்க வுடற்பிறவித் துன்பமற
மோனப் பரசொருப முத்தியென் னுள்ளுணர்வில்
வானப் பெருவாழ்வா வைக மலர்ந்ததே.

குறிப்பு :—வைகுதல் – தங்குதல்

976. அறக்கடையே னை வகப்பேயேன் சற்று
மறுக்க வொண்ணாத வறிவொளியா வுள்ளத்
திறுக்கலற்ற வாண்டவனை யெண்ணியெண்ணி
[யானென்
மறுக்கமற்றேன் அத்துவித மாண்பதம்பெற்
[றேனே.

977. சாவாத முற்றமுழுத் தற்பரமெய்த் தத்துவமாந்
தேவாதி தேவனை நான் சிந்தித்த வவ்வளவிற்
சாவாத வாழ்வாத் தழைத்ததென் னுள்ளத்துத்
தாவாத சுத்தசிவ சச்சிதா னந்தமே.

978. உள்ளமே கோயிலா வுற்றவென் னண்டவனைத்
தெள்ளவே நாளுந் தியானித்த சீர்மையாற்
கள்ளமோர் சற்றுங் கலவாத சுத்தவருள்
வெள்ளமே யாக விளைந்ததுபே ரின்பமே.

979. குறிதணைந்திர் சத்தவருட் கோமான் சொருப
நிறைவில்லை நெஞ்சழுந்த நிற்றலாற் சுற்றும்
பிறிதற்ற சுத்தப் பிரமபாறு பூதி
யுறவியன்ற தூள்ளத் துணர்வு தெளிந்தே.

980. அந்தனருட்சே வடியுணர்வே யுள்ளத்து
மெய்த்தவவாழ் வாக விளைதலாற் பொங்கலுற்ற
சுத்த வறிவுந் தூக்கமா மோனத்திற்
செத்துபொய்ம் மோகச் செருக்கா மகந்தையே.

குறிப்பு:—உணர்வு - தியானம்.

981. நிச்சார மாவுலகு நீங்கக் குருசொருப
வச்சாணி சேர்ந்த வகத்தே உடல்வடிவப்
பொச்சாப் பகன்றொழியப் பொங்கியது தன்
[னின்மந்
றெச்சார்பு மற்ற வியற்சிற் பரவெளியே.

982. ஓரியல்பா வுள்ள வொருத்தன் சொருபமே
தேரியல்பாற் சித்தந் தெளிந்து சிவானுபவ
வீரியமெய்ஞ் ஞான விலாசங் கிளர்செருபச்
சீரியல்வாழ் வெண்ணியல்பாத் தேக்கியது பாக்கி
[யமே.

## ௬. தியானப் பயன்

(வெண்பா)

983. என்னறிவு தன்பதத்தை யெண்ணியெண்ணித்
[தன்சொருப
நன்னயமா வோங்குசிவ ஞானமாய்த்—துன்னும்
மயற்பசுபா சத்தின் வழக்கொழிய மோன
வியற்பரமா னைவிற் றினிது.

984 சித்தத்தை யாண்டவன்பாற் சேர்த்தலான் மெய்ஞ்
[ஞான
பத்தித் தவமியல்பாப் பற்றவே—சித்தக்
கலக்கமறு மோனவருட் கைவல்ய வாழ்க்கை
இலக்கமுற்ற துள்ளத் தினிது.

985. பொள்ளா மணியாப் புணர்ந்தவருட் பூரணத்தை
உள்ளாதே யுள்ளு முணர்வாலே—விள்ளா
தனனியமாய்ப் போற்றி யமைதிசேர் வாழ்க்கை
எனதியல்பா வுற்றே னினிது.

986. பொள்ளா முழுமணியாப் புக்கவருட் பூரணத்தை
யுள்ளாம லுள்ளு முணர்வாலே—பிள்ளா
வெறுவெளியாந் தன்மை விளங்கவெனக் குள்ளே
யறிவொளியா வன்பு மலர்ந்தேன்.

## 16. திருப்தி

௬. திருப்தி

(குறள்)

987. அருத்தியெலாம் *முற்ற வருள்விளக்க மாமெய்த்
திருத்தி யடைந்தேன் சிவத்து.

* முற்றுதல் - நிறைவேறுதல்.

(வெண்பா)

988. உள்ளதுபே ரின்ப வுணர்வுருவாஞ் செப்பொருளாத்
தெள்ளுமனு பூதித் திறத்தாலே—உள்ளதே
போதுமெனுஞ் சிந்தையே பொன்செய் யருமருந்
தோதுமொழி யுண்மைகண் டேன். [தென்

989. சிற்பரமா மோனத் தெளிவேபே ரின்பவருட்
கற்பகமா வோங்கவளர் காட்சியால்—அற்பமனக்
கோரிக்கை தீரக் குறைவிலா மெய்ந்நிறைவு
சேரக்கை கூடிற் றெனக்கு.

990. புணர்ந்தவருட் போகப் பொலிவா லிதயத்
தணைந்த திருத்தியெல்லை யின்றாய்த்—தணந்
பல்விடய மோகப் பசைசே ரசைவுமற [தொழியப்
மல்கியது மோனம் மனத்து.

குறிப்பு :—பல் .........அசைவும் அறத்தணந்தொழிய எனக் கூட்டுக. தணந்தொழிய — அகன்றொழிய. பசை — வாசனை. அசைவு — மனக்கலக்கமான வருத்தம்.

991. ஞானவருட் காந்தமா நம்பன் குருரமணன்
மோனவியற் பாதமா மூலதனம் — வானளவக்
காண்டலான் முற்றுங் கனதிருத்தி யென்னுளத்தூ
டண்டலா யாசையற் றேன்.

(கொச்சகக் கலிப்பா)

992. உருப்படா துள்ளத் தொடுங்கலுற்ற வாற்றல்
இருப்புணர்வாந் தன்மெய் யியல்விளங்கக் கண்டு
விருப்புறாப் பேரின்ப வெள்ளமா மோனத்
திருப்புதவாழ் வுற்றுத் திருத்தியடைந் தேனே.

993. துன்று சொரூபவருட் சொக்கன்பால் ஈண்ட [வெனக்
கென்றும்பே ரின்பவுணர் வெய்தலாற் றன்னின்மற்
றொன்று மவாவா வுரஞ்சேர் திருத்தியுற்றேன்
மன்ற விளங்குசிவ மாட்சிசேர் வண்பதத்தே.

994. சிற்பரமா வென்னுண்மை தேற்றி யருளியமெய்க்
*கற்பகமூ லத்திற் கலந்ததென் னுள்ளத்திற்
கற்பனு மோகக் கலக்கமனப் பிடைதீர்
அற்புதவாழ் வான வனந்த திருத்தியே.

* கற்பகமூலம் - குருபாதம்.

## உ. நிரங்குச திருப்தி

(குறள்)

995. வீணனு மென்னை வியன்பரமா வாண்டவன்பால்
வேணவா முற்றிற் றெனக்கு.

## ங. சுகோதயம்

(கொச்சகக் கலிப்பா)

996. ஊனமற்ற வுண்மை யொளியான சுத்தவருள்
வானமாச் சேர்சொருப மாட்சியால் யானறத்தீர்
மோனமே ஞான முடியா முகந்துகொண்டேற்
கீனமற வுள்ளத் தெழுந்ததுபே ரின்பமே.

997. பம்புமன மாயப் பசாசஜா லப்பகட்டுத்
தம்பமற வென்னைத் தடுத்தாண் டிதயத்திற்
செம்பொன் மயமாத் திகழ்சொரூபன் மாட்டுப்பே
ரின்பமய மான வியற்பரவாழ் வீண்டிடுதே.

## 17. அகம்

### க. அகம்

(குறள்)

998. அகன்சிற் பரவெளியே யாக விளங்கிற்
றகமென்னுஞ் சென்சொற் பொருள்

குறிப்பு:—பொருள் — முடிந்த பொருள்,
லட்சியார்த்தம்.

999. அருள்வெளியிற் கண்டே னகம்பரமா முண்மை
மருள்வதற்கங் கில்லை மனம்.

குறிப்பு—வெருள்வதற்கங் கில்லை விகற்பு எனவும்
பாடம்.

1000. இன்பமய மாக விருந்தொளிர்தன் னுண்மையால்
அன்புமய மாயிற் றகம்.

1001. ஆக்கவழி வற்ற வருள்வெளியாப் பொங்குமகம்
மோக்கமா முற்றிற் றுணர்வு.

(வெண்பா)

1002. உண்மை யுணர்வொளிசே ருள்ளத்தா லின்பவருள்
வண்மைசேர் சாந்த வடிவாகத்—திண்மைசேர்
மோனகம் பிர முழுமுதற்சிற் றம்பலமே
யானதென் னுண்மை யகம்.

1003. ஒருமைப்பா டானவுணர்ச்சியே மோனப்
பெருமைப்பீ டாகப் பிறங்க—அருமைக்
கருணை விலாசங் கருத்தா டைந்தால்
அருணை சலமா மகம்.

1004. பரம்பொருளா மோனவருட் பாக்கியமாம் பாதம்
அரும்பொருளா வாய்த்த வடைவால்—விரும்ப
ஆசை யனைத்து மடங்கிப்பே ரின்பத்துக் [லூற்ற
காசயமே யாயிற் றகம்.

### உ. அகமகம்

(குறள்)

1005. இடைவிடா துள்ளத் தியல்வதுநா னென்
றுடையவனே யாரு முணர்வு.

### ௩. அகம் ஸ்புரணம்

(குறள்)

1006. ஆண்டா னருளே யகம்புரண மாகவெனக்
கீண்டலூற்ற துள்ளத் தினிது.

(வெண்பா)

1007. அருள்வெளியாத் துன்றுசுத் தான்ம சொரூபப்
பொருள்விளங்கு மோனனு பூதி—திரளவகத்
தாண்டவன்மெய் யன்பா லகமகமென் றுள்ளூரத்
தூண்டுகின்றான் ஞானச் சுடர்.

(கொச்சகக் கலிப்பா)

1008. இதயத் திருந்த விறைவனை நானவ்
விதய மொழிந்தமற் றெல்லா விடத்தும்
மதியிற்றே டிப்பின் மடங்கலுற் றேனுக்
கிதயத் திருந்தாங் கிதோநானென் றானே.

குறிப்பு: மதியில் - அகந்தை முளைப்பான சுட்ட [றிவால்
மடங்கல் - ஜீவபோதச்சேஷ்டையடங்கல்;
அகமுகமாகத் திரும்பலுமாம்.

1009. உள்ளக் கருவான வுண்மையைநா னுய்த்துணரா
தொள்ளியேன் போற்கூட் டுணர்வா லுருத்துருத்துக்
கள்ளமனக் கற்பனையே கண்டு கலங்குங்கால்
உள்ளத் தகமகமென் றுள்ளொளியா வுற்றனே.

1010. ஊன வகப்பாழை யூடுருவி யுள்ளத்து
மோனங் கிளர்ந்த முகூர்த்தமே, சுத்தவருள்
வானவெளி யாக வளாவுசொரு பானுபவ
ஞானவொளி மூண்டதுநா னென்று தான்றனே

1011. அகிலங் களுக்குமா ரந்த ரியாமியா
நிகிலங் கடந்த நிஜச்சிற் பரசிவமே
அகளங்க மானசுத் தான்ம சொரூபமா
அகமக மென்ன வனுபவ மார்ந்ததே.

1012. மோகவகங் கார முனைப்பா வெழுந்தமனோ
வேகங் கெடவிழித்த வித்தகன்சற் போதவருட்
போகவனு பூதி பொருந்தவியற் பூரணமா
ஏக சொரூபவுண்மை யான்யானென் றோங்கியதே.

1013. கருத்திற் பரமார்த்தக் கைவல்ய வுண்மை
திருத்தமாப் பொங்குநிஜ சித்தியால் யாதும்
விருத்தமற்ற மோன விபூதி விளங்கப்
புரித்ததியற் பூரணமாம் போதவுருத் தானே.

## 18. மெய்

### க. மெய்க் கல்வி

(கொச்சகக் கலிப்பா)

1014. கற்கக் கடவமெய்க் கல்வியா வுள்ளத்து
நிற்கலுற் றானை நெறிப்பட் டவனருளாற்
கற்கலுற்ற மெய்ஞ்ஞானக் கல்வி யவனிலுஞ்சற்
றற்பமும்வே றன்றி யவிர்ந்ததவ னாகவே

## உ. மெய்க் காட்சி (தத்துவ தரிசனம்)

(குறள்)

1015. காணப் புலமில்லாக் காட்சியாங் கண்ணுக
மாணப்பெற் றேன்சின் மயம்.

(வெண்பா)

1016. நெஞ்சத் தலத்து நிறைந்தொளிர்சற் போதவருட்
கஞ்சப் பதமாமெய்க் கண்ணுலே—வஞ்சமனப்
பாழ்மயக்க மாகப் படருலகக் கற்பனையைப்
பாழ்படக்காண் கின்றேன் பரத்து.

1017. காண்பவனைக் கண்டு களித்தேன் கனசொருப
மாண்பிலனைத் தூந்தன் மயமாகக் காண்புடியின்
பேதமனைத் துங்கற் பிதமாக வுற்றதுசற்
போதவருட் காட்சிப் பொலிவு.

(கொச்சகக் கலிப்பா)

1018. விரவுற்ற சிச்சடப்பொய் வேறுபடக் காணும்
பரவித்தை யால்வெம் பசத்துவப்பாழ் மோகக்
கரவற் றொழியக் கடவுளியல் கண்டேன்
ஆருவுற்றேன் னுண்மையைச் சோதித்த தாலே.

1019. கண்டறிய வொண்ணுக் கழலைநான் உள்ளொ
[டுங்கிக்
கண்டறிந்தே னந்தக் கழல்விளக்க மாட்சியால்,
கண்டறிந்து கொண்டகழற் காட்சியின் மாட்சி
[யால்
விண்டொழியக் கண்டேன் விகற்பமனக் கற்பனையே.

1020. தன்னியல்பாற் றுளொளிர்மெய்த் தத்துவத்தை
[யல்லதுமற்
றன்னியங்க ளெல்லா மசற்கற் பனையென்பர்;
என்னியல்பா வுள்ளத் திருந்தொளிர்சச் சிற்பரமா
மன்னியது காண்க மகத்தான தற்பரமே.

1021. கண்ணிற் கருத்திற் புலப்படக்காண் கிற்பவெல்
[லாம்
கண்ணுறுவா னுட்படப்பொய்க் கற்பனையே மெய்ஞ்
[ஞானக்
கண்ணுக் கினியவருட் காட்சி சொரூபமாக்
கண்ணுற்றேன் காணவயற் காட்சியென் னுள்ளதே.

1022. சீரூரா வுள்ள சிதம்பரமெய்க் காட்சியே
பேரூரா வுள்ள பிரம்மலோ கப்பேரு
ஆரூரா வுள்ள வகத்தே யனுபவமாய்க்
காரூரா மோனவியற் கைவல்யங் காட்டியதே.

குறிப்பு:—கார் ஊரா - இருள் சேராத.

1023. வண்மைசேர் சாந்தவியல் வாழ்வுதரு தன்சொருப
வுண்மையொளி யாக வுணர்விலுற்ற காட்சியாற்
றிண்மைசே ருண்மைத் தெளிவா வியல்சொருப
நுண்மைசேர் நோக்கமே மோக்கமா மூண்டதே.

1024. மூண்டிதயம் பொங்குசுப மோனனு பூதியால்
வேண்டவுமொன் றில்லை வெறுக்கவுமற் றொன்
[றில்லை
ஈண்டியபே ரின்பவெளி யேக சொரூபமாக்
காண்டகுமெய்க் காட்சியே கண்ணுற வியன்றதே.

1025. நுண்ணுணுகிச் சென்றடைந்த நோக்கால் அகத்தி
[லெனக
குண்ணனவா வுள்ளதோ ருண்மைப் புலங்கண்
[டேன்;
விண்ணுளே விண்ணு விளங்குமதி நுட்பவொட்பக்
கண்ணுளே கண்டுகொண்டேன் கைவல்யச் செம்
[பதமே.

1026. நண்ணலுற்ற சுத்தமெய்ஞ் ஞானநாட் டத்தி
[லெனக்
கெண்ண விசைக்க வியற்றவென் றொன்றுமில்லை;
விண்ணுருவாத் தானே விளங்குமியற் சிற்பரமெய்க்
கண்ணலா வில்லையங்கோர் கற்பனு பேதமே.

1027. குருவருள் செய்த குலாவால் எனக்கே
உருவமில் லாதொழிந்த வுண்மை யுணர்வால்
உருவக் கடவுளை நா னேரேன் உளத்தா
டருவமா வுள்ள வருட்பரமல் லாதே.

1028. கருத்தை யிறைவன் கடவுட் பதத்தில்
இருத்தியதா லுள்ளத் தியல்பாகத் துன்று
திருத்தியே சாந்திச் சிறப்பாத் திகழ்மெய்ப்
பரத்தியல் கண்டேன்வெம் பாசம்விண் டேனே.

## ௬. மெய்த்தன்மை

(குறள்)

1029. யானெனும்பொய்த் தன்மை யிறக்க விளங்கியது
தானெனுமெய்த் தன்மை தழைத்து.

1030. ஆண்ட பிரான்மாட் டனுபூதி யாகவகத்
தீண்டலுற்ற தென்மெய் யியல்.

1031. மெய்யியல்வாழ் வாக விளங்கிற் றெனையாண்ட
வையன் சொரூப வருள்.

## ௭. மெய்ச் செல்வம்

(வெண்பா)

1032. ஆண்டா னருளடிக்கீ ழார்ந்தே னகம்பொங்க
வேண்டாமை யென்னும் விழுச்செல்வம்—மூண்டு
விருத்தி யெழாத விசுத்தமெய்ஞ் ஞானத்
திருத்தியன்றோ வுண்மைத் திரு.

1033. கனவினுன் று நான்விழிக்கக் கைவல்ய மோன
நனவுணர்வா நின்றகுரு நாதன்—மனோமயமாங்
கற்பனு ஞானக் கலக்கமறக் காண்சொருபச்
சிற்பதமே யுண்மைத் திரு.

1034. கைவல் லியசொருபக் காட்சியா லாவரணப்
பொய்வல் லவிச்சைசயிருள் பொன்றலால்—ஐயுணர்
விட்சேப மான விகற்பமற வாய்த்தது மெய்ந் [வின்
நிச்சேப மான நிதி.

(கொச்சகக் கலிப்பா)

1035. இருட்சர்ப் பனையா லியைந்த பிறப்பில்
வெருட்சிப் படர்சேர் வியாகுலந் தீர
அருட்சிற் பதமே யனந்த சிவச்செம்
பொருட்போக் கிசமாப் பொலியலுற் றேனே.

௫. மெய்ந் நோக்கு

(கொச்சகக் கலிப்பா)

1036. உண்மை யுணர்வே யுளங்கிளர்வாழ் வாகவியல்
வண்மைசேர் சாந்தி மடுத்த சிவானுபவத்
திண்மையா லெந்தவிதச் சித்தக் கலக்கமுந்திர்
நுண்மைசே ருண்மையன்றி நோக்கம்வே றில்லையே.

௬. மெய்ப் பயனுறல்

(குறள்)

1037. அடிப்படையா வுள்ள வதிதப் பரத்திற்
படைக்கலுற்றே னுண்மைப் பயன்.

௭. மெய்ந் நலன்

(வெண்பா)

1038. வெளியே யுளமா விளங்குசிவ போத
வொளியா வுயிர்க்கு முணர்வால்—களிசேர்
மயக்க வகந்தைமதி மாய்ந்தொழியச் சிந்தை
நயக்கலுற்ற துண்மை நலன்.

1039. சித்தக் கலக்கமறத் தீர்ந்தொழியச் சிற்பரமா
முத்தித் துலக்கமுறு மோனமுண்டாய்—நித்த
மான சொரூபஞா னுபவ சாந்தியிலே [சித்த
நானடைந்தே னுண்மை நலன்.

அ. மெய்ப் பேரடைவு

(குறள்)

1040. உறுதிப் பொருளா வொளிர்சொருப வுண்மைப்
*பெறுதியா நின்றான் பிரான்.

*பெறுதி - பேறு.

1041. எண்ணமற்ற மோன வியல்வா லறிவுருவா
நண்ணறுற்றே னுண்மை நலன்.

1042. மோன வுணர்வுபர முத்திப்பே ரின்பமா
நானடைந்தே னுண்மை நலன்.

(வெண்பா)

1043. அருளையே யெண்ணி யகங்கிளர்மெய்ஞ் ஞானப்
பொருளையே பேணும் புலத்தால்—மருளியல்சேர்
பொல்லா விகற்பமறப் பொங்குஞா னுபவத்
தெல்லா நலனுமுற் றேன்.

க. மெய்யன்பு

(குறள்)

1044. அன்பு படைத்தாங் கருட்சிற் பதத்திலெனக்
கின்பவாழ் வீண்டிற் றினிது.

1045. காணுமெய்க் கண்ணைக் கலந்தேன்மற் றென்று
காணுங்கண் ணைவுமுன்ற நான். [சுட்டிக்

1046. உய்வகையென் னுருயிருக் குள்ளம்புக் காண்டு
வையன்மே லூற்றமெய் யன்பு. [கொண்ட

1047. தன்பாலே யென்னைக் கரந்தொளிர் மெய்த் தத்து
இன்பமெழப் பொங்கிற் றெனக்கு. [வன்பால்

1048. சிதானந்த மாகச் செழித்த சொரூபத்
ததாநிகழ்த லூற்றதுமெய் யன்பு.

1049. தெளிந்தஞா னனுபவச் சீர்சான்ற சாந்தி
யணைந்ததா வார்ந்ததுமெய் யன்பு.

(வெண்பா)

1050. அருமைசே ரம்மா னெளிமையா லாண்டான்
ஒருமையுணர் வூறிற் றுளத்தே—இருமைசேர்
புத்திக் கலக்கமறப் பொய்ம்மயல்போல்த் தன்மய
பத்தியுற்றேன் றன்சிற் பதத்து. [மெய்ப்

1051. அருட்செம் பொருளென் னகமேதா னாகத்
தெரிச்சொளிரா நின்ற சிவத்தே—மருட்சிசே
ருனகந்தை யற்ற வொளிசேர் சிவானுபவத்
தேனருந்தி யன்புதிளைத் தேன்.

1052. உண்மைப் பெருக்கமா வுள்ளவருட் சோதிபத
வண்மையா லுள்ளம் வளம்படலால்—மண்மயல்
[சேர்
ஆசையாம் பாசமற வாண்டவன்மெய் யன்புக்கோர்
ஆசயமா நின்ற தறிவு

1053. தவமாக் கிளர்சொருப சாந்தியா லன்பே
சிவமாத் தெளிந்து செழித்தேன்—பவமாக்
கலங்கு மயக்கக் கனச்சே ரவிச்சைக்
குலங்கெட் டொழியவருள் கோத்து.

1054. இன்பப் புலமா வியல்சொருபச் செம்பதமெய்
யன்புணர்ச்சி யாப்பொங் கனுபவத்தால்—அன்பே
சிவமெனுமவ் வுண்மை தெளிந்தே யணைந்தேன்
சிவமயமெய் யன்பு சிவத்து.

1055. சித்தம் பரவெளியாச் செய்தசிவச் செம்மலருட்
பத்தியுரு வாகப் பழுத்ததுயிர்—நித்தநித்தம்
சித்தங் கனிந்து சிவானந்தத் தேன்கசியத்
தித்திப்ப தந்தத் திறம்.

1056. ஞானச் சுடரான நம்பனருட் செம்பதமே
வானப் பரசொருப வாழ்வாக—மோனப்
பெருமிதமா முத்தி பிறங்கலா லுற்ற
தொருமைசேர் மெய்யன் புணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

1057. இன்பக் கடலா விதயத் தியல்சொருப
நம்பெனன் னுருயிரா ஞானுது பூதிபெற்றேன்;
பம்புலக மோகப் படிற்றுக் கலக்கமாந்
துன்பமற வூற்றுச் சுரந்தது மெய் யன்புணர்வே.

1058. நம்பலுற்றே னுக்குத்தன் னட்புரிமை நல்கிப்பே
ரின்பவருள் வாழ்வா விதயத் தியல்கின்ருன்;
என்பரமல் லாவல் லிறைவனீ ரெண்ணுகின்றேர்
கன்புணர்வு மேன்மே லகஞ்சுரக் கின்றதே.

1059. நன்னிதியா மோனமெய்ஞ் ஞானவருள் வான
என்னுருவா வுள்ளத் திலகுசாட் சாற்காரம் [வெளி
பின்னமிலா முற்றமுழுப் பேரின்ப வாழ்வாகத்
துன்னியதா லன்பு சொருபமா விஞ்சியதே.

௯0. மெய் யுணர்வு

(குறள்)

1060. குருகடாட் சத்தாற் குலைவுறுமெய்ஞ் ஞானத்
திருவலாற் பேறுதே றேம்.

1061. தொக்கதோ ருண்மை சொருபமே யாவிளங்கிற்
றர்க்கனே போல வகத்து.

1062. பந்தபா சக்கற் பனேயொழியப் பற்றியது
நிந்தைதீ ருண்மை நிலே.

(வெண்பா)

1063. பெயராது சித்தம் பிரான்பதத்தி லூன்றி
யயராத மோன வடைவால்—இயமானன்
றன்சொருப மாகத் தழைத்தவருட் பார்வையால்
நெஞ்சுருவிற் றுண்மை நிலே.

1064. வெளியாக வுள்ளே விளங்குசிவ பாத
வொளியாலே யுண்மை யுணர்ந்தேன்—இளையேன்
ஏதற்குமினிச் சற்று மிரங்கே னிதுயப்
பதிக்கணுற்றேன் சாந்திப் பயன்.

(கொச்சகக் கலிப்பா)

1065. அறிவான வுண்மையே யல்லாது நானவ்
வறிவுக் கயலான வுண்மையொன் றேரேன்
நிறைவான சுத்த நிருவிகற்ப மோன
வறிவே சொரூபமா வார்ந்தொளிர்நோக் காலே.

1066. மசாரதவாழ் வான மயக்கப் பிறவி
அசாரமாத் தோன்று வகத்தில் விளைந்த
விசாரணையால் வேக வியாமோகம் வேறாய்
விசாரதமெய்ந்த ஞான விளக்கமுற் றேனே.

1067. தெழித்தென் னகந்தைச் செருக்கான மோகப்
பிழைப்பைக் கெடுத்துப் பிறங்குசற் போதச்
செழிப்பார் சொரூபத் திருவாழ வளித்தா
னுழைப்பரந் தாம வுணர்வுற்ற வாறே.

1068. வெளியாக வுள்ள விகுந்த சொரூப
வொளியான மோன வுணர்வு படைத்தேன்
களிசே ரகந்தைமனக் கற்பனை ஜால
*வளிசே ருலக மயக்கமற் றேனே.

*வளி – சூறுவளி, சுழல்காற்று

௧௧. மெய்யுணர்தலும் பயனும்

(குறள்)

1069. வண்மைசேர் சுத்தவருள் வாழ்வு மலர்ந்ததுயிர்க்
குண்மை யுணர்ந்தாங் குளத்து.

## 19. இருப்பறிவு

(குறள்)

1070. அருட்பரமா மோன வகத்தில் விளங்கிற
திருப்பறிவா வுள்ள வியல்.

## 20. மோனம்

### க. மோனம்

(குறள்)

1071. மோனம் பொருளாக மூண்டதென் னுள்ளத்து
ஞானகுரு நாத னருள்.

1072. சிறக்கநான் பெற்ற சிவானந்தப் பேற்றின்
பிறக்கமே மோனப் பிறப்பு.

1073. களங்கமனம் பொன்றக் கரைந்தொழியக் கண்ட
துளங்கிளர்மோ னானுபவ வூற்று.

1074. உணர்வொளிசேர் மோனமே யோகமா வுள்ளத்
தணவலுற்றே றான்ற பரம்.

1075. பரத்திற் றிளைத்தமனப் பான்மையா லுண்மைத்
திரத்துவமா மோனமார்ந் தேன்.

1076. சமரசமெய்ஞ் ஞானச் சதிரா விளைந்த
தமுதமோ னானு பவம்.

1077. தெளிந்தமெய்ஞ் ஞானத் திறந்தா விதயத்
தளைந்ததுமோ னானு பவம்.

1078. சொருபமே வாழ்வாச் சுடர்தலான் மோனம்
மருவலுற்ற தென்றன் மனம்.

1079. மோனவுணர் வேசொருப முத்திப் பெரும்பதமா
யானடைய லுற்றே னியல்

1080. சுத்தவருட் பூரணமாச் சொக்கலுற்ற மோனவுணர்
வெய்த்தொழிய வொண்ணு வியல்.

1081. தருமபத மாகத் தலைப்பட்ட துள்ளத்
திரமியமா மோன வியல்.

1082. உபயமனக் கற்பனைதீ ருள்ளுணர்வா மோன
வாயவியல் வாழ்வற் புதம்.

1083. மோனவுணர் வுள்ளத்து மூண்டாங் ககன்றதுமற்
றேனையறி வெல்வா மிகந்து.

1034. மோன வருள்வெளியா முற்றியது சுத்தமெய்ஞ்
ஞானமா முண்மை நலன்.

1055. விண்ணளவ வெங்கும் வியாபகமாத் தூன்றியதென்
னுண்ணிலவு மோன வொளி.

1086. ஒளிவெளியா முள்ளத் தொழிந்ததுநா னென்னுங்
களிவளர்மா மோகக் கருத்து.

1087. சிவத்திலே வாழ்வு திளைத்தலுறு மோனத்
தவத்தியல் சார்ந்த துளத்து.

1088. அயர்ப்பிலா வுண்மை யறிவொளியால் உள்ளத்
தியற்ரபமோ னந்துலங்குற் றேன்.

1089. ஆன்ம சொரூப வறிவொளியாற் கைவல்ய
வானமே *யாய்த்தென் மனம்.

*ஆய்த்து—ஆயிற்று.

1090. தவத்திய லாகத் தழைப்பதென் னுள்ளே
சிவத்துவமா மோனத் தெளிவு.

1091. மோனானு பூதியே முத்திபே ரின்பாமா
யானு தரிக்கலுற் றேன்.

1092. இகப்ப வொறுத்த வியற்சிற் பரமே
உகப்பதென் மோன வுணர்வு.

1093. ஆசையறப் பெற்ற வகத்தே மிகத்துலங்கிற்
றோசையற்ற மோன வுணர்வு.

1094. பரமான மோனப் பதத்திலே நானற்
றுரமாக வூன்றிற் றுணர்வு.

1095. பரமான வுண்மைப் பதத்தின்கட் பற்றிற்
றுரமான மோன வுணர்வு.

1096. குறைதீரக் கூடியது கோட்டமில்சற் போத
நிறைவான மோன நிலை.

1097. காண்டலரு சுத்தவருட் கைவல்யச் சிற்பதத்தே
மாண்டதுவென் பாச மனம்.

1098. அருள்வெளியாப் பொன்ற வகங்கரைந்த மோனப்
பொருள்வளத்தா லுற்றேன் பொலிவு.

1099. சுத்தவருள் வாழ்வாத் துலங்குவதென் னுள்ளத்திற்
புத்தமுத மோனப் புலம்.

1100. உணர்வுத் தெளிவான வுண்மையா வுள்ளத்
தணவியது மோன வரண்.

1101. நோக்கமா மோன நுழைபுலமே சுத்தவரு
ளாக்கமா வுள்ள தகத்து.

1102. திறந்தவெளி யாகச் சிவானுபவ மோனம்
சிறந்ததியல் பாகத் தெளிந்து.

1103. மோன வருள்வெளியா முற்றலால் வாழ்விலெனக்
கினமொன்று மில்லை யினி.

1104. நீடுபரந் தாம நிலையாக வுள்ளத்திற்
கூடியது மோனக் குலா.

1105. கள்ளமனம் மாயமாக் காட்டியது நானெனும்பா
ழுள்ளலற்ற மோன வுணர்வு.

குறிப்பு: — உணர்வு காட்டியது என வியையும்.

1106. விரதமற விஞ்சியது வித்தகமெய்ஞ் ஞான
நிரதிசய மோன நிலை.

(வெண்பா)

1107. மோனமே மிக்கபர முத்தித் தினைப்புறு மெய்த்
தானமா வுள்ளுணர்வு சார்தலால்—ஈனமாம்
பாச வகைந்தைப் பதைப்பற் றருட்பரமே
வாசமாய் வாழும் மனம்.

1108. சிற்பரமாத் துன்று சிவத்தே மனமயக்கக்
கற்பனையாப் பொய்ம்மெய் கழிந்தொழியத்—
[தற்பரமா
வோங்கு சிவாத்துவித வுண்மையா மோனவெளி
வீங்கலுற்ற தெங்கும் விரிந்து.

1109. அருட்பரஞ் சோதிபதத் தல்லா லடியேற்
கிருப்பில்லை யென்றுமெனத் தேர்ந்தேன்—விருப்
யானென தென்னு மிரண்டன் மயக்கந்தீர் [புற்ற
மோனமுற்ற தென்றன் னுயிர்.

1110. தொக்கபுலக் கூட்டமாத் துன்று முலகமயற்
பொக்கமறப் பொங்குசிவ பூரணமாம்—மிக்க
வயிரவொளி போன்றவருள் வாலறிவா யென்னுட்
பயில்சொருப மோனப் பதம்.

1111. சொந்தவூ ரான சொருபவருட் செம்பதத்தே
சிந்தைமுழு முற்றச் சிவமயமாய்—விந்தைசேர்
போத சொரூபசிவ போகமார் சாந்தியாற்
சேர்தலுற்றேன் மோனச் சிறப்பு.

1112. அன்பாலே யென்னையனைந் தாண்டான் சொரூ
ரின்பான மோன வியற்பதயே—துன்பாங் [பப்பே
கலக்கமறக் காணுங் கடுவெளியா வூன்று
நிலைக்களமா முண்மை நிலை.

1113. விவர்த்தமா யாவும் விளங்கலாற் சிந்தை
சுவத்தமா மோனநிலை தோய்ந்தேன்—சிவத்திலே
யன்புமய மாக வளைந்த மனத்தாற்பே
ரின்புருவா யாவு மியைந்து.

1114. விளங்குசிவ ஞான விபூதித் திறத்தால்
உளங்கவல்வெம் பாசவுணர் வோயத்—துளங்கு
மகந்தையற வூன்றும்மோ னனுபவ வாழ்வு
திகழ்ந்ததுதான் தானைத் தெளிந்து.

1115. கதியாகக் கண்டவருட் காச்சியென் னுள்ளப்
பதியா வொளிர்சொரூ பத்தில்—விதிமுறையா
லாற்று நியம மனைத்துமறப் பொங்குமுண்மைத்
தோற்றமா மோனத் தெளிவு.

1116. ஆர்வக் குரோத மகன்றமைந்த சுத்தவருட்
சீர்வளரச் சித்தத்திற் சேர்ந்ததே—ஜீவச்
செயல்சே ரகந்தைச் செருக்கற் றெழுந்த
வியல்பான மோன மினிது.

1117. வெளியே யுருவா விளங்கலா னுள்ளத்
தொளிசேர்ந்த மோனநிலை யுற்றேன்—களிசே
ரகந்தைத் துடிப்பா மலமரலின் றாக
வகந்தெளிந்த சாந்தி யது.

1118. சிந்தையகத் தன்பர் திளைத்தலுறு சுத்தவருள்
விந்தைசேர் மோன விழுப்பதமென்—புந்தியுள்ளே
கூடிற்றங் கங்குளிரக் கூடி நிரந்தரமா
நீடிற்றெங் கெங்கு நிறைந்து.

1119. மலையிலக்க மானபெரு மாட்சிசே ருண்மை
நிலையிலக்க மாகவொளிர் நெஞ்சில்—கலையிலக்கித்
தேர்ந்தறிந்து கொள்ளச் சிறிதுமற்ற மோனநிறை
வார்ந்தமைந்த தென்ற னறிவு.

1120. ஏனையொளி யெல்லா மிருளா வொழியவொரு
மோனவொளி வீசி முடுகலால்—ஊன
மனைக்கற் பனுஜாலம் மாயமா மங்க
ளனக்கற் புதமா மியல்.

குறிப்பு :—மோனவொளி - சுத்தாத்துவித சொரூப சைதன்யம். ஏனையொளி - அதனிற் பிற வான ஒளிகள் [அந்தக்கரண சதுஷ்டயம், ஞானேந்திரிய பஞ்சகம் சோமசூரியாக் கினித்திரயம்]; எனக்கு இயல் அற்புத மாம் - என் (பரமார்த்த வுண்மையான கேவலத்) தன்மை அற்புதமாக விளங்கிற்று

1121. உள்ளத் துணர்வா வொளிர்சொரூப சாந்தவருள்
வெள்ளக் கடல்வடிவா(ம்) மெய்ப்பதத்தை—உள்
[ளுணர்வாற்
சேர்ந்த விருத்தி சிவோகமோ ஞனுபவஞ்
சேர்ந்ததுமெய் யன்பு திளைத்து.

1122. அஞ்ஞான மானகா ராவரண விட்சேப
விஞ்ஞான மெல்லாம் விழுங்கிற்று—மெய்ஞ்ஞான
வானை வென்றன் மனத்தே யொளிர்சொரூப
மோனனு பூதிப் பதம்.

1123. சிவத்திலே யூறித் தெளிந்த மனத்தா
லுவத்தலுற்ற மோன வுணர்வே—அவத்தை
யனைத்திலுமொன் றாக வவிர்சொரூப மாண்டாந்
தனித்தலுற்ற தெங்குந் தழைத்து.

1124. *அற்பரிச யோக விறிவுருவா முண்மையகந்
தப்பலரி தாகத் தலைப்படலால்—தற்பரமா
மோனமே யுள்ள முழுமுதலாஞ் செம்பொருளென்
றூனமற வோர்ந்தே னுளத்து.

* அற்பரிசயோகம் - அஸ்பரிச யோகம்.

(கொச்சகக் கலிப்பா)

1125. தற்போத மோகஞ் சதாழியத் தங்குசிவ
சற்போத மாட்சி தலைப்பட் டொளிர்தலை
கற்பான வேதக் கலைஞானந் தட்டழிய
நிற்பான மோனமே ஞேயமா வென்றதே.

1126. ஒன்ற வுணர்வை யொடுக்கி யிதயத்தில்
வென்று மயக்க விகற்பமறத் தான்றானத்
துன்றுசற் போத சொரூபானு பூதியால்
மன்ற விளங்கியது மௌனத்தி னுண்மையே.

1127. அறிந்த வெனக்கவ் வருட்பரத்தி னின்று
பிறந்தொழியப் போகாப் பிணைப்பா மொருசீர்
சிறந்த வியல்காண் சிவாத்துவித மோனம்
மறந்திடலே யன்றி நினைந்திடலு மின்றே.

1128. நானேகண் ணாக நடந்தலால் அக்கண்ணுக்
காணாப் புலனா வறிவிற் றுலங்குவதந்
நானே யெனிலெனங்கு நாட்டம் பிதிர்தலெங்ஙன்
மோனானு பூதியா முற்றியதென் னுள்ளுணர்வே.

1129. சலிக்க வொண்ணாத சதாசிவ வுண்மை
ஒலிக்க வொண்ணாத வொலிப்பர மோனம்
பலிக்க வகத்திற் பராற்பர வாழ்வா
நிலைக்கள மானமெய்ஞ் ஞேயமொன் றிற்றே.

1130. தன்னள வில்லாத் தலைமைசேர் தற்பரத்தை
என்னறி வால்யா னிரண்டுபடக் காணமுயன்
றுன்னியந்தோற் றாணவஞ்சே ராபாச முப்பிடியிற்
பின்னியுழன் றேன்சொருபப் பெட்பறிந்தேன்
[மோனத்தே.

1131. ஈனவகங் கார வெழிச்சியறப் பொங்குசிவ
ஞானவருள் வாழ்வியல்பா நண்ணலா லின்பமுற,
ஞானவரம் பாவகத்து நண்ணும் பரமசுப
மோனவுணர் வேசொருப முத்தியா மூண்டதே.

குறிப்பு:—இன்பமுற நண்ணலால் என வியையும்.

1132. வேதவே தாந்த விளக்கமாங் கைவல்ய
மோதவுணர் வானமோ னானுபவம் பொங்கியது,
பேதவழக் கெல்லாம் பிழைபட் டொழியவருட்
போத வொழுக்கம் புணர்தலாற் புந்தியிலே.

1133. கண்மயல்சேர் விண்மைபோற் கற்பனையாந் தோற்
[றமற்ற
வுண்மைசேர் வாழ்வா வுளத்தா டொளிர்வது
திண்மைசேர் சுத்த சிவக்கே வலமுத்தி [மெய்த்
நுண்மையிலு நுண்மையது நுட்பவொட்ப
[மோனமே.

1134. நெஞ்சி லருள்வெளியா நீடுசுப மோனமே
விஞ்சைசே ருண்மை விலாசமா முத்தியாச்
செஞ்சவே யாரத் தினைக்கலுற் றேனுக்குப்
பஞ்சமென்று மில்லை பகவனருட் பூரணத்தே.

1135. எனக்கென் னினுந்தா னினிய சிவத்தை
நினைக்க நினைக்க நினைப்பற் றொழிந்தேன்;
முனைக்குமகப் பாழை முருக்கி யெழுந்த
துனைற்கரிய மோன வுணர்வொளியா மெய்யே.

1136. அனைத்துக்குந் தானேயோ ராதார மாகத்
தனித்தொளிர்விஞ் ஞானமே தற்பரமா முண்மை
எனத்தெரிந்த வாற்று விதயத்தே யூன
முனைப்பற் றொளிர்சொருப மோனமுற் றேனே.

1137. கற்பதற்கு யாதோர் கலையுமற்ற சுத்தவருட்
சிற்பதத்தே ஜீவிபோ தச்சேட்டை தீர்ந்தொழியத்
தற்பரமோ னனுபவஞ் சார்தலுற்றேன் மோக
[மனக்
கற்பனையின் மூழ்கிக் கலங்கலுற்ற நாயேனே.

குறிப்பு:—மத்தமனக் - என்றும் பாடம்.

1138. மயங்கலுற்று மெய்போல மாயா விலாசத்
துயங்கலுற்ற வூனப்பா மூத்தையுணர் வைச்செற்
றியம்பவோ வெண்ணவோ யாதுமற்ற மோன
நயங்கிளர்மெய்ஞ் ஞானவொளி நண்ணலுற்ற
[துள்ளே.

குறிப்பு:—செற்று நண்ணியது என வியையும்.

1139. சித்தங் கலந்த சிவத்திற் சிவோகமாச்
செத்தங் கொழிந்த செருக்காற் சிறுதுயோ
ரெத்தனமின் றுண வியற்பரமோ னனுபவப்
புத்த முத வாழ்விதயம் பொங்கிப் பொலிந்ததே.

1140. மாறுபி மான மயக்கவகப் பேய்கரக்க
யானுக வுள்ள வியற்பரநோக் கந்துலங்கு
மோனனு பூதியே முத்திப்பே ரின்பவருள்
வானகை முற்ற வனைந்து வளாவியதே.

1141. சிற்பரமெய்த் தன்மை செழித்தலா லுள்ளத்திர்
கற்பனையா மாயக் கலக்கமறக் கைவல்யத்
தற்பரமோ னனுபவந் தங்கியது, சுத்தசிவப்
பொற்பதவாழ் வாகவகம் பொங்கிப்பூ ரிக்கவே.

1142. கிஞ்சிலறி வான கிலேச வகந்தைசேர்
வஞ்ச மனக்கலக்கம் மாயமாத் தான்கரக்க
நெஞ்சி லொளிர்வுறுமெய்ஞ் ஞேய சொரூபத்தில்
விஞ்ஞைசேர் மோன விழுப்பதஞ்சார் வுற்றதே.

1143. உள்ளங் கலந்துவிளங் குண்மையாற் பேரின்ப
வெள்ளமா மேன்மேல் விளைந்ததுமோ னனுபவம்.
கள்ளங் கரவு கலந்துமனக் கற்பனையைத்
தள்ளிப் பரமோப சாந்த சிவோகமென்றே.

1144. நேரக் கடவமெய்த் தேர்ச்சியா நானுரென்
றோரலுற்றே னுள்ளுணர்வூ டொட்பநுட்பச் சிற்பரமா
ஆரத் தெளிந்தமோ னனுபவ வாயிலாற்
சேரலுற்றேன் முற்றத் திருத்திசேர் நல்விடையே.

1145. எஞ்ஞான பேதமுந்தா மஞ்ஞான மாகத்திர்
சுஞ்ஞான மான சொரூபவுண்மை தேற்றலான்
மெய்ஞ்ஞான மோன விபூதிசேர் மாட்சியெனக்
கிஞ்ஞால மீதி வியல்பா வடைந்ததே.

குறிப்பு:—ஞானமாந் தானேமெய் நானுவா ஞான
மஞ்ஞானமாம் (உள்ளது நாற்பது).

1146. கற்பனைதீ ருண்மைக் கடவுளாந் தூன்றுசிவச்
சிற்பரமே யாகச் செழித்தலன்றி மற்றதனுக்
கற்பழும்வே ரற்றசுத் தாத்துவிதச் சீர்மைசேர்
தற்பரமோ னனுபவச் சால்பகத்திற் சார்ந்ததே.

1147. காலதே சக்கற் பனைகழலத் தானெனக்குட்
சாலவிளங் குற்ற சதாசிவத்தில் யானெனும்பொய்ம்
மாலறிவு மங்க மனோதீத மானவருள்
வாலறிவா மோனம் மலர்ந்ததுவா னாகவே.

1148. ஆதியந்த மற்ற வருட்சிற் பரசிவமே
சூதிலாத் தன்மெய்த் துரிய சொரூபமாய்
பூதிசேர் மோனானு பூதி புணர்தலால்
வாய்திறந்து பேச வழக்கங்கொ ளன்றில்லையே.

குறிப்பு:—மோனந் தனைவிளைத் தாவினி யாது
மொழிகுவதே. (தாயுமானவர்—பாயப்
புலி 14).

1149. விருத்தமா யோக விகற்பமற வுள்ளத்
தொருத்தரைத் தன்னை யுணர்ந்துகொண்டே னாக்குப்
பரத்திலே சித்தம் பழுத்தலால் உண்மைத்
திருத்திசேர் மோனந் திளைத்தனூற் றேனே.

1150. பந்தமற்ற வுண்மைப் பரவுணர்வே மோனமெனச்
சொந்த சொரூப சுவானுபவத் தாலறிந்தேன்;
சிந்தனைக்கெட் டாதசிவச் சிற்பரவாழ் வாகவெனக்
கந்தமில்பே ரின்ப மனைந்ததம் மோனத்தே.

1151. உள்ளமா வுள்ளத் தொளிர்சொருப வுண்மையிற்
கள்ளமோர் காணுங் கலந்திடா மாட்சியாற் [பொய்க்
பிள்ளலரு சுத்தப் பிரம்மப் பரமசிவத்
தெள்ளமுத மோனந் தெளிந்ததென் னுள்ளமே.

1152. அன்னியமொன் றற்ற வருட்சிற் பரவெளியே
என்னுண்மை யாக வியல்சொருபக் காட்சியால்
வன்னவியல் வாழ்வா மடுத்தமோ னனுபவப்
பின்னமற்ற முற்றமுழுப் பேரின்பம் பெற்றிடுத்தே.

1153. அங்கமக மாக வமுங்கியகா ராணவப்பேய்
பங்கமுற வென்னுட் பரதெய்வ மாகவொளிர்
துங்கவருட் பார சொரூபானு பூதியாப்
பொங்கியகை வல்யப் பொலிவிலுற்றேன மோனமே.

1154. ஊனக் கலக்கமற வுள்ளத் தொளிர்சொருப
மோனத்தே முற்ற முழுப்பரவாழ் வோர்ந்துகொண்
ஏனைப் பதங்க ளெலாமவ் வியற்பரத்திற் [டேன்;
போனதுசற் றுந்தம் புலங்கா ணெனுமிலே.

1155. அறிவாக வுள்ளத் தவிர்சொருப வுண்மை
நிறைவான மோன நிலையே யலாமற்
பிறவாங் கதிகளைநான் பேணேன்; விகற்ப
வறிவான மோக மகன்றொழிந் தேனே.

1156. கரவற்ற சுத்தவருட் கைவல்ய வுண்மைப்
பரவெளியே யுள்ளமாப் பற்றலுற்ற வாற்றாற்
றெரிதலுற்ற வெல்லாந் தெரிவளவா மோனப்
பரவுணர்வு பற்றியது பாசமனங் கெட்டே.

1157. நீக்கமற்ற வுண்மை நிறைவா வொளிர்சொருப
நோக்கமெனக் காக்குமாத் தேக்கலா லுள்ளத்து
மீக்கிளர்வுற் றோங்கியது வேகமறப் பொங்குசுப
மோக்கவியல் வாழ்வான மோனானு பூதியே.

1158. சுத்தவெளி யாகத் துலங்குசொரு பானுபவப்
புத்தமுத மோனம் பொருந்தலா லுள்ளத்திற்
பொய்த்தொழிய மோகப் புலவேட்கை பொல்லாத
மத்தவகங் காரமன மாயமுமாய் வுற்றதே.

1159. அற்பசொற்ப மல்லா வகண்ட சிவானுபவத்
துப்புரவா மோனந் துலங்கலுற்ற துள்ளுணர்வு,
கற்பனைசேர் மாயக் கருத்தற் றொழிதலாற்
செப்பமா வுள்ளவியற் சிற்பரமெய்த் தன்மையிலே.

1160. களிசே ரகப்பேய்க் கலக்கந்தீர் சுத்த
வெளியே சொரூபமா மேவுசுப மோனத்
தெளிவே பரமசிவச் செம்பதமா வுற்றேன்;
இளிசேர் பசுபாச வேசறவில் லேனே.

### ௨. மோனமளித்தான்

(வெண்பா)

1161. உய்விப் பதற்கென் றுருக்கொண் டெனக்காக
மெய்விப் பிரனு வெளிவந்து—தெய்வப்
பரமோப சாந்தப் பதமான வுண்மைத்
திரமோன மீந்தான் சிவன்.

1162. எமநியமங் கல்லேற் கிறைரமணன் சேர்த்தா
ணமுதவொளி யாக வகத்தே—ரமண
சொரூபஞா னானுபவ சுத்தவருட் பத்தித்
துரியமா மோனச் சுடர்.

### ௩. மோனானுபவங் கூறல்

(குறள்)

1163. சிவக்கே வலமாத் திகழ்சொரூப மோனத்
துவக்கலுற்ற தென்ற னுணர்வு.

1164. மோனவுணர் வேசொருப முத்திப் பெரும்பயனு
நானடைந்தே னுண்மை நலன்.

1165. முற்றமுழு வாழ்வா முகக்கவுறு மோனவியற்
பெற்றியன்றிப் பேறுகா ணேன்.

1166. தாழ்வறுமோ னானுபவஞ் சார்ந்த நிதயத்தில்
வாழ்வுசிவ மாக மலர்ந்து.

(வெண்பா)

1167. அறிவாக வாண்ட வருட்பிரான் மோனக்
குறியேயென் காட்சிக் குலாவாய்ப்—பிறிதொன்றன்
பேதமற வெல்லாம் பிரம்ம சொரூபமாம்
போதவொளி யாரும் புலத்து.

1168. வாழ்வுக் கொளியா வளர்சொருபப் பார்வையாற்
பாழ்கெட் டருட்சிற் பரவெளியாய்—மாழ்குற்ற
சிந்தைக் கலக்கமறச் சிற்பரமோ னானுபவச்
சந்தவியல் சார்ந்த தகத்து.

1169. உள்ளத்தி லூற்றசிவ யோகமாம் போகவருள்
வெள்ளத் தாறத்திளைத்து வேட்கையறத்—தெள்ளத்
தெளிந்தவுணர் வாலே சிவோகமா(ம்) மோனம்
அளைந்ததியல் பாக வகத்து.

1170. உள்ளதே வாழ்வா வுணர்ந்தமைந்தோ ருள்ளத்தே
தெள்ளிதாத் துன்றுபா தேவதைதன்—வெள்ளவொளி
தானான நன்மயமாத் தாக்கிற்றென் னுள்ளத்தும்
மோனானு பூதியா மூண்டு.

1171. உண்மையுணர்ந் தேனுக் கொளிர்பரவாழ் வாகவருள்
வண்மைசே ரின்பம் வளைக்கவே—திண்மைசேர்
கேவலசுத் தாத்துவிதக் கேழ்கிளர்மோ னானுபவச்
சீர்வளரப் பெற்றேன் செழித்து.

1172. ஆனந்த மோன வருள்வல்லி மெல்லியலோ
டூனந் தவிர்மெய் யுறவாகி—ஈனந்
தருபுன் மயக்கச் சதிகாரச் சிந்தை
யொருவந்த மற்றொழிந் தேன்.

1173. எல்லாமா நின்றே யெதார்த்தந்திற் றானொன்று
மல்லாமெய் யுள்ளத் தவிர்தலால்—கல்லா
மனக்கலக்க மற்ற மவுன சமாதி
எனக்கியல்பா வுற்ற தினிது.

## ௨. மோனத்தால் அற்றவை

(குறள்)

1174. மோனவருட் கல்வி முகத்தலா லுள்ளத்திற்
போனதுபொய்ம் மோகப் புடி.

குறிப்பு:—மோகப்புடி – (புடிமோகம் என்பது முன் பின்னாகத் தொக்கது) திரிபுடி பேதக் கற்பனை யறிவான மயக்கம்.

1175. இயல்பான மோன விதய வொளியாற்
செயல்போ யகன்றேன் செருக்கு.

(வெண்பா)

1176. வெளியே சொருபமா மேவப் படைத்த
வொளிசே ருணர்வென் னுளத்தே—தெளிவான
மோனு பூதியா முற்றலா லற்றதுபொய்ம்
மாணுபி மான மயக்கு.

1177. வெளியா வெனக்குள் விளைந்த வருட்பே
ரொளியான மோன வுணர்வே—களியா
லுழன்ற வகப்பே யுணர்வான மோகங்
கழன்றொழியக் கண்டது காண்.

1178. முனைப்பற் றொளிர்சொருப மோனத்தால் வேற்று
நினைப்புமறப் பற்றதென் னெஞ்சில்—தனிப்புற்
றசங்கமா வுள்ள வருள்வெளியா மாங்கு
மசங்குமன மாய மிலை.

1179. மோன வுணர்வே முதன்மைசே ருண்மையுணர்
வானவனு பூதி யடைவாலே—ஊனமா
முப்படிக்கோட் டாலை முழுதுமகப் பேய்க்கூத்தா
ஒப்பியதென் னுள்ளத் துணர்வு.

## இ. மோனத்தால் அடைந்தவை

(குறள்)

1180. நிலையிலே யென்னை நிறுத்தினன் மோனக்
கலையிலே கண்டேன் கதி.

1181. பிரிதலரு சுத்தவருட் பெட்பா லகத்து
மருவியது மோனவியல் வாழ்வு.

1182. எம்பிரான் மோன வியல்பற்ற லாவிதயத்
தம்பரமா வான்ற தறிவு.

1183. சிறக்கவிளங் குற்றேன் சிவானுபவ மோனட்
உறைக்கலுற்ற வாற்று ளுளத்து.

(வெண்பா)

1184. மோனமெனக் குட்பரமா மூண்டதால் யானெனுமவ்
ஊனமனப் பான்மை யொழிந்ததே—ஈன
விளிவரல்சேர் சிந்தை யிகப்பப் பரவாழ்
வொளிமருவப் பெற்ற துளத்து.

1185. முனைப்பற் றுளிர்சொருப மோனத்தா லூன
நினைப்பற் றொழிந்ததென் னெஞ்சில்—எனைப்பற்றி
நின்றமயற் பாச நிலைகுலையச் சிற்பரமா
மன்றமனத் துற்றதியல் வாழ்வு.

1186. எண்ண மறக்கெட் டிதயத் தொளிர்சொருப
வண்ணமா மோனம் வளர்தலால்—உண்ண
லுடுத்த லுறங்க லுவையே சுகமா
மடுத்தலுற் றுற் போன்றதென் வாழ்வு.

## ௬. மோனமும் பயனும்

(குறள்

1187. செருப்பட்ட பேயுளச் சிந்தையறச் சாடிற்
றெருப்பட்ட மோன வுணர்வு.

(வெண்பா)

1188. மோனத் தெளிவின்கண் மோகமனச் சேட்டையற
யானற் றொழிந்த விதயத்தில்— ஏனைப்
பதங்க ளனைத்துமனே பாவனையே யாகப்
பதுங்கவிளங் கிற்றுப் பரம்.

1189. மோனப் பதமே முழுமுதற்பே ரின்பவருள்
வானப் பதமா வளர்தலால்—ஏனைப்
பதமனைத்து மந்தப் பரவையிற்பல் வேறு
நதியனைத்துன் றுற்றன தாம்.

## 21. பரவெளி

(குறள்)

1190. அரியபரஞ் சோதி யகங்கிளர்ந்த வாற்றல்
விரியவிளங் கிற்று *வெளி.

*வெளி - சொருபத் துரியவெளி.

1191. ஆண்டவனுற் கண்ட வருட்பரவ டியாதுமென்றால்
வேண்டலற்ற சுத்த வெளி.

1192. இகப்பரிய வுண்மையா வேய்ந்த தகத்தே
மிகப்பரந்த சுத்த வெளி.

1193. ஊறு படாதபர வுண்மையொளி யாவகத்தில்
விறியது சுத்த வெளி.

1194. மித்தையற மாற்றி விளங்குவதென் னுள்ளத்து
வித்தைசே ருண்மை வெளி.

1195. முற்றமுழுச் செம்பொருளா மூண்டதென் [னுள்ளத்து
வெற்றறிவா வோங்கு வெளி.

1196. தொண்டனே னுள்ளத்துத் துப்பறிவாத் தப்பறவே
விண்டதுபே ரின்ப வெளி.

1197. தெளிந்த சிவானுபவஞ் சேர வெனக்குள்
விளைந்ததுபே ரின்ப வெளி.

1198. சஞ்சலமற் றோங்குமுப சாந்தியா வுள்ளத்தில்
விஞ்சலுற்ற தின்ப வெளி.

1199. பிழைதீர் சொரூபப் பிரான்விழியிற் கண்டேன்
விழைதகுபே ரின்ப வெளி.

குறிப்பு :— பிழைதீர் - இயல்பாகவே பாசங்களின் நீங்கிய, சகல மலங்களினின்றுந் தணந்த.

1200. வானமே யுண்மை வடிவா மலர்ந்தொளிர்கின்
றேனறிவில் வேறொன் றிலே.

1201. யானே யுளப்படமற் றெல்லா மும் மன்றவருள்
வானே யலாதில்லை மற்று.

1202. வெளியா வகத்தில் விளங்குவது போனத்
தெளிவான சுத்த சிவம்.

1203. காணக் கிடைத்தவருட் கைவல்ய மோனவெளி
மாணச் சிறந்தொளிர்மெய் வைப்பு.

1204. மோனங் கலத்தலான் முத்திப்பே ரின்பவருள்
வானங் கலந்ததென் மாட்டு.

1205. தெரிவளவா வுள்ளத்திற் சேர்தலுற்ற சுத்தப்
பரவெளியே முத்திப் பதம்.

1206. நிரந்தரமாக் கண்டு நிலைத்தேன் அகத்திற்
பரந்தவெளி யான பரத்து.

1207. இங்கென்னு முண்மை யிடங்கண்டு கொண்டேனுக்
கெங்கெங்கு மோரிங்கே யாம்.

குறிப்பு :— அருட்சிற் பரவெளியான அறிவொளி
யுள்ளமே இங்கென்னுஞ் சொல்லாற்
குறிப்பிடப் பெற்றது.

1208. மோனப் பரவெளியே முத்தி சொருபமா
ஊனமறப் பொங்கிற் றுணர்வு.

1209. வெளியே யுருவா வெளியிலே வாழு
மொளிசார்ந்து நின்ற துயிர்.

1210. ஆனந்த மோன வருட்சிற் பரவெளியா
லூனந் தவிர்ந்த துயிர்க்

1211. அளக்க வொணுத வருள்வெளியா வென்னை
வளைக்கலுற்ற தோர்தன் மயம்.

1212. சூனியங்கட் கெல்லாமோர் சூனியமா மோனவருள்
வானியங்க லுற்றேன் மனத்து.

1213. அயலற்ற சுத்த வருள்வெளியா வுள்ளத்
தியல்விளங்க லுற்ற தினிது.

1214. கண்ணு மெனக்கயலாக் காணப் புலமில்லேன்
விண்ணு விளங்கலுற் றேன்

1215. திட்பநுட்ப வொட்பந் தெரிந்தே னுருவுபர
விட்புலமா விஞ்சலுற் றேன்.

1216. பரவெளியைப் பற்றிப் பதற்றமறு மோன
வுரவொளிவாழ் வுற்ற துளத்து.

1217. வெளியேவாழ் வாக விளங்கலாற் கெட்ட
திளிசேர்வெம் பாச வியல்.

1218. ஆனந்த மோன வருட்சிற் பரவெளியா
லூனந் தவிர்ந்த துணர்வு.

1219. அருள்வெளியா வாழ்கின்றேன் ஆண்டவன்சீ பாதப்
பொருள்வளஞ்சேர் போகம் புசித்து.

(வெண்பா)

1220. அறிவாக வாண்டா னடிகளே யாவிக்
குறவாகத் தேர்ந்த வுணர்வால்—சிறவா
மயக்கமே யாக மரணபய பேர
வியற்பரவாழ் வெய்தினேன் யான்.

1221. செருக்குமகங் காரச் சிறைவிடுவித் தாண்டான்
ஒருக்கமுறு மோன வுணர்வால்;—வெருக்கொளமற்
றென்றுமின் றுக வுளஞ்சிற் பரவெளியாத்
துன்றியது மெய்த்தத் துவம்.

1222. ஒளியா லுலகைக் கவர்ந்தபர மோனத்
தெளிவான சுத்த சிவத்தில் இளிவரல்சேர்
ஊனகந்தை யான வுடற்பற் றொழிந்துபர
வானகந்தா னுமென் மனம்.

1223. பாத வொளியாலே பாசவிருள் கெட்டொழியப்
பாத சொரூபவருட் பார்வையுற்றேன்—பாதம்
ஒளியா லகிலமுந்தன் னுட்கரந்து சுத்த
வெளியாக மிஞ்சிற் றுரு.

1224. தத்துவந்தா ஞன சதாசிவமா மோனவருட்
சித்துவமே கண்ணுத் திகழ்தலால்—வித்தகமெய்த்
தானேதான் மிக்கபர தத்துவமாத் தான்விளங்க
வானே நா ஞனேன் மலர்ந்து.

(கொச்சகக் கலிப்பா)

1225. உள்ளலொன்று மில்லையெனக் குள்ளும்வினைமுதலாத்
துள்ளி யெழுந்த துடிப்பா மகந்தையே
கள்ளமனக் கற்பனையாக் கண்டுகொண்ட தாலகத்
வெள்ளவருள் வாழ்வா விளங்கு வெளியிலே. [தில்

1226. துன்று மகந்தைமனச் சூதான கற்பனைமற்
றென்றென்று மின்று விளங்கிற் றிதயவெளி
என்றென்று முள்ள வியற்சிற் பரசொருப
நன்றென்ற லுற்றமெய்ஞ் ஞானனு பூதியிலே.

1227. பற்றப் படாதவருட் பார்வையா வென்னகத்திற்
பற்றிப் படர்ந்த பரந்தாமச் சேமவொளி
முற்றக் கனவாச்சூழ் முப்புடியின் மோகவிருள்
சற்று மறக்கடிந்து சாந்தமாத் தங்கியதே.

1228. ஒன்முன வுண்மை யுணர்வால் விளங்கியது
பொன்றாத சுத்தவருட் போத சொரூபவெளி;
இன்முகத் தன்னிடத்தில் யாதொன்றுந் தன்னையன்றி
நன்முன கேவலமெய்ந் நாட்டமகம் பற்றியதே.

1229. மருள்வளர் ஜீவ மனக்கற் பனையா
விருள்வளர் பேத வுலக வியற்கை
அருள்வெளி யான வகத்திற் கரக்கப்
பரவொளி வெள்ளம் படர்ந்ததென் பாலே.

1230. கண்ணுக வுள்ளவருட் காட்சியைநா ஞரெனவென்
னுண்ணுடை லூற்றே னொளிவெளியாக் கண்டு
[கொண்டேன்
பெண்ணு ணவிமுதலாம் பேதமனக் கற்பனையங்
கண்ணு வதீத வஜாதக்கை வல்லியமே.

குறிப்பு :— அருட்காட்சியை ஒளிவெளியாக் கண்டு கொண்டேன் எனவியையும்.

1231. சுத்தப் பரசிவமாத் துன்று சொரூபவருள்
வித்தைத் தெளிவால் வியாமோகப் பாழ்கடந்தேன்;
அத்தமியா மோன வருள்வெளியே யென்னுருவாப்
புத்தமுத வாழ்வு புணர்ந்ததுபுத் திப்புலத்தே.

1232. அன்றியொன் றில்லா வருட்சிற் பரவெளியே
என்றனியல் பாவிநயத் தென்று மொளிரு முண்மை;
துன்றவொன் றில்லை; துறக்கவுமற் றென்றுமில்லை;
மன்றவங் குள்ளதுதன் மாத்திரமாந் தற்பரமே.

1233. வஞ்ச மயக்க மனக்கற் பனுபேதந்
துஞ்ச வெனக்குட் சுடர்சொருபச் செம்மலருள்
விஞ்சை யொளியின் வியாபகத்தாற் போர்க்கப்பெற்
றெஞ்சலின்று வேய்ந்த தெலாமோர் சிவமயமே.

1234. அன்றியொன் றில்லா வருட்சிற் பரசொருபம்
மன்றவென் னுள்ளம் மலர்தலால், யாவுமொப்ப
நன்றுநன் றென்ன நலங்கிளர்ஞா னுனுபவ
வென்றிசேர் மோன வெளியொளிசூழ் வுற்றதே.

1235. இதயமா வுள்ள விறைவ னியற்செம்
பதவொளி யெங்கும் பரத்தலாற் பற்பல்
விதவித மான விசித்திர பேத
கதிகள்புற் கென்னக் கழிந்தன தாமே.

1236. அடர்த்தென்னை யாண்டா னருளா லகத்திற்
றடத்தமா வுள்ளவியற் றன்மை துலங்க
மடுத்த சொரூபம் மனோதீத வுண்மை
படத்திரைபோ லார்ந்தவருட் பார வெளியே.

1237. செல்ல வொண்ணுதசிவச் செல்கதியென் சொச்
தொல்லியலே யாகத் துரீயந் துலங்கலாற் [சொருபத்
புல்லியபொய்ச் சீவப் புழுக்கமறப் பொங்கியது
நல்ல சிவத்துவமெய்ஞ் ஞான வெளிப்பரமே.

குறிப்பு :—செல்ல... கதி - சென்றடைய வொண்ணு
ததும் ஆனல் அவசியம் சென்றடைய
வெண்டியதுமான சிவகதி; புல்லிய... ...
புழுக்கம் - அற்ப ஜீவனுக நான் என்னை
அலமரலுற்ற அபத்தமான அகந்தை
மனக் கற்பனு ஜீவபோதக் கலக்கப்
புழுக்கம்.

1238. பேத வகப்பேய் பிரிந்தொழிய வுள்ளத்திற்
போத சொருபம் புரிந்தலுற்ற மெய்யுணர்வால்
மோத வியல்பாக மூண்டெழுந்த முத்தியுரு
மேதகவு சான்ற விசுத்தப் பரவெளியே.

1239. நீக்கமற்ற வுண்மையா நீடு சொருபமெனக்
காக்கமா வுற்றஞா ஞனுபவத் திட்பத்தாற்
போக்கும் வரவும் புணர்வுமற்ற சுத்தவெளி
தாக்கியது தற்பரமாந் தானு வெனைக்கரந்தே.

1240. இற்றெனவோர் சற்று மிசைக்கவொணுப் பெற்றிசேர்
முற்றமுழுத் தன்மை முகத்தலா லுள்ளத்திற்
கற்றறிய யாதுங் கடவதின் றுகவெனக்
குற்றவனு பூதி யுதார வொளிவெளியே.

1241. உன்மாத மானபா ழூத்தையகப் பேய்கரக்கப்
பெம்மா னருளிற் பிறங்கியதோர் சுத்தசிவச்
செம்மாண் பதவெளியிற் செம்மாக்க லுற்றேனுக்
கெம்மா நிலத்திலும்பே ரின்பமெழப் பொங்குமே.

1242. ஞானங் கிளர்தருமெய்ந் நம்பனையே நம்பினேற்
கூனந் தவிர்சொருப வுண்மையாப் பொங்கியது
நானென்ற மோக நவைகெட் டொழியவிளங்
கானந்த மோன வருட்சி பரவெளியே.

1243. ஈனக் கலக்கமா வேய்ந்தமனக் கற்பனைதீர்
மோனத் தவவுணர்வா லூண்ட பிரானருளில்
யானற் றொழிந்தேற் கியற்சிற் பரசொருப
வானப் பரப்பா மலர்ந்ததென் னுள்ளமே.

1244. தான்றானா வெங்குந் தழைத்த சொரூபவருள்
சான்றாக வென்னைத் தடுத்தாண்டு தன்னடிக்கீ
ழூன்றநின் றானோ டொருப்பட்ட மெய்யுணர்வால்
ஆன்ற வருள்வெளியே யாயிற்றென் னுண்மையே.

1245. முங்கிமுங்கி யாழ்ந்தொழிந்த மோகக் கடலினின்
றங்கரை லென்னை யருட்பதஞ்சேர்த் தாண்டவனாற்
பங்கமில்சற் போதப் பரமோப சாந்தவியற்
றுங்க வெளியே சொரூபமாக் கண்டேனே.

1246. மோன வுணர்வொளிசேர் முத்தப்பன் சிற்பதத்தில்
யானெனதற் றுள்ள வியல்கண்டு கொண்டதால்,
ஊனமொன் றில்லா வுறுதிசேர் சுத்தவருள்
வானமே யென்னுண்மை வாழ்வா மடுத்ததே.

1247. இன்பதுன்ப மற்ற வியற்சிற் பரசொருப
நம்பனையே முற்றமுற்ற நம்பலுற்ற வுள்ளுணர்வால்
அன்புசிவ மாக வகங்கிளரப் பொங்குறுபே
ரின்பவெளி கண்டே னெனதுவடி வாகவே.

1248. அடியேனை யாண்ட வருட்சிற் பரன்சே
வடிநான் முடிமே லணிந்தாங் ககந்தைத்
தடையான பாசமறத் தற்பரமாக் கூடிற்
றுடையான் சொரூப வொளிவெளியென் னுள்ளே.

1249. நிலையிலே யென்னை நிறுவினான் மோனக்
கலையிலே சுத்தவருட் கைவல்யங் கண்டாங்
குலைவிலா வுண்மை யொளிவெளியா வுற்றேன்
வலையான பாச மயக்கமனங் கெட்டே.

1250. நள்ளிதயத் தூடுமெய்ஞ் ஞானக் கதிர்பரப்பிக்
கள்ளவகப் பாழ்கரக்கக் கண்டபரஞ் சோதிபதத்
தெள்ளமுத மான சிவானுபவந் தேக்கலுற்ற
வுள்ளுணர்வா லுள்ள மொளிவெளியாப் பொங்கியதே.

1251. ஆனபரஞ் சோதி யடிகளருட் கண்ணோக்கால்
யானெனது மங்க வியற்சிற் பரசொருப
மோன முற்ற வாழ்வெனக்கு முத்திப் பெருக்கமா
வூனமற்ற வுண்மை யொளிவெளியாப் பொங்கியதே.

குறிப்பு :—பெருக்கமா-பெருக்கமாகும்படி; உண்மை பொங்கியது எனக்கூட்டுக.

1252. வித்தகன்கண் ணோக்கமென்மேல் வீசியாங் [காணவங்கெட்
டத்தனுக்கே முற்றதா னற்றெருழிவால் ஆன்றசிவ
முத்தியுரு வாக முகந்துலங்கத் துன்றியது
சுத்தத் துரீய சொரூபப் பரவெளியே.

1253. உள்ளுவ தெல்லாமே யுள்ளுமனக் கற்பனையென்
றுள்ள வொழிந்தே னுளத்திலென் றுண்மையாத்
தெள்ளவிளங் குற்றசிவச் சிற்பரமா மோனவருள்
வெள்ள வொளிவெளியில் வேறொன்றுங் காணேனே.

1254. குறிகுணங்கூ டாமெய்க் குலாச்சேர் சொரூப
விறைவனை யே பற்றி யிருக்கு முணர்வால்
அறியவோ வாற்றவோ வன்னியமொன் றற்ற
நிறைவெளியா மோனநிலை நெஞ்சம்பற் றிற்றே.

1255. உள்ளத் தொளிவெளியா வுள்ள சொரூபமாத்
தெள்ளத் தெளிந்த சிவத்திலென் சீர்மையுற்றேன்
உள்ளப் பிறிதா வுபயமில்லை சிச்சடப்பொய்க்
கள்ளக் கலக்கருமெய்க் கண்ணுனை காட்சியிலே.

1256. செம்பரமாத் துன்று சிதாகாசச் சீர்மையன்றி
இம்பரும்ப ரானமற் றேதில்லை யாதுமில்லை.
மொய்ம்புறுவெம் பாச முரண்கெடவென் [னுள்ளத்து
நம்ப னருளியமெய்ஞ் ஞானநோக் கத்திலே.

1257. அலங்கலின்ம் மோக வராத்தோற்றம் பொய்யா
விலங்க வலங்கல் விளங்கலுற்றாற் போலத்
துலங்கலா லான்ற சொரூபவுண்மை, சித்தங்
கலங்கலின் றாகக் கடுவெளியா னேனே.

1258. கடுவெளியா வுள்ளங் கலந்த சிவத்தோ
டிடைவெளியாம் பேதமெனக் கெத்துணையு மில்லை;
கடவுளியல் வாழ்வுசிவக் கைவல்ய மாண்பாத்
திடவுணர்வா மோனந் திளைத்தலுற் றேனே.

1259. வெறிசே ரகந்தையிலா விற்றுப் பரமெய்
யறிவா லறிவுக் கவதியான் மோனக்
குறியே சொரூ க் குலாவாக வுள்ளத்
தறிவுண்மை யான வருள்வெளியா னேனே.

1260. துரியவடி வாவகத்துத் துன்றுபரஞ் சோதி
குருவடிவா வென்னைக் குறிக்கொண்ட வாற்றாற்
கருவளர்பொய்ம் மோகக் கருக்கலற நானென்
னுருவிகந்து சுத்த வொளிவெளியா னேனே.

1261. வெளியா வகத்தில் விளங்குவதோ ருண்மை
யொளியே சொரூபமா வுள்ளேன்; உணர்விற்
களிசே ரகந்தைக் கலக்கமிலேன்; மாணத்
தெளிவாம் பரமசிவச் சீர்மையுற் றேனே.

1262. உள்ளதன்மேற் கற்பனையா வோடும் படவுலகிற்
கள்ளவகப் பேய்மனத்தாற் கண்கலங்கி
[மாழ்கியநான்
தெள்ளியோ ருளவருட் சிற்பரறு வுண்மையுணர்ந்
தொள்ளியமெய்ஞ் ஞான வொளிவெளியா நின்றேனே.

1263. மம்ம ரறுக்கும் மருந்தான சுத்தவருட்
செம்மைசேர் நோக்கஞ் சிறத்தலா லுள்ளத்திற்
பொய்ம்மருவு மாயமனப் புன்பிறவித் துன்பமற
மெய்ம்மலிந்த சுத்த வெளியா விளைந்தேனே.

1264. உரவொளிசேர் கண்ணு ளுழையே னுளத்தூ
டுருவியவென் னுண்டவன்பா லுண்மை யுசாவிக்
கரவுறுவெம் பாழைக் கடந்து சொரூபப்
பரவெளியே யாகப் பரக்கலுற் றேனே.

1265. தீனப் பசுத்துவமாஞ் சித்தக் கலக்கமற்றுங்
கீனப் பழிபாவ மெல்லா மிகந்தொழிந்தேன்;
மோனப் பரசிவமா முத்திப் பரவெளியில்
யானற் றதேயென் னியல்பாக வுள்ளேனே.

1266. திருவடியை யன்றிச் செருக்க வடியேற்
கொருவடிவு மின்மை யுணர்ந்ததா லுள்ளத்
துருவெளியாத் தோன்றுலகோ டொட்டுப்பற்
பரவெளியே யாகப் பரக்கலுற் றேனே. [றின்றிப்

## 22. முற்றவத்தை வியத்தல்

(வெண்பா)

1267. ரமணனுக்கா ளாகப் பணிந்தொழுகுஞ் செல்வச்
சிரமெனக்குத் தந்தபழந் தெய்வம்—பரமெனக்
[கொண்
டாங்கென் னகத்திலதற் கார்வங்கூ ரன்புறவா
வோங்குமொரு நன்றி யுணர்வு

குறிப்பு :— செல்வச்சிரம்—பாக்கியம் படைத்ததலை;
பழந்தெய்வம்—பூர்வ புண்ணியம்.

(கொச்சகக் கலிப்பா)

1268. கலக்கமில் லாதவருட் கைவல்ய வுண்மைத்
துலக்கமார் சொந்த சொரூபானு பூதி
நிலைக்கணெழு கின்றமெய்ந் நேயத் தழுந்தல்
பலிக்கலுற்ற சுத்தசிவ பாக்கியத்தின் மாண்பே.

குறிப்பு :— சிவபாக்கியம்—சிவபுண்ணியம்.

1269. மிச்சையாத் தோன்று வெறும்புலப்பா ழாசையற
முற்செய் தவப்பயனிப் போதெனக்கு முற்படலாற்
குற்சிதமா மோகக் குடிலவகப் பாழிருள்கெட்
டச்சயமெய்ந் ஞான வருட்பதஞ்சேர் வுற்றதே.

குறிப்பு :— அச்சயம்—(அக்ஷயம்) அழிவற்றது

1270. எப்பிறப்பில் யாதுதவஞ் செய்தேனோ யானறியேன்
இப்பிறப்பில் யாதுமே செய்தறியா வேழையேன்
கற்பனைதீர் சுத்தவருட் கைவல்ய பூமியாத்
துப்புரவு சான்ற சொரூபவியல் பொங்கியதே.

1271. மைத்தவகங் கார மயக்கத்தாற் றன்னைநா
னெய்ந்தொழியா துள்ளத் திருந்தொளிர்கின் [ருனடிக்கீழ்ச்
சிந்தஞ் சிவமாத் தெளிந் தொளிர்ஞா னானுபவப்
புத்தமுத வாழ்வு புணர்ந்ததருட் புண்ணியமே.

1272. பாவித் தருளியமெய்ப் பார்ப்பான் பதவொளியில்
மாலற் றெழிந்த மனத்தா லறிதுயில்கூர்
சீலக் களிபெருகச் சிந்தைமகிழ் பொங்குவது
மேலைத் தவத்தின் விளைவோ வறியேனே.

1273. ஆண்டவன் செய்த வருட்சூழ்ச்சி யாலகத்து
வேண்ட வெறுக்கவென்னில் வேறொன்று மின்றாக
மூண்டமோ ஞானுபவ முத்திப் பெருவாழ்வுக்
கீண்டநா னெப்பிறப்பி லென்னதவஞ் செய்தேனே

1274. பேத மயக்கம் பிரிந்தொழியக் காண்குறுசற்
போதவருட் பார்வை புகட்டினான் பொன்னடிக்கீழ்
ஏதமறப் பொங்கு மியற்பரமோ னப்பெருவாழ்
வார்தற் கடியே னருந்தவமென் செய்தேனே.

1275. கற்பனைதீ ருண்மைக் கடவுட் பரசொருபத்
தற்பரமா வென்னகத்துத் தங்கலுற்ற சற்குருவின்
சிற்பரமா மோனவருட் செல்வத் திருவடிக் கீழ்ப்
பொற்புறவாழ் கின்றவென் புண்ணியத்தை யெண்-[ணுவனே.

1276. எத்தனைசன் மங்கள்யா னென்னதவஞ் செய்தேனோ
சித்தமலங் கெட்டொழியச் செற்றவருட் கண்ணோக்
புத்தமுத மோ ஞானு பூதியுளஞ் சேர்வித்த [காற்
வத்தனென்சொந் தான்மாவே யாகவகம் பொங்கவே.

1277. ஈனமற வாண்ட விறைவனருட் சிற்பதத்திற்
போனநாள் செய்தசிவ புண்ணியமென் றேவறி
மோனஞா னனுபவ முத்திப் பெருவாழ்வு [யேன்
தீனனே னுள்ளஞ் சிறக்க விளைந்திடவே.

1278. என்னதவம் யான்முன் னியற்றினேன் சற்றுமெனக்
கன்னியமல் லாதசுத் தான்ம சொரூபமா
உன்னையென் னுள்ளுணர்வு டுய்த்துணர்ந்து கூட [லால்
என்ன குறையுமில்பே ரின்பவெள்ளந் தேக்கவே.

## 23. முக்தி

### க. முக்தி

(குறள்)

1279. எம்பெருமான் சிற்பதத்தா டெய்தியது சுத்தவருட்
செம்பரமா முத்திச் சிறப்பு.

1280. சுவானுபவ மாகத் துலங்கியது மிக்க
சிவானுபவ முத்திச் சிறப்பு.

1281. பீடுசேர் சுத்தப் பிரம்ம சொரூபவருள்
வீடுகண்டேன் வீடா யினேன்.

1282. அகந்தை முனைப்பற் றவிர்சொருப வாழ்வால்
உகந்தபர முத்தியுற் றேன்.

1283. நித்தமுத்தி யாக நிகழ்சொருபச் செம்பதமெய்த்
தத்துவத்தில் வாழ்வுதழைத் தேன்.

குறிப்பு :— சதிர்த்தேன் என்றும் பாடம்

1284. சிற்கே வலமாத் திகழ்சொருபக் காட்சியால்
எற்கேம முற்ற தினிது.

1285. சுத்த வறிவே சொருபானு பூதியாத்
துய்த்தலுற்றேன் முத்தி சுகம்.

1286. அந்தமிலாக் கண்ணு வலர்தலுற்ற வென்னுருவே.
பந்தமிலா முத்திப் பரம்.

1287. பகலிற் பணிமதி காண்டலாற் பாச
விகல்கெட் டிலங்கிற்று வீடு.

குறிப்பு :— பகலிற் பணிமதி—சகலத்திற் கேவலம், ஜாக்கிர சுழுத்தியான சமாதி நிலை. துரியந்துலங்கலால் வீட்டியல் விளங்கிற் றென்பதாம்.

1288. துலங்கலரு மோனத் துரிய சொரூப
நிலங்கலந்து நின்றதென் னெஞ்சு.

1289. உடம்போடு முத்தி யுறப்பெற்ற ஞான
திடம்பாடு சேர்ந்தேன் சிவத்து.

1290. திண்மைசேர் சுத்தவருட் சிற்பதஞ்சேர் வுற்றதெனக்
குண்மைவாழ் வாக வுளத்து.

1291. தாக்கறவென் னுள்ளத்துத் தற்பரமாத் தங்கியது
மோக்கவியல் பான முதல்.

1292. நீக்கமற வுள்ள தென் னெஞ்சத்தே நித்தசித்த
மோக்கவடி வான முதல்.

1293. மோனவுணர் வேசொருப முத்திப் பெருவாழ்வா
யானடைய வொன்றிற் றியல்.

1294. சோதிப் பரமாத் துலங்கு சொரூபவருள்
வீதியிலே வீடுகண் டேன்.

1295. போதவியல் பானவருட் பூரணமோ னுனுபவ
மேதகவில் வீடுகண் டேன்.

1296. அத்தகநிற் கின்ற வருட்பரமோ னுனுபவ
மெய்த்தகவில் வீடுகண் டேன்.

1297. கவலையற்ற வாழ்வாக் கருத்தில் விளங்கு
சிவபதத்தில் வீடுகண் டேன்.

1298. கண்ட சொரூபக் கடவுட் பரவொளியில்
விண்டதுபொய்ம் மோக விகற்பு.

(வெண்பா)

1299. அறிவா வொளிர்தலா லாண்டான் சொரூப
நிறைவான முத்தியென் னெஞ்சிற்—குறையான
தாழ்வற் றியல்சொருப சாந்த சதாசிவத்திற்
பாழ்பட் டொழிந்தது பாழ்.

1300. ஆனந்தத் தூடுயிரை யாழ்த்துஞ் சிவஞான
மோனந் தமியேற்கு முத்திநிலை—நானுந்
தகந்தை முனைப்பழிந்த வாற்றாலே மாயா
ஜகந்தருபொய்ச் சஞ்சலமங் கின்று.

1301. கலக்கமறு மோனவருட் காட்சியா லுண்மைத்
துலக்கமுறு முத்திநலந் தோய்ந்தேன்—உலக்கலறு
சுத்தசச் சித்தாச் சுடர்சொருபக் கேவலத்திற்
பொய்த்தொழிந்த தென்புன் மதி.

1302. மோனமே தன்சொருப முத்தியாய் வாழ்வரை
வானமா வுள்ளம் மலர்ந்ததால்—ஊனமயற்
பார்வையாம் பாசபந்தப் பாழ்ங்கலக்க மற்றவொளி
யார்வதாய் நின்ற தறிவு.

1303. காண வொணாதவருட் கைவல்ய மோனவொளி
மாண வகத்தே மலர்தலால்—ஆணவமா
மோக வகந்தையற முத்திப் பரசொருப
மாகவொளிர் கின்ற தறிவு.

1304. தளைப்பட்ட மோகந் தகர்தலா லுண்மை
வெளிப்பட்டுத் தன்னியல்பே வீடாய்க்—களைப்பற்ற
வாழ்க்கையா மோனங் கலந்தசொரு பானுபவத்
தாழ்க்கையொன் றில்லை யுயிர்க்கு.

1305. இன்பநிஷ்டை யாவென் னிதயத் தொளிர்சொருப
நம்பனருட் போதமே நல்லமுதா—அன்புதரும்
பந்தக் கரணத் தருள்வெளியாப் புக்கசிவம்
சந்ததமெய்ம் முத்தித் தலம்.

குறிப்பு :— நிஷ்டையா - நிஷ்டைவடிவாக.

1306. திடமான சாயுச் சியவுணர்ச்சி யுள்ளத்
திடமாக மீதூர்ந் தெழவே—உடலால்
உறுந்துன்ப மோக வுணர்ச்சிகூர் சிந்தை
பிறிந்ததுமோ ஞனுபவம் பெற்று.

1307. அமரவாழ் வோங்க வறிவுட் செறிவா
யமரவே யூடுருவ லான—ரமண
பரந்தாமன் மோனவருட் பார்வையா லென்னுட்
சுரந்ததொளிர் முத்தி சுகம்.

1308. ஊனவுயிர்ப் பாசவுணர் வோய விளங்குசிவ
ஞானமா மோன நடுநிலையில்—யானற்
றியல்சொருப வாழ்வாம்பே ரின்பமுத்தி யாகப்
பயில்வதனு பூதிப் பரிசு.

1309. உண்மை யியல்கண் டுணர்சொரு பானுபவ
வண்மையிலே வாழ்க்கை வளம்பெருக—நுண்
[மைசே
ருண்மையள வாக வொடுங்கலுற்ற சித்தமருள்
விண்மயமா மேவிற்று வீடு.

1310. உண்மைசேர் மோனவொளி யுற்றதா லென்ன
[கத்தில்
வண்மைசேர் சாந்தி வளம்பெருகத்—திண்மைசேர்
முத்திவாழ் வோங்க முனைப்பான பேயகந்தை
செத்தியல்பா நின்றேன் சிவத்து.

1311. பொய்த்தொழியா வுண்மைப் புகலாந் தயாதரும
புத்த ரமணனருட் பொன்னடியை — இத்தரையிற்
பத்தியாற் போற்றிப் பரமோப சாந்திவளர்
முத்தியொளி மூண்ட துளத்து.

1312. பிழைபடா மோனவருட் பெம்மானோ டொன்று
விழைபடா நின்ற வியைபால்—பிழைபடா
மோனவருட் பெற்றிசேர் முத்திப் பரவெளியென்
னூனமறப் புக்க துளத்து.

1313. அறிவே யகமா வகந்தெளிந்த தாற்பொய்ம்
மறதிதீ ருண்மையே வாழ்வா—உறுதிசேர்
சுத்தசிவ மாகத் துலங்குசொரு பானுபவ
முத்தியொளி மூண்ட தகத்து.

1314. பொன்னம் பலச்செம் பொருள் வளஞ்சேர் [புந்தியே
மன்னும்பே ரின்பவருள் வைப்பாகத்—துன்னும்
பரசொருப மோனவியல் பற்றியதே முத்தி
யரசுரிமை யாட்சி யகத்து.

1315. வாழ்வொளியா வென்னுள் வளர்சொருப மாட்சியிலே
தாழ்வொழியப் பெற்றபெருந் தன்னியனுய்ப் [பாழ்வளர்வெம்
பாசபந்த மாகப் படருமனக் கற்பனையின்
மோசனமா முத்திகண் டேன்.

1316. அன்பே யறிவே யிரண்டு மொருங்கியெனக்
கின்பவடி வான விதயமாய்—என்பரமன்
ருன வருள்வெளிச்சிற் றம்பலமா முத்தியொளிர்
மோனவியல் வாழ்வுமூண் டேன்.

1317. அன்பறிவொன் ருக வமைந்தபர பத்தியொளி
ரின்பவருள் வாழ்வென் னிதயத்தே—துன்பமறக்
கூட்டியசற் போதக் *குலாசலத்தின் காட்சியிலே
வீட்டியலின் மாட்சிகண் டேன்.

*ஈண்டுக் குலாசலமென்று குரு சொருபமாம்
ரமணசலத்தைக் குறித்தபடி.

1318. தன்னிலே தானுத் தழைத்தொளிர்வ தன்றிமற்
றின்னென்று காண்டற் கிலாதொழியத்—துன்னு [மனச்
சுட்டுணர்வற் றேங்கு சொரூபவுணர் வாம்பதத்தில்
வெட்டவெளி வீடுகண் டேன்.

குறிப்பு :— சொரூபவுணர்வே வீடு பேறு என்பதாம்.

1319. தானேதா ளைகைத் தழைத்த சொரூபவருள்
வானேநா ளைக வளர்தலால்—மாளபி
மானவகைப் பற்றற்ற வாழ்வாம்பே ரின்பமுத்தித்
தானமே நாளுயி னேன்.

1320. ஊனமா மோக வுலகப் புலத்தாடு
நானென்று மோதி நலிந்தநாள்—ஞான
குருபாதங் கூடலாற் கூடினேன் சிந்தை
வெருவா விழுத்து யுணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

1321. அறிவு கொளுத்தி யடியே னகத்திற்
பிறிவிலா வாழ்வாம் பிரம்மாறு பூதிச்
செறிவான மோனந் திளைப்பித்த வாண்டா
னுறவிலே கேவலவீட் டுண்மைகண் டேனே.

1322. வலியவந்தாட் கொண்டவருள் வள்ளற் பிரான்பால்
இலயமா வொன்றலால் யானென்னும் புத்தி
அலவலற்ற மோன வருள்வெளியே யாகக்
குலவலுற்ற வாழ்வொளியாற் கூடியது வீடே.

1323. அறிவான ஞேயசொரூ பாதிக்கத் தின்கீ
பூறைவால் உடைச்சற வுள்ளத்தே முற்றச்
செறிவான சுத்த சிவத்துவமா(ம்) மோன
நிலையிலுற்றேன் உண்மை நிலையான வீடே.

1324. கந்தறமோ கப்பாழ்ங் கலக்கமற வுள்ளத்
திதந்தரும்பே ரின்ப விறைவன் சொரூபப்
பதந்துலங்கு மோனப் பரமோப சாந்தி
நிதந்தொடர்வாழ் வாக நிலவியது வீடே.

1325. மயல்வழங்கு மாய மனங்கரக்கத் தன்மெய்
யியல்விளங்க லூற்ற விதயத்தே ஜீவச்
செயல்விளியப் பொங்குசிவச் சிற்பர மோன
வியன்பெருவாழ் வாக விளைந்ததின்ப வீடே.

1326. அமுத சொரூபஞா னனுபவத் தாலே
அமைதிபெற வுள்ளத் தகமகமென் றுண்டோன்
சமுகமே யாகத் தழைத்த ஜகத்து
மமதை யகந்தையற்ற வாழ்வெனக்கு வீடே.

1327. * சித்தவித்தை யாகத் திகழ்மெய்த் திருவருளாற்
மொய்த்தறநா னென்னுமனப் பூட்டான சிச்சடமால்
ஒத்தசம வாழ்வா வொளிர்ந்ததுளத் தான்றபர
நித்தமுத்தி யானநிஜ ஞேயானு பூதியே.

*சித்த வித்தை—நித்ய ஸித்தமாகவுள்ள சுத்தான்ம சொரூப ஞானம்.

1328. ஒருமைசேர் பத்தி யுணர்வூற வென்னுட்
பெருமிதமா வீற்றிருக்கும் பெம்மா னடிக்கீழ்
வெருவரல்சேர் மோக விகற்பமறப் பொங்கும்
பரசிவவாழ் வேகாண் பரமுத்தி மாண்பே.

1329. உலைவிலா வுண்மை யொழுக்கமாம் மோன
நிலையிலே யென்னை நிறுவினன் பாதத்
தலைவிலா வாழ்க்கை யவிர்தலாற் சற்றுந்
தொலைவிலா முத்தி சொரூபமுற் றேனே.

குறிப்பு :— உண்மை யொழுக்கம்—ஸதாசாரம்.

1330. நிராசைமீக் கூர்ந்தவென் னெஞ்சத்து முற்ற
நிராகுலவாழ் வாக நிரம்புற்று நீடு
நிராமயமா வுள்ளொளிர்மெய்ஞ் ஞேயமே மோனப்
பரானுபவ முத்தியாப் பற்றலுற் றேனே.

1331. சித்திக்கப் பெற்ற சிவானுபூ திந்திறத்தாற்
பொய்த்துக் கழிந்ததுநா னென்னுமனப் புன் [கலக்கம்;
புத்திப் புலங்கடவுட் பூரணமாப் பொங்கலால்
முத்திக் கலப்பு முடிந்ததோ ருண்மையே.

1332. ஆண்டவன்பே ரின்ப வருள்வாழ்வா மோனவொளி
யீண்டலா லுள்ளத் தியற்பரமா முத்திகண்டேன்;
மாண்டொழியப் பெற்றேன் மதோன்மத்தப் [பேயகந்தை
காண்டலரு சுத்தசிவக் கைவல்யச் செம்பதத்தே.

1333. கற்பனைதீர் மோனக் கருத்தா லிதயத்திற்
சிற்பரமாய்ப் பொங்கு சிவாநுபவ முத்தியொளி
சொற்பனமா மோகச் சுழற்சியறக் கைவல்யத்
தற்பரமாத் துன்று சதாசிவமாத் தங்கியதே.

1334. நீடும் பரமசுப நிஷ்டாநு பூதியாற்
பீடுசேர் சுத்தப் பிரம்மபதங் கண்டடைந்தேன்,
மூடியபா மாவரண மோக வகந்தைமுனைப்
பாடுவெறுஞ் சாயையா வற்ற அருள்வெளிக்கே.

1335. சொலக்கருத வொண்ணாத் துரீய சொரூப
நிலைக்கணே யென்னை நிறுவினான் பாதந்
தலைக்கணியாத் தாங்கினேன் சஞ்சலஞ்சேர் [மோகக்
கலக்கமற வாள்கின்றேன் கைவல் லியமே.

1336. உள்ளக் கருத்தான வொள்ளியோன் சுத்தவருள்
வெள்ளக் கடலா விளைதலால் வெம்பிறவிக்
கள்ளமனத் துன்பங் கழன்றொழியக் கைவல்யத்
தெள்ளமுத முத்தி சிறக்க விளங்கியதே.

1337. சுத்தவறி வான துரீய வியற்பரவாழ்
வத்தனரு ளாலென் னகத்திற் சுடர்தலால்
வித்தகமெய்ஞ் ஞான விபூதியாத் துன்றுபர
முத்தி சொரூபமா மூண்டதென் னுள்ளத்தே.

1338. நானற்ற ஞானமே ஞானமா நல்கியமெய்
வானப் பிரானை மனங்கொண்டு வாழ்தலால்
ஊனக் கவல்சே ருடலுலகப் பீடையற
மோனப் பரசொருப முத்தியுணர் வீண்டியதே.

குறிப்பு :— மெய்வானம்—அருள்வானம், பரவானம்.

1339. கோனாங் குருபிரான் கூர்ந்தவருட் கண்ணோக்கால்
யானா ரெனவிதயத் தெய்தலுற் றேனுக்குத்
தானான சுத்தசிவத் தன்மை தழைத் தொளிர
மோனானு பூதிசேர் முத்தி விளைந்ததே.

1340. அறிவா விளங்கலுற்ற வாண்டான் பதத்திற்
செறிவான சுத்தவருட் சிந்தோப சாந்தி
நிறைவா லகன்பரமா நீடியதென் னுள்ளம்
கறையான மோகவகங் காரவுருக் கெட்டே.

1341. ஆண்டா னளித்த வருட்பே றடியேற்குத்
தூண்டவேண் டாத சொரூபப் பரஞ்சோதி;
ஈண்டியபே ரின்ப வியல்வெளியா வுள்ளத்து
மூண்டவது கைவல்ய முத்திப் பெருக்கமே.

1342. அறிவான வுண்மையே யான்ம சொரூப
நிறைவான மோன நிலையா இதயத்
திறைவ னருளா லியைந்தாங் கமைந்தேன்
பிறிதற்ற சுத்தப் பிரம்ம பதத்தே.

1343. சுத்தசிவ மாகத் துலங்கு சொரூபவருள்
வித்தகசற் பத்தி விளைவா லளைதலுற்றேன்,
புத்தமுத மோனனு பூதியாங் கைவல்ய
முத்திப்பே ரின்பம் முழுமுதல்வாழ் வாகவே.

1344. ஏதப் படாத விறைவன் சொரூபவருட்
போதப் பொலிவியல்பாப் பொங்கலுற்ற புந்தியார்
சார்தக்க சுத்த சதாசிவசாந் தானுபவ
மோதமா முற்றியது முத்திப் பெருவாழ்வே.

1345. எப்பிரா னை விறைவனையே தாரகமா
நம்பியதா லான்றமெய்ஞ் ஞானனு பூதியுற்றேன்
அப்பரமே யாக வகங்கிளர்பே ரின்பவருட்
செம்பரமா முத்தி சிறக்கவொளிர் கின்றதே.

1346. ஊட்டியதன் னுண்மை யுசாச்சிறந்தாற் சிச்சடவை
பூட்டுத் தெறிக்கவென் புந்தியுட்புக் காண்டபிரான்
காட்டிக் கொடுத்தவருட் கைவல் லியசொருப
வீட்டியலின் வெற்றி விசுத்தப் பரவெளியே.

1347. பம்பிப் பரந்தவெம் பாசா டவியான
வெம்பவத்தி னின்று விடுபட்டு வீடுற்றேன்
நம்ப னருளியமெய்ஞ் ஞானனு பூதியாற்
செம்பரமாஞ் சொச்சொருபச் சீர்மை
[தெளிதலுற்றே.

1348. ஆண்டவன்பா லேயடியேற் கார்வமெழ வுள்ளத்திற்
பூண்டமெய் யன்புசிவ போகமாப் பொங்கலுறக்
காண்டலுறு சுத்தவருட் கைவல்ய வாழ்வாக
மூண்டதுமோ னனுபவ முத்தி பெருக்கமே.

1349. முத்திக்கு வித்தாக முன்னின்ற வாண்டவன்பாற்
பத்தித் கிளர்ச்சியாற் பாசக் கலக்கமற்றேன்;
புத்தித் தெளிவுசிவ போத வருட்பொலிவா
முற்றியதாற் பற்றியது முத்திப் பரசுகமே.

1350. சுத்தவித்தை யாகத் துலங்கு சொரூபத்திற்
பொய்த்தொழிவாற் சீவபோ தக்கலக்கப் பேயகந்தை
அத்தமியா மோன வருட்சிற் பரமுத்தி
நித்தவியல் பாகவென் னெஞ்சத் தியைந்ததே.

1351. பேர்க்கலரு மோகவகப் பேயா ணவமான
மூர்க்க முனைப்பு முடங்கக்கூ ருள்ளுணர்வால்
ஆக்கவழி வற்ற வருள்வெளியாந் தன்னுண்மை
நோக்கமே மிக்கபர மோக்கமாத் தேக்கியதே.

1352. தொத்துறுபாழ் மோகமனச் சுட்டறிவாங் கற்பனை
அத்துவித மோன வருள்வெளியே வாழ்வாக [தீர்
வித்தகமெய்ஞ் ஞான விமுத்தி விளங்கலாற்
பெத்தனெ னென்னுமகப் பேய்க்கலக்கம் பேர்ந்ததே.

1353. தப்பலரு முண்மைத் தவமான சுத்தவருட்
செப்பவுணர் வுள்ளே திகழ்தலால் வேற்றுமைதீ
ரொப்பமுறு நோக்கமா வோங்குமோ னனுபவ
மெய்ப்பதவாழ் வாக விமுத்தி விளங்கியதே.

1354. ஊக்க மெனக்குமற் றென்றிலுற தென்னறிவைத்
தாக்கியசுத் தாத்துவித சாந்தானு பூதியாற்
போக்குவர வற்றவருட் பூரணமோ னனுபவ
நோக்கமா மோக்கமெனக் காக்கமா வுற்றதே.

1355. சொந்த சொரூபமாத் தூன்றுசிவ போதவருள்
விந்தையா லுள்ளமே வீடா விளங்கலுற்றேன்;
பந்தம் மனக்கற் பனைமாத் திரமாகச்
சிந்தியது சுத்த சிவோகத் தெளிவாலே.

1356. வாக்கு மனங்கடந்த மாண்பான வுண்மையா
மீக்குயர்கை வல்ய விழுப்பதத்திற் கூரம்பாத்
தாக்கு தியான சமாதியால் ஆன்றபர
மோக்கமே வாழ்வா முடிந்ததென் னுள்ளமே.

1357 தெள்ளத் தெளிந்த சிவத்திலே நானெனும்பொய்க்
கள்ள மனங்கரைவாற் கற்பனைதீர் சுத்தவருள்
வெள்ளமா யோன வியன்பரவாழ் வேயகபாத்
தள்ளருமெய்ஞ் ஞான சதாமுத்தி சார்ந்ததே.

1358. இதமா விதயத் தியன்றொளிர்சற் போதப்
பதமெங்கு மாகப் பரத்தலால், வேகக்
கதஞ்சே ரகப்பேய்க் கலக்கமில்பே ரின்ப
முதஞ்சே ருபசாந்த முத்திதுன் றிற்றே.

1359. கொச்சைமனக் கற்பனை கோலா கலஜாலம்
பொய்ச்சொழியப் புந்திப் புலத்திலருட் கேவலமாச்
சொச்சொருப வுண்மை துலங்கலால் அத்துவித
நிச்சயமா முத்தி நிஜானுபவ மாயிற்றே.

1360. சுத்தவருள் வானுத் துலங்கு சொரூபத்திற்
செத்தொழிந்த யோகச் செருக்கால் உபசாந்த
வித்தகவாழ் வான விமுத்தி சதோதயமா
வொத்தொளிர்வ தாயிற் றெருருபடித்தா வுள்ளத்தே.

1361. யானடைந்த முத்தி யினைத்தே வெறும்புலப்பா
டான வகந்தை யலமரல்சேர் பொய்க்கனவு
போனதன்றி யாதும் புதிதாப் புணர்ந்ததன்று;
மோன வெறுவெளியென் றென்றுமுள்ள முத்தியே

1362. சிற்பதத்தி லென்னைத் தெளிந்தேன் சிவானுபவத்
தற்பரமா மோனந் தழைத்தேன் சகஜவியற்
பொற்புறுவாழ் வுள்ளமெழப் பொங்கப்
[புணர்தலுற்றேன்
கற்பனைதீர் சுத்தவருட் கைவல்ய முத்தியே.

1363. மாறுபா டான மயக்கச் செருக்கான
ஊறுபா டற்ற வொளிவெளியா வுள்ளத்துத்
தேறலுற்ற சுத்தவருட் சிற்பதத்திற் பொற்புறவே
வீறலுற்ற தாருயிர்க்கு வித்தகமா முத்தியே.

1364. களிசே ரகந்தைமனக் கார்கரக்க வுள்ளத்
தொளியா விளங்கலுற்ற வுண்மையிலே சாந்தி
யளையா நின் றேனுக் ககம்பரமா முத்தித்
தெளிவா லியன்றதென் சீர்மைசேர் வாழ்வே.

1365. யானற்ற சுத்த வியற்சிற் பரசொருப
மோனத் தலத்திலே முத்தி நிலை கண்டுகொண்டேன்;
ஊனக் கலக்கமா வுற்றமனக் கற்பனையாப்
போனதுமெய் போலப் புலப்பட்ட வாழ்க்கையே.

1366. கண்ணது தா னந்தமிலாக் கன்னுகை வுள்ளத்து
நண்ணலுற்ற சுத்தமெய் ஞ் ஞானமு பூதியான்
மண்ணிலே வந்து வளர்த்ததுகாண் மோனவருள்
விண்ணியல்வாழ் வான விசத்தப் பரகதியே.

## 2. நித்த முக்தி

(குறள்)

1367. சுத்தவருட் சத்தித் துலக்கமா வுள்ளத்து
நித்தமுத்தி சார்வுற் றது.

1368. சுத்தவருள் வாழ்வாத் துலங்குவதென் னுள்ளத்து
நித்தமா முத்தி நிலை.

(வெண்பா)

1369. வேர்வைசேர் வெம்பிறவித் துன்பமறக் காணுமியற்
பார்வைசேர் மோனப் பதத்திலே—நிர்மைசேர்
சாந்த சொரூப சதாமுத்தி தன்னியல்பாத்
தோய்ந்ததுவாழ் வாகத் தொடர்ந்து.

(கொச்சகக் கலிப்பா)

1370. அகமான வுண்மைபைநன் காராய்ந் தறியா
திகமே பரமேயென் றெண்ணியெண்ணிக் கெட்டேன்
அகமகமென் றுண்ட வருட்பிரான் மோனத்
தகவிலே கண்டேன் சதாமுத்திச் சார்பே.

1371. அறிவான வுண்மையா வான்ற சொருப
விறைவனு ளுள்ளத் தியைந்ததோர் சாந்தி
நிறைவே பரமார்த்த நித்தமுத்தி யாகத்
தறையிலே சார்ந்தேன் சதாமுத்தி வாழ்வே.

1372. அறிவே சொருபமா வாண்டவனை நானு
மறிவா லகத்தே வழிபட்ட வாற்றால்
அறிவிலே மோகமின் றாக விளங்கு
நிறைமெய்ப் பதத்தே நிலைக்கலுற் றேனே.

1373. அன்பரா லன்றி யறியவொண் ணு வாண்டவன்பே
ரின்பமார் சாந்தி யெழப்பொங் கிதயத்தில்
வன்புசேர் மோக மனக்கிலே சங்கரக்கத்
தன்பரயா மோன சதாமுத்தி சார்ந்ததே.

1374. உலோப வகந்தை யொழிந்திடக் கன்மக்
கலாப மயக்கக் கடையறக் கட்டி
இலாபமா வுள்ளத் தியற்று விசாரச்
* சலாபத் தடைந்தேன் சதாமுத்தி தானே.

*இலாபமா அடைந்தேன் எனக்கூட்டுக.

1375. யானென் றிதுவென் றெநந்தொடுந் தன்னியல்பிற்
றுனென்ற லற்றவெறுந் சைதன் னியவடிவே
நானென் றியல்பாக நண்ணு சமாதியால்
* மோனசதா முத்தியா மூண்டதென் னுண்மையே.

மோனசதாமுத்தி – சதாமோனமுத்தி
(சொற்கள் இடம் மாறிநின்றன)

1376. கற்பனையா வெல்லாங் கழிந்தொழியக் கைவல்யச்
சிற்பரமாந் தானே சிவபூ ரணமாக
நிற்பதா லுள்ளத்து நீக்கமற மீக்கிளர்மெய்த்
தற்பரவாழ் வான சதாமுத்தி பொங்கியதே.

1377. பற்றற்ற சுத்தவருட் பார வியல்வெளியா
நிற்றலுற்ற மெய்ஞ்ஞான நிஷ்டானு பூதியால்
அற்றமா மோக வகப்பா ழாக்கரக்க
முற்றியதெக் காலுமுள்ள முத்தி சொரூபமே.

1378. மறந்தொழிந்த மாய மனப்பிரமா தத்தாற்
பிறந்திறந்தேன் மோகவகப் பேயிறக்கச் செற்றுன்
சிறந்தொளிர்பே ரின்பவருட் செம்பதமெய் வாழ்வா
நிறைந்தியல்வ தென்சொருப நித்தமுத்தி தானே.

1379. ஆக்கமா வுற்ற வருட்பிரான் சேவடியிற்
சூக்கமாத் துன்று சொரூபானு பூதியால்
வாய்க்கலுற்ற கைவல்ய வாழ்வு புதிதன்று;
நீக்கமற நீள்சொருப நித்தமுத்தித் தன்மைத்தே.

1380. மலையிலக்காச் சேர்சொருப மாட்சியா லுள்ளத்
தலைவில்பே ரின்ப வருள்வெளியாந் தன்மாட்
டுலைவிலா மோனவுணர் வூட்டினன் பாத
நிலையிலெனக் கீண்டியது நித்தமுத்தி வாழ்வே.

1381. நாராய ணாய நமவென் றிதயத்திற்
சேராநின் றேனுக்குச் சித்தஞ் சிவமயமாய்
நேரா விளங்கலுற்ற நித்தமுத்தி நோக்கத்திற்
காரா ணவப்பாழ்ங் கலித்தலையெக் காலுமின்றே.

1382. தொண்டுபட்டு நாயேன் சொருப குருவருளாற்
கண்டுகொண்ட மோனவியற் கைவல்ய வீட்டுலகு
பண்டுதொட்ட வென்னுரிமைப் பட்டயமே யல்லாது
கண்டுகொண்டு நானடைந்த சம்பா தனையன்றே.

## கூ. ஜீவன் முக்தி

(கொச்சகக் கலிப்பா)

1383. ஜீவபோ தங்கெடுத்த தேவதே வப்பிரா
னேவலா லுள்ளத் திறைபணிநிற் கின்றேனுக்
கார்வமீ தூர வடைந்த சிவானுபவச்
சீர்வளர்வாழ் வூடுகண்டேன் ஜீவன்முத் திச்சிறப்பே.

### ௮. ஜீவன் முக்திப்பேறு

(வெண்பா)

1384. நித்தமா வுள்ள நிராதார வுண்மையோ
டொத்தொழுகும் மோன வுணர்வாலே—சுத்தவருட்
கேவலத்தி லூன்றிக் கிளர்சொருப மாட்சியே
* ஜீவமுத்தி யாமெய்த் திறன்.

*ஜீவமுத்தி - ஜீவன்முத்தி

1385. கடவுட் பெரும்பதமாங் கைவல்ய சித்தி
உடல்விட் டொழியுமுன்பே யுற்றேன்—இடரற்
றியல்சொருப சாந்தியெனக் கின்பவெள்ள மாக
இயல்வதகத் தென்று மினிது.

## 24. அனுபவம்

### ௧. அனுபூதி

(கொச்சகக் கலிப்பா)

1386. சூதான மோகச் சுழற்சியா லாருயிர்மாட்
டாதாளி செய்யு மகப்பே யடல்கெடக்காண்
பாதானு சந்தானம் பற்றலா லுள்ளத்திற்
போதானு பூதிசிவ பூரணமாப் பொங்கியதே.

### ௨. அனுபூதியடைவு

(வெண்பா)

1387. இரும்பு மனத்தை யிளக்கியே தூய்தா
வரும்புமெய் யன்பை யலர்த்தி—விரும்புந்
தியானானு பூதி செழித்தே னிதயத்
தியானனை வென்னை யிழந்து.

1388. சிறக்க வொளிர் கின்றசிவச் சீரே யெனக்கு
மறக்கவொணு மோனவியல் வாழ்வா—உறைக்க
சித்தக் கலக்கமறத் தீரத் தெளிந்தவருள் [லாவ்
வித்தை விளங்கிற் றகத்து.

(கொச்சகக் கலிப்பா)

1389. தன்னையோ வன்றிப் பிறிதையோ தானறியாத்
தன்னியலா மந்தச் சதிரொளியே கைவல்ய
நன்னயமார் சுத்தமெய்ஞ் ஞானனு பூதியா
மன்னியதென் னுள்ளத்தில் வாலாய மாகவே.

1390. வெற்றறிவா வென்னுள் விளங்குசிவக் கேவலத்து
மற்றறிவெள் ளாமே மயலா வறிந்துகொண்டேன்;
பெற்றுவக்க வென்னிற் பிறிதாக வொன்றுமின்றா
முற்றியது சற்போத மோனனு பூதியே.

1391. எண்ண வொணாத வியற்சிற் பரசொருப
வண்ணமா நிற்கு மனத்தாற் றினைத்துற்றேன்
உண்ணெக் குருகு முபசாந்த போகமா
நண்ணவரு சுத்தமெய்ஞ் ஞானனு பூதியே.

1392. பந்தமற்ற வுண்மைப் பரத்திலே பாசமற்ற
சொந்தத் துரீய சொரூபந் துலங்கலால்
அந்தமில்பே ரின்ப வருள்வெளியாப் பொங்கியதென்
புந்தியிலே சுத்தசிவ போதானு பூதியே.

## ௬. அனுபவ வியப்பு

(வெண்பா)

1393. எம்மானே போலிங் கியற்பரமா நின்றகுரு
எம்மா நிலத்திலெவ ரெய்தினர்—எம்மான்
ஒருசொற் பொருளா வுளத்தருளப் பெற்றேன்
இருவிகற்ப மற்ற வியல்.

1394. துன்பமயல் சற்றுந் தொடரா வொளிவளர்பே
ரின்பவெளி யான விதயத்தே—என்பரஞ்சற்
றல்லாத மோன வருட்பெருவாழ் வென்முன்னோ
ரெல்லாருஞ் செய்த தவம்.

குறிப்பு : இதயத்தே அருட்பெருவாழ்வு அடைந்த
தற்குக் காரணம் முன்னோர் செய்த
தவம் என்பதாம்.

1395. கேவலமா மோனக் கிளரொளிசே ரன்புமய
வாழ்வலரப் பெற்றவருள் வண்மையால்—ஆவ
லனைத்து மடங்குசாந் தானுபவப் பெற்றி
இனைத்தென் றுரைத்த லெவன்.

1396. எல்லாமே தானா வியல்சிற் பரமாட்சி
நல்லா ரிதயத்தே நண்ணல்போற்—கல்லாத
பொல்லாதே னுள்ளத்தும் பொங்கிப் பொலியுமிது
வல்லாதுண் டோவற் புதம்.

1397. கலகலத்துச் சிந்தை கலங்காது தெய்வப்
பொலிவுபெற்றுக் காட்சிமகிழ் பொங்க—உலகே
சிவசந் நிதியாத் தெரிசித் தலின்மேற்
பவிசென்ன வேண்டு மெனக்கு.

1398. உண்டம் பலத்தே சிவாயநம வென்றுறங்குந்
தொண்ட ருளத்திற் சுடர்சொருபன்—தொண்டர்க்
கயலான வென்பா லனுபூதி யாந்தன்
னியல் காணத் தான்சுடர்த லென்.

1399. ஞானப் பெரும்பதத்து நாட்டமெனக் குண்டாக
யானெப் பிறப்பிலென் னென்ன நலன்—ஞானப்
பெரியோர் திறத்தரிதிற் பேணினேன் சற்றுந்
தெரியே னடைந்தேன் சிவம்.

1400. வாக்கிறு லெங்ஙன் வழுத்தல் சிவானுபவத்
தேக்கிற் படிந்து திளைத்தவுயிர்—தேக்கு
முளத்துநா னென்னு முணர்வே யொடுங்கி
முளைத்தெழா மோன சுகத்து.

1401. பந்தவழக் காகப் பயின்றமனம் முத்திதன்
சொந்தவியல் பாகத் துலங்கிலென்ன—விந்தைகாண்
மன்னன் குருரமணன் மாயாவி போலுமினி
யென்னகரி வேண்டு மிதற்கு.

1402. நண்ணலுற்ற ஞானிவொளி நம்பனருள் கூட்டுசிவ
புண்ணியத்தின் மாட்சிப் பொலிவே காண்—
[விண்ணளவப்
போர்த்து விளங்குசிவ பூரணமாங் கேவலமாச்
சீர்த்தொளிரு மந்தத் திறன்.

1403. தெள்ளத் தெளிந்த சிவானுபவந் தன்னடியார்
கொள்ளைகொள நல்குங் குருவருளால்—உள்ளத்தே
மற்றொன் றிலாதொளிரும் மௌனவருட் கேவலச்சீர்
இற்றென் றுரைத்த லெவன்.

1404. ஊத்தையே னுள்ளத் துடையா னளித்தபர
மார்த்த சொருபஞா னனுபவம்—வார்த்தையொடு
சிந்தையைத்தன் பாலே செறிவித் தொளிர்மவுன
விந்தையைநா னென்வியக் கேன்.

1405. அகமமதை செற்றென்னை யாண்டகுரு நாதற்
கிகபரமொன் றின்றி யிழந்தேன்—அகமறலாற்
பேதமறக் கெட்டுப் பிரம்ம சொருபவருட்
போதவெளி யாகப் புணர்ந்து.

1406. யானென் செயவல்லேன் யானென் செயக்கடவேன்
யானென்னு மென்னையே யான்காணேன்—வானளவ
மோன வொளிபெருக்கி முன்னின்ற வாண்டவனுக்
கானதுநல் லூணு வகம்.

(கொச்சகக் கலிப்பா)

1407. ஆரம்ப ஞஞ்சிற் றடியே னகந்தினைக்கச்
சேரும் பரிசுசித் தித்ததென்ன வாச்சரியம்
பேரன்ப ரானமுழுப் பித்தர்க்கே மூற்றாட்டாம்
பேரின்ப வெள்ளவருட் பெம்மான் சொருபமே.

1408. தானேதா னாகித் தழைத்தொளிர்சற் போதசிவம்
நானேதா னவொளிர்மெய்ஞ் ஞானமோ னானுபவம்
ஊனேநா னாக வுயங்கிக் கிடந்தமட
வீனனே னுள்ளத் தியல்வதருட் சித்திரமே.

1409. அற்றிலேன் போகப்பா ழாசை திருவருட்பற்
றுற்றிலேன் பாசவுணர் வோய்ந்திலேன் மெய்ஞ்
[ஞானங்
கற்றிலேன் கற்றவர்பாற் சற்றுங் கலந்திலேன்,
பெற்றதென்ன விந்தை பிரம்மானு பூதியே.

1410. மூர்க்க வகந்தை முனைப்பு முடங்கலால்
ஏக்கமோ வூக்கமோ யாதுமறப் பொங்குபர
மோக்கமே நோக்கமா முற்றியவென் னுள்ளுணர்வில்
வாய்க்கலுற்ற வாழ்வின் வசிகரமென் சொல்வதே.

1411. அவமாக வாழ்ந்தேன் அகக்கா ரிருளற்
றவிர்மோன ஞான வடிச்சோதி கண்டேன்
சிவமாகச் சேர்ந்தவருட் செல்வச் செழிப்பாற்
பவமோக வாழ்க்கைப் படமொழிந் தேனே.

1412. காயத்தொண் டின்றிக் கருத்தில் விளைந்தசிவ
நேயத்தொண் டேமுற்றச் சால்வதா நேர்ந்து
[கொண்டான்
மீயத்த னைவருள் வேந்தன்என் பான்மையால்
வாய்த்தொண் டுக்குநான் வல்லே னலாமைகண் டே.

குறிப்பு :— சால்வது - போதியது ; நேர்தல் - அங்கீகரித்தல் ; மீ அத்தன் - 'பால் நினைந்தூட்டும்' என்ற திருவாசகத்தின்படி, அடியார்க்கருள் செய்வதில் அன்னையினும் மிக்க ஆண்டவன்; பான்மையால் வல்லேனலாமை எனக் கூட்டுக ; பான்மை - இயற்கை பிரகிருதி ; வல்லேனலாமை - நான் சமர்த்தனல்லாமை; வாய் அத் தொண்டு பூர்வ ஜன்ம புண்ணியம் பெற்ற அனுக்கத் தொண்டர் சிலர்க்கே அரிதிற் கிடைக்கும் அத் தகைய (அருள்வடிவான ஆண்டவன் திருமேனித்) திருத்தொண்டு.

1413. நண்ணக் கிடைத்தகுரு *நாதனருட் பத்தியால்
வண்ணப் பரசொருப வாழ்வுவெளிப் பட்டதெனக்
கெண்ணற் கரியபே ரின்ப வியல்வடிவா
வண்ணிக்க வெண்ணிலது வண்ணிக்க லாவதன்றே.

* நாதனருட் பத்தி - நாதனருளால் அவன் மாட்டுண்டான பத்தி.

1414. கழற்க ணெழுந்தமெய்க் காதல்வெள் ளத்தா
டிழக்கலுற்ற வாற்று லெனையேநான், சிந்தை
யுழக்கும்பா ழூன வுணர்வற் றெழியச்
செழிக்க விளைந்தசிவச் சீர்மையின்மாண் பென்னே.

1415. கொள்கையொன்று மற்றவருட் கொள்கையாற் [பேரின்ப
வெள்ளவெளி யாக விளங்குசிவ பூரணத்திற்
றெள்ளியமோ னனுபவந் தேற்றியவாண் டானு [ருவென்
னுள்ளமே யாகவொளி ரொட்பநுட்பஞ் சாற்றரிதே.

குறிப்பு :— கொள்கையால் தேற்றிய என வியையும்.

1416. வினைக்கேட ஞனவருள் வித்தகன்கண் ணோக்கால்
மனக்கேத மான மயற்கலிகெட் டோடத்
தனிக்கே வலசொருபத் தன்மையொளிர் சாந்தி
முனைக்க வியற்றியவென் முற்றவந்தான் யாதே.

1417. திண்மைசேர் மோகச் செருக்கறச்செற் றுண்டபிரான்
உண்மை யுணர்வுருவா வுள்ளத் தொளிர்தலால்
வண்மைசேர் வாழ்வா மடுத்த சிவானுபவ
நுண்மையைமற் றொரு நுனித்துணர வொண்ணுதே.

1418. தளைந்தபசு பாசத் தடுமாற்றந் தீரக்
கிளர்ந்தசிவ ஞானவருட் கேள்விசே ருள்ளத்
தளைந்தவனு டடியா லாண்டவன்பா தத்தில்
விளைந்தபர மார்த்த விபூதியின்மாண் பென்னே.

1419. தடத்தநிலை யான சமாதியாற் றன்மெய்
யடித்தலத்தி லென்னை யமர்த்தினன் கண்ணோக்
கடுத்தலா லுள்ளத் தகண்டசிவச் சீர்மை
மடுத்தலுற் றேனுக்கு மற்றுநிகர் யாரே.

1420. யானெனதென் னுங்கா ரிருட்பாழ் கரந்தொழிய
மோனவொளி வீசு முகப்பொலிவா லென்னகத்திற்
றுனவிர்மெய்ஞ் ஞான தயாநிதியால் வாழ்வுசிவ
மானபெரு மாட்சி யடைந்தேனுக் கார்நிகரே.

1421. சித்திரமாத் தோன்று செகத்தினின்று சொச்சொருப
வித்தகமெய்ஞ் ஞான விழிப்பூட்டி யாண்டவன்பால்
அத்தகநிற் கின்ற வருட்சிற் பரபத்தி
மத்தனே னுள்ளத்தெவ் வாறு மடுத்ததே.

1422. சிவத்திலே வாழ்வு திளைத்தலுறு மோனத்
தவத்திலே யென்மனத்தைச் சார்வித்தான் பாதத்
தவத்தைசேர் மோக வகந்தையற் றேனுக்
கெவற்றுமொருங் கொக்க வியன்றநோக் கென்னே.

1423. பரிசுத்த மோனவருட் பார்வையால் உண்மை
யரசுற்று வாழ வருளினன் ஞானத்
துரியப் பதத்தே சொரூபானு பூதி
மருவித் திளைக்குமென் மாதவந்தா னென்னே.

1424. கரவுசேர் மோகமனக் கற்பனையைச் சாடுங்
குருவருளா லுள்ளங் குலவுசுப மோனப்
பெருவளவாழ் வான பிரம்மானு பூதி
மருவிடநான் முன்செய்த மாதவந்தா னென்னே.

1425. சிற்பரமா வுள்ளந் தெளிந்த சிவத்திலெனக்
கற்பமுமின் றுக வகந்தை யொழிந்ததாற்
பொற்பவிளங் கான்மபரி பூரணமோ னனுபவங்
கிற்பதன்று சற்றுங் கிளத்தக் கருதவுமே.

1426. இருளிற் கிடந்துழன்ற வேழைக் கிரங்கி
மருள்வழங்கு மாறுபி மானப் பிழைசெற்
றருள்வெளியா வுள்ளத் தவிர்சொருபன் மோனப்
பொருள்வளஞ்சேர் கைவல்ய பூமியின்மாண்
[பென்னே.

1427. பரந்த மனத்தாற் பதைத்த வெனக்குத்
திருந்தவே சுத்த சிவச்செம் பதத்திற்
பொருந்துந் தியானுனு பூதியா வாண்டான்
சுரந்தபே ரின்பச் சுவையின்மாண் பென்னே.

1428. அங்கலாய்த் துள்ள மழுங்கிமனக் கற்பனையில்
முங்கலாய்த் தத்தளித்த மூர்க்கவகப் பேயனேற்
கங்கமகம் புத்தி யகன்றொழிய வாண்டவனுற்
பொங்குசிவ போதவருட் பூரணத்தின்
[மாண்பென்னே.

1429. களவுற்ற மோகவகங் காரா ணவப்பாழ்
விளிவுற் றொழிய விளங்கு சொரூபம்
பளகற்ற சுத்தப் பரசிவமே யாக
அளவுற்ற மோனஞா னுபவம் மாண்பே.

1430. மூண்டமோ னுபவ முத்திப் பெருக்கமா
வாண்டவன்சீ பாதத் தடங்கலுற்றே னுக்கினி நான்
வேண்டவோ வன்றி வெறுக்கவோ யாதுமறப்
பூண்ட சொரூபவருட் பூரணவாழ் வற்புதமே.

1431. சுத்தப் பரவெளியாத் துன்று சொரூபவொளி
மித்தைசேர் மாயா விலாசப் புலவுலகிற்
சித்தக் கலக்கத் தெருமரலாற் பாழ்த் தொழிந்த
மத்தனே னுள்ளம் மடுத்ததென்ன விந்தையே.

1432. குற்றமற்ற வுண்மைக் குலாச்சேர் சொரூபமா
நிற்றலுற்ற மெய்ஞ்ஞான நிட்டையா லுள்ளத்திற்
பற்றியது சுத்தப் பரமோப சாந்தவுணர்
வெற்றே சொரூபநிலை யென்ன வியக்கவே.

1433. அரும்பெறல்வாழ் வானஞா னுபவ மோனப்
பெரும்பதங்கண் டேன்சொருபப் பெம்மான்முன்; [மீண்டுத்
திரும்புதலில் லாத சிதாகாச மாகப்
பொருத்தியபூ மாவின் பொலிவுரைக்கற் பாற்றே.

1434. கல்லாத மூர்க்கனேன் காரிருள்சே ராணவப்பாழ்ம்
பொல்லாங் கொழியப் புணர்ந்தவருட் பூரணத்தால்
எல்லாமொன் றுன வியற்சிற் பரசொருப
நல்லாங் கிதயத்து நண்ணியதென் சொல்கேனே.

1435. ஒள்ளியோ னுன வுடையான் கருணையால்
உள்ளன் பிலாதபா மூத்தையே னுக்தலகக்
கள்ளங் கலந்த கருத்திலே சுத்தவருள்
வெள்ளங் கலந்த விசித்திரமென் சொல்கேனே.

1436. அங்கமே நானென் றழுங்கலுற்ற மூடமனம்
பங்கமுறச் செற்றவருட் பார்வைசே ரங்கனென்
மங்கலவாழ் வாக மடுத்தலா லுள்ளத்திற்
பொங்குசிவ ஞானனு பூதியையென் சொல்வதே.

1437. அவாயமா மோக வகந்தைதீர் ஆன்ம
சுவானுபூ திப்பெருந் துப்பறிவால் வாழ்வே
தவாதபே ரின்பத் தவமாக வுள்ளத்
துவாமதியே போல வுறும்பரி சென்னே.

1438. தனுவா வுருத்துழல்பேய்த் தன்மைகெட வுள்ளத்
தனுபூதி யாக வடைந்த நிலைக்கண்
எனைவா தனையு மிறக்கலுற்ற வாழ்வை
இனையதென் றெவ்வா றிசைப்பதுகொல் யானே.

1439. தொண்டனே னென்றவெறுஞ் சொல்லளவல் லாது [பணித்
தொண்டுபுரி யாமலே சொந்தமட்டுங் கொண்டாடு
மிண்டனேன் வெட்கவருள் விஞ்சையா லென்னகத்து
மண்டியபே ரின்பமுத்தி வாசா மகோசரமே.

1440. மானுபி மான மனக்கலக்கம் பொய்த்தொழியத்
தானாக வுள்ள சதாசிவங்கூ றின்னருளால்,
ஞானானு பூதி நயக்கலுற்ற வென்னகத்தில்
வானு வளைத்தவருள் வாழ்வையென் னென்பதே.

குறிப்பு:—அருளால் வளைத்த என வியையும்.

## ச. அனுபவப் பெருமிதம்

(குறள்)

1441. கடவுட் பிரானென் கருத்திற் கலந்தான்
கடவதெனக் கென்ன வினி.

1442. தறையிலே நான்பெற்ற சாந்தவருட் போத
நிறைவிலே யில்லை குறைவு.

1443. மற்றொன் றிலாமல் வளைத்த வருள்வெளிவாழ்
விற்றெறன் றுரைத்த லெவன்.

1444. வெருண்டு கலங்க விதிவசமேன் உள்ளத்
திருண்டவகப் பாழ்கடந் தேன்.

1445. சுத்தசிவ மோனவருட் சோம்பலா வுள்ளமுற்ற
வித்தகவாழ் வென்வசமன் றே.

1446. சுத்தவறி வான சொருபானு பூதியெனக்
கத்தனருள் பாலித் தது.

1447. பரமனுக்கா ளாகப் படைத்த *மனத்தால்
ஒருமனித்தர்க் காளா வுறேன்.

* சிரத்தால் எனவும் பாடம்.

1448. உள்ளுணர்வா லுண்மை யுணர்ந்துகொண்
கள்ளவுணர் வென்ன செயும். [டேனைவெளிக்

1449. தன்னைநான் கண்டிலே னப்போது மற்றிப்போ
தென்னைநான் காண்கின் றிலேன்.

1450. அறிவுருவா வுள்ளத் தகமகமென் றுண்ட
விறைவனின்வே றல்லனே யான்.

1451. எளியனென்று லென்னே இதயத் திறையோ
ளொளியினு லோங்கலுற் றேன்.

1452. ஜீவன் சிவமாச் சிறக்க வொளிர்சொருப
வாழ்வின் மதர்த்தலுற் றேன்.

1453. அருள்வெளியா மென்னை அசத்தான மோக
விருள்வா சனையென் செயும்.

1454. குருபிரான் மோனக் குலாவாலே சாந்தி
மருவலால் வாழ்ந்தேன் மதர்த்து.

1455. உரித்தாக வுள்ள உடையான் சொருபப்
பெருக்காற் பெருமிதமுற் றேன்.

1456. சிக்கெனவென் னுள்ளஞ் சிறக்க விளங்குசிவச்
சொக்க னுருவே சுகம்.

1457. மோனமா வுள்ளத்து மூண்டசொரு பானுபவ
ஞானவாழ் வுண்டே நமக்கு.

(வெண்பா)

1458. அம்மானுக் காளா யடித்தொண்டு பட்டதால்
இம்மா நிலத்தின் றிருமாந்தேன்—எம்மா
நிலத்துமினி யாங்கே நிறைவொளிசே ரின்ப
நலத்துருவா நானுயிர்ப் பேன்.

1459. அருட்பெருவாழ் வாகவெனக் கான்ற சொரூப
குருப்பதமா மோனக் குலாவால்—இருப்புணர்வா
வெங்கும் பரந்தெழுமவ் வின்பப் பரவெளியிற்
சிங்கமாச் சஞ்சரிக்கின் றேன்.

குறிப்பு:—அவ்வின்பப் பரவெளி யெனச் சுட்டியது அதுவே குருப்பதவுரு வாதலால் என்க.

1460. என்னதியா னற்றபே ரின்பவருட் சிற்பரவாழ்
வென்னத் துலங்க விதயத்தே—நன்னயமார்
மோன சொரூபமா மூண்டபரந் தாமவெளி
நானடையப் பெற்ற நலன்.

1461. வானவருட் சேர்ந்துமகிழ் வாழ்க்கையிலே வேட்கை யிலேன்
மானவருக் கானசிறு வாழ்வுமற்றென்—மோனவருட்
போதனையா லென்சொருபம் பொங்குவித்த ஞானகுரு
நாதனியல் வாழ்வுவந்த நான்.

1462. யானிமையா தேகண் டிருக்கின்றே னென்னகத்துத்
தானேதா னாகத் தழைத்தலால்—யானிறந்து
மோனமுற வென்னை முயங்கியசிந் மூர்த்தியொளி
யானிமைக்க வொட்டுமோ தான்.

1463. முடிவிலாப் பேரின்ப முத்திநலம் பெற்றேன்
படியி லொருவரைப்பின் பற்றேன்—அடியனேன்
சென்னிக் கணியாச் சிறந்த வருட்பாத
மன்னற் களித்தேன் மனம்.

1464. முகத்துதிமற் றோரை மொழித லெதற்கோ
இகத்தெனைவந் தாண்ட விறைவன்—சுகத்தியல்பா
மோன சொருப முகப்பதாய் வாழவருள்
வானரசு வைத்தான் மனத்து.

1465. தறையிலே யென்னைத் தடுத்தாண்ட தெய்வ
நிறைவிலே நெஞ்ச நிகழ்வால்—கறைசேர்
மருட்செல்வ மொன்று மதிக்கிலே னென்ற
வருட்செல்வ மல்லா லகத்து.

1466. மாநட்ட மாடி மகிழ்வேனே யாங்காரப்
பேர்நட்ட மாக்கியவெம் பெம்மாற்கே—மாநிட்டை
சற்று மறுத சகஜந் திளைத்தலால்
அற்றமற நானவனே யாய்.

1467. மதகளிறு போல மதர்த்துமெய்ஞ் ஞானப்
பதவொளியில் வீறு படைத்தேன்—மதகளிறுப்
பொங்கு சொரூபானு பூதியருட் பூரணமாத்
தங்கியது சாந்தி தழைத்து.

1468. பவரணமின் றுகப் பசுபாசம் பாற்றி
யவிரொளியா வென்சொருப மானன்—சிவரமணக்
கோமா னருட்பதத்திற் குற்றேவல் பூண்டநான்
ஆமா றிலேனொருவர்க் காள்.

1469. பொலிவுற்ற போதவருட் புண்ணியன்பொற் பாதத்
துலேவற்ற சாந்தி யுணர்வே—நலிவற்ற
பூரணவாழ் வாகப் பொருந்திடமெய்ஞ் ஞானவருள்
வாரணமூர் மாட்சிபெற் றேன்.

1470. தெட்டித் திளைக்கத் திருவருள் செய்தபெருங்
கெட்டிப் பெருமான் கிழமையால்—எட்டுத்
திசையுங் கிளர்சச் சிதானந்த மோன
விசயஞ்சேர் வீறுபெற் றேன்.

1471. சாரமா வுள்ளவருட் சைதன் னியசொருப
வாரமா மோன வழிபாடு—சேரமனத்
தென்றுமொரே தாரையா வின்பமகிழ் பொங்குமியல்
வென்றியிலே வீறுபெற் றேன்.

1472. துன்னலரி தான சொரூபநிலை யென்னகத்து
மன்னலியல் பாகவருள் வல்லபமே—நன்னயஞ்சே
ரவ்வருட்பே றுனசொரூ பானுபவத் திட்பத்தால்
எவ்வெதற்கு மஞ்சே னிடைந்து.

1473. துணையா வெனக்குட் சுடர்சொருபன் பாதப்
பணியாள னுகப் பயில்வேற்—கணையாக
மோனனு பூதியரண் முற்றலாற் காலனுக்கும்
யானுவி யுட்கலில் லேன்.

1474. கற்றுத் தொழுது கரணமொரு மூன்றாலும்
பற்றிப் பரவிமிகப் பாட்டிசைத்து—முற்ற
வதிரா வடிகளா வாண்டவனைப் பெற்றேற்
கெதிராவார் யாரே யுளர்.

(கொச்சகக் கலிப்பா)

1475. ஆண்டகுரு நாத னருளான மெய்யுணர்வால்
மாண்டதுபொய்ம் மானுபி மான மயலுணர்வு
காண்டலரு சற்கதியாங் கைவல்ய மோனநிலை
ஈண்டடைவுற் றேனுக் கினியென்ன வேண்டுவதே.

1476. நாடகக்கூத் தாக நடித்தவடித் தொண்டனே
னூடகத்தே மெய்யன் பொளிபெருக்கி ஞானவருட்
பீடடையக் கண்ட பிரானடிக்கீழ் மோதவியல்
வீடலரக் கண்டுகொண்டேன் வேறென்ன
[வேண்டுவதே.

1477. இருத்தியதா லென்னை யிதயத்திற் போத
குருத்துவமாந் தன்சொருபங் கூட்டியே உண்மைத்
திருத்தியளித் தாண்டவருட் செம்மலுக்கே யாகக்
கருத்துமுற்றத் தீர்ந்ததெனிற் கற்பதுநான் யாதே.

1478. சிற்கனமா வுள்ளசிவ பூரணத்திற் புத்திகொண்டு
கற்தறநான் யாதொன்றுங் காணேன் எதன்
[முன்னர்ப்
புற்கெனமற் றெல்லாமே பொய்த்திடும்அவ் வத்துவிதத்
தற்குறியா வென்னறிவு தான்கெட் டதனுலே.

1479. கண்டேன்கண் டேன்கண்டேன் கண்ணார்
[கழல்விளக்கம் ;
உண்டேனுண் டேனுண்டேன் உண்ணு ரமுத
[மகிழ் ;
விண்டேன்விண் டேன்விண்டேன் வெய்ய மனத்
[தாபம் ;
கொண்டேன்கொண் டேன்கொண்டேன் கோமான்
[சொரூபமே.

1480. பாழி லுழந்து படாமலெம்மை யாண்டவன்றாள்
வாழியென வாழ்த்தலே வாழ்வா வளம்படைத்
ஊழி யுலந்து முலப்பில்பே ரின்பவருட் [தோம்
கேழொளியா லுள்ளங் கிளர்தலுறப் பெற்றேமே.

1481. ஏரி நிறைந்தபே ரின்பவாழ் வானபெரு
வாரியாங் கண்ணேக்கால் மன்னுயிர்க்கோர் நன்
[னிதியான்
கூரியான் பெய்தவருட் கொள்ளையா லெண்ணகத்திற
கோரியமுற் கோரிக்கை யெல்லாங்கை கூடியதே.

1482. அற்றமா மோக வடியேற்கு மெய்ஞ்ஞான
வெற்றிப் பிரான்முன் விளங்கியவென் மெய்யிலகப்
பற்றறற் றெழிதலாற் பார வருள்வெளியா
றிற்றலுற்ற நெஞ்சு நிராமயமாப் பொங்கியதே.

1483. எம்பெரு மானுக் கியல்வடிவா வுள்ளவறி
வம்பரமே யென்போ லடியார்க் கனந்தநிதி ;
செம்பரமா வுள்ளசிவச் சிற்பரவாழ் வார்ந்தோமுக்
கிம்பரும்ப ரெல்லாம்பே ரின்பமய நன்பரமே.

1484. எளியேனை யாண்ட விறைவன் சொரூப
வொளியா லெனைத்தன் னடிக்கீ ழுடையான் ;
அளியே னலேன்யான் அகந்தை மயக்கக்
களிதீ ருபசாந்தக் கைவல்யத் தேனே.

1485. எண்ணவொண் ணுதபே ரின்பப் பரசொருப
வண்ணந் தெளிந்தவருள் வாழ்வளித் தானடியில்,
பண்ணவொண் ணுதபெரும் பாரத் தவமியல்பா
நண்ணவகத் தெய்தியது நல்லசிவ பாக்கியமே.

1486. சும்மா விருக்கவோர் சூத்திரங்கற் பித்தாண்ட
பெம்மா னருளாற் பிறங்கவுற்ற மோனத்திற்
பொய்ம்மா லகந்தைப் புணர்ப்பற் றொழிதலாற்
செம்மாந் தியன்றேன் சிவசொருபச் செம்பதத்தே.

1487. ஈடிலா வீசனுக் காட்பட் டெளியனேன்
கூடியமெஞ் ஞானக் குலாவா விதயத்து
நீடும் பரமசுப நிஷ்டானு பூதிநிலைப்
பீடும் பெருமையுமென் னூற்பேச வொண்ணாதே.

1488. உரசிநான் மோக வுலகரொடு கூடேன்;
பரசினேன் றன்னைப் பரிவறக்கண் ணேக்கிப்
பரசிவமா மோனவருட் பார்ப்பான்மெஞ் ஞான
வரசுவா வாக வருளப்பெற் றேனே.

1489. ஆத்தன் மலர்ப்பதத்துக் காராமெய்க் காதலா
சோத்தம் பிரானென்று சொல்லிச்சொல்
[லித்துதித்தே
கோத்தும்பி யாகக் குடைந்துகுடைந் தாடிமகிழ்
வாய்த்தலால் வாழ்வு வசீகரமாண் புற்றதே.

1490. கள்ளமனக் கற்பனைதீர் கைவல்ய வுண்மையா
வுள்ளுணர்விற் கண்டே னுடையான் பரவடிவை;
உள்ளுவகை பொங்க வுவாக்கடல்போற் பேரின்ப
வெள்ளவருள் வாழ்வா விளைந்ததனு பூதியே.

1491. ஆணவவே கங்கெடுத்த வாண்டா னருட்சத்திக்
கூணமா வுற்ற வுணர்வூ டொளிவெளியா
மாணக் கிளர்சொருப மாட்சியாற் றென்றுதொட்ட
வேணவா வானவருள் வேட்கை நிரம்பியதே.

1492. வேண்டுவதின் றாக விளங்கு சிவத்நிலைக்
கீண்டியபே ரின்ப வியல்வாழ்வா லெக்களித்தேன்,
ஆண்டகுரு நாத னருட்சத்திக் கூணாக
மாண்டொழிந்த மோக மதோன்மத்தப் பேயேனே.

1493. சற்குருவா வாண்ட சதாசிவன்சீ பாதவருட்
சிற்குணமோ ஞனுபவச் சீர்மையுளம் பற்றலாற்
கற்கவோ கேட்கவோ யாதுங் கடவதின்ரு
நிற்கலுற்ற வாழ்வு நிரதிசயா னந்தமே.

1494. தன்னை யடைந்த ததியருக்கென் றென்றுமோ
ரின்னலின் ருக விதயத் தொளிர்சொருபன்
பொன்னடியில் வாழ்வு பொருத்தலாற் பூமாவா
மன்னியமோ ஞனுபவ மாட்சிமனே தீதமே.

1495. என்னதுநா னற்ற வியல்வாழ்வே சற்றேனும்
பின்னமற்ற முற்றமுழுப் பேரின்ப முத்திநிலை;
துன்னருமெய்ஞ் ஞான சொருபானு பூதியா
மன்னியவவ் வாழ்வால் மதர்த்தலுற்ற துள்ளமே.

1496. என்னதியான் முற்ற விகத்தலே மெய்ப்பேருத்
தன்னடிக்கீ ழுண்மை சதிர்த்தேன் சொருபசிவ
சன்னிதியா வெங்குந் தழைத்தொளிர்ஞா ஞனுபவ
வன்னவியல் வாழ்வு மனங்கடந்த மாட்சித்தே.

குறிப்பு:—சதிர்த்தேனுடைய வாழ்வு என வியையும்.

1497. துன்னு சொருப சுவானுபவம் பொங்கவெனக்
கென்னுண்மை யாக விதயத் தெழுந்தருளி
மன்னும் பரமசுப மாட்சிசே ராண்டவன்பாற்
பின்னமற்ற மோனப் பெருமிதஞ்சார் வுற்றேனே.

1498. ஆமாறு தன்னை யடைக்கலமாப் புக்கேனைக்
கோமா னினிதேற்றுக் கோதாட்டி யாட்கொண்
[டான்;
சீமான் பதத்திலருட் சேமநிலை சேர்தலால்
ஏமாறேன் கற்பனையில் யானெனதென் றேங்கியே.

1499. பிரானடிக்கா ளாகப் பிறந்தேன், பிரானு
லொரானொருபே ருண்மை யுணர்ந்தேன், உளத்திற்
பரானுபவ மோனம் படைத்தேன், படைத்தாங்
கிராசரா சப்பெருவாழ் வெய்திற் றினிதே.

1500. காண்டலரு மோனவருட் கண்ணு ரமுதமா
வாண்டவன்பே ரின்ப வருள்வெளியாப் பொங்க
[லால்
வேண்டவென் னுருயிர்க்கு வேறென்றின் றுகவுளத்
தீண்டியபே ராசைக் கெழுகடலும் பற்றுதே.

1501. ஊனக்கூத் தோய வுளத்தே சொரூபமெய்ஞ்
ஞானக்கூத் தாடு நடப்பிரான் பாதத்தில்
யானெக்கா லுங்களிகூ ரெக்களிப்பால் வாழ்
ஏனைக்கா மங்க ளிகப்பச் சுவையற்றே. [கின்றேன்

1502. நினைக்கலரும் கேவலமெய்ஞ் ஞேயநிலை யாக
எனக்குக் கிடைத்தபே ரின்பவியற் போதி
உனற்கருமோ கப்பா லொழிந்தமையாற் பொய்ந்
[நான்
முனைக்கவொணு மோன முழுமுதல்வாழ் வாமே.

1503. கட்டற்ற வுண்மைக் கடவுட் பரபத்திப்
பெட்புற்ற சித்தத்திற் பேசாத மோனமுண்டாய்ச்
சுட்டற் றொளிர்சொருபத் தூங்கஞா னுனுபவம்
மட்டற்ற வாழ்வா மலர்ந்திதயம் பொங்குமே.

1504. பெருமா னருளிற் பிறந்து வளர்ந்தேன்
பெருமா னருளிலகப் பேய்முனைப்பற் றேய்ந்தேன்
பெருமா னருளே சொரூபமாப் பெற்றேன்
பெருமாண் பிரம்மபதப் பெற்றியடைந் தேனே.

1505. அம்மையையுங் கண்டேன்அவ் வம்மையா
[லப்பனையுஞ்
செம்மையாக் கண்டேன் சிறக்க வொருமிக்க
அம்மையப்பர் தம்மில்வே றல்லாப் பரமார்த்தச்
செம்மைசேர் காட்சியிற்சே யேனுமொன் றுச்
[சேர்ந்தேனே.

1506. தாயருக்கெல் லாமுயர்மெய்த் தாயாத் திகழ்
[சிவைதன்
நேயமுற்ற பிள்ளையாய் நெஞ்சங் குதுகலிக்கப்
பாச மயக்கப் படர்தீ ரருள்வெளியே
வாசமாய் மோனவியல் வாழ்வலரப் பெற்றேனே.

1507. போக்குவரத் தில்லை புணர்ப்பான மோகமனத்
தூக்கவிழிப் பில்லை சுபாசுபமும் சற்றுமில்லை
வாக்குமன மில்லை மறப்பு நினைப்புமில்லை
* யாக்கைவீ டற்றவென் னுண்மை யியல்பிலே.

*யாக்கைவீடு - பந்தமோக்ஷம்.

1508. அறிவாக வுள்ளசுத் தான்ம சொரூப
நிறைவிலே யில்லை நினைப்பென் றறிந்தேன்
செறிவான சுத்த சிவக்கடலாச் சிந்தை
யிறவாலே ஞாயிறெனக் கெங்கு கழுந்தா லென்னே.

1509. யானென்ற பொய்ம்மா விதயத் திகந்தொழிய
வானந்த மோன வருட்சிற் பரத்திலெனக்
கூனந் தவிர்சொரூப வுண்மை வெளிப்படலால்
வானந் துளங்கிலென்னே மண்கம்ப மாகிலென்னே.

1510. கற்பனை தீரக் கருத்திற் கலந்தவருட்
சிற்பர மான சிவானுபவ மோனத்தில்
தற்பர மான சதாமுத்தி கண்டுகொண்டேன்
அற்புதவாழ் வியான்பெற்ற தார்பெறுவா
[ரச்சோவே.

1511. பொருந்து சொரூபசற் போதவருட் கண்ணு
திருந்த வறிந்தேன் சிவசொருபத் தன்மை
கருந்தமமா மூடக் கலக்கமின் றாக
இருந்துவிளங் குண்மை யியல் என்றென்ன லாமே.

1512. புலைப்படுதே கோகப் புணர்ப்பால் உலக
வலைப்பட் டொழிந்தவென் பந்தமனத் தூடு
தலைப்படவொண் ணாத சதாசார நிஷ்டை
நிலைப்படவுண் டான நிறைதவந்தான் யாதே.

1513. அன்றன் றெனச்சொல்வ தல்லால் இதுவேதான்
என்றென் றிசைக்கவொண் ணாதெல்லா முளத்து
[மொப்பத்
துன்றும் பரசொருப சுத்த வருள்வெளியில்
மன்ற விளங்கியவென் மாட்சி மகத்தாமே.

1514. நீடும் பரயோக நிட்டையிலே நெஞ்சியல்பாக்
கூடும் படியென்னுட் கூர்த்த சொருபவியல்
பாடும் பரமசிவ பாக்கியம்பெற் றேனுக்குப்
பீடும் பெருமையுமாப் பெற்றுவக்க யாதுளதே.

1515. அழுங்கிப் புழுங்குங்கா ராணவப்பேய் மாள
விழுங்கிப் பரமா விளங்கு சொருபத்
தெழுங்களியா லெக்களிக்கின் றேனிதயம் பொங்க
வழங்குமன்றோ நீதசிவ மாண்புசொலற் பாற்றே.

1516. அறிந்தே னறிந்தே னறிவான வுண்மை
எறிந்தே னெறிந்தே னிகல்சே ரகந்தை
செறிந்தேன் செறிந்தேன் சிவச்சிற் பதத்திற்
சிறந்தேன் சிறந்தேன் சிவானுபவ வாழ்வே.

1517. கல்விக் கலையாதுங் கல்லேன் பரமார்த்தச்
செல்வத் திருவருளாற் செம்மாக்க வாழ்கின்றேன்;
சொல்லைக் கடந்த சூரியப் பரவொளியால்
அல்லற் றொழிய வகங்கிளர்ந்த வாற்றலே.

1518. அன்பா வமுத வுணர்வா வவிர்சொருப
நன்பான மோனமெய்ஞ் ஞானனு பூதியையென்
னென்பேன் இதயத் தியற்பரவாழ் வானபே
ரின்பாக வென்னிலெங் கெங்கும் வளைத்ததே.

1519. பரவெளியா வுள்ளவியற் பான்மை சொருப
வுரவொளியா மோன வுணர்வாற் படைத்தேன்;
வெருவரல்சே ராவவ் விழுப்பதச்சீ ராட்சித்
திருவுறலாற் சிந்தையறச் செம்மாக்கின் றேனே.

1520. ஆக்கக்கே டற்ற வருள்வெளியாப் பொங்குபர
மோக்க வுணர்வு முகத்தலா லுள்ளத்திற்
சூக்கமாத் தோன்று சொருபானு பூதியாத்
தேக்கலுற்ற வாழ்வின் சிறப்புரைக்கற் பாற்றன்றே.

1521. இதுவதுவென் றெண்ண வெதுவுமல்லா மோனப்
பொதுவெளியே சுத்தவருட் பூரணவாழ் வாகக்
கதுவலுற்ற வுள்ளுணர்விற் கைவல்யங் கண்டேன்
மதுவுண்ட வண்டா மதர்த்தலுற் றேனே.

1522. கன்றலுற்ற நானெனும்பொய்க் காழ்ப்பற்றுத் [தான்பரமா
வொன்றலுற்ற மோன வுணர்வா லுபசாந்தி
துன்றலுற்ற வுள்ளம் துரியப் பரவெளியா
மன்றவியல் வாழ்வு மனங்கடந்த பாட்சித்தே.

1523. வெளியாக வென்னுள் விளங்கு சிவத்திற்
களிசே ரகந்தைமனக் கட்டற் றெழுந்தேன்;
இளிவரல்சே ராத வியற்பரமா வுள்ளத்
தெளிபெறவாழ் கின்றேனுக் கூனமொன்று மின்றே.

## ௫. ஆனந்த பரவசம்

(வெண்பா)

1524. பரத்தையே நம்பிப் பரத்தையே யெண்ணிப்
பரத்துக்கே நானடிமைப் பட்டேன்—பரத்தையே
பாடிப்பா ராட்டிப் பரமே சொரூபமாக்
கூடிக்கூத் தாடுகின் றேன்.

1525. குருவருட் பார்வையாற் கூடிற் றெனக்குத்
தெருமரலற் றோங்குசுபச் சீர்மை—வெருவரல் போக்
காண்டவன்மெய்ஞ் ஞான வருட்பதவாழ் வுற்று
தாண்டவஞ்செய் கின்றேன் சதா. [மகிழ்த்

# 25. ஆன்மானுபூதி

## க. ஆன்மானுபூதி

(வெண்பா)

1526. போத வருட்பரத்திற் பூண்டமெய் யன்பாலே
ஏதமில்பே ரின்பவுணர் வென்னுயிர்க்கு—மேதகுஆ
ஞன்மானு பூதியா வார்ந்ததுகாண் பொய்ம்மயல்போ
யான்மவுரு வான வகத்து.

## உ. ஆன்ம போதம்

(வெண்பா)

1527. அறிந்தே னருள்கொண் டகந்தையறத் தன்னுட்
செறிந்தேன் சிவசொருபந் தேர்ந்தேன்—மறந்தேனும்
பொய்யா மகந்தையிற் புத்தி கலங்குறு
மெய்யான்ம போதம் விளைந்து.

## ௩. ஆன்ம சொருப காட்சி

(குறள்)

1528. ஆரமுத வாழ்வேசுத் தான்ம சொரூபமாத்
தேரலுற்றேன் சித்தந் தெளிந்து.

## ச. ஆன்ம சொருபமானான்

(குறள்)

1529. ஆன்ம சொரூப வரசளித்த வாண்டவனென்
னான்ம சொரூபமா னான்.

## ரு. ஆன்ம சாட்சாற்காரம்

(குறள்)

1530. யானாக வென்னை யிலக்கியவ் வேகான்
*தானாக வுள்ளதுமெய்த் தான்.

*தான்—சாரியை

## சு. ஆன்மசித்தியால் அஷ்டசித்தியற்றது

(வெண்பா)

1531. முத்தி சொரூபமா மூண்டஞா னானுபவ
சித்தியா லட்டமா சித்திகளும்—சித்திரமா
மின்னுமன்றோ மாயா விலாசமே யாகவொளி
மன்னுவதென் கைவல்ய மாண்பு.

## 26. விசாரமும் பயனும்

(வெண்பா)

1532. உள்ளலற வுள்ளு முசாத்திறத்தா லென்னகத்திற்
கள்ளமற வாண்டான் கருணையால்—தெள்ளியமெய்
வாலறிவாந் தன்சொருப வாய்ப்பா லகன்றதுபன்
னூலறிவு பற்றியவென் னோக்கு.

1533. உசாவியே யுண்மை யுணர்ந்தநா னல்லேன்
அசாவயர்தி மிக்க வடியேன்—உசாவா
லுறும்பயனை யாண்டா னுதவினு னென்மாட்
டுறுங்கருணை யாலே யுவந்து.

1534. ஞானத்தா லுள்ளத்து நல்கினுன் யோகமெனக்
கூனமயற் பேத மொழியவே—நானெனுந்தா
னுரென் றுசாவி யகந்தையருட் சிற்பதத்திற்
சேரலுற்ற தொன்றுச் செழித்து.

(கொச்சகக் கலிப்பா)

1535. ஆண்டபரஞ் சோதி யடிகளா லென்னகத்து
மூண்ட விசார முனைப்பின் பயனாகக்
காண்டலுற்ற சுத்தவருட் கைவல் லியசொருபத்
தீண்டலற மாண்டதுநா னென்னுமகப் பேய்மயலே.

1536. உடையா னுசாவால் உழையே னுளத்தைக்
கடைவால் விளங்கியதென் கண்ணுன வுண்மை;
தடையாது மற்றபரந் தாமமா லென்னுட்
சுடரா நிற் கின்றான் சொருபப் பிரானே.

## 27. பெற்ற பேறு

### க. அடியேனை ஆண்டான்

(வெண்பா)

1537. எண்ணில் பிறவி யெடுத்தநா னிப்போது
நண்ணியது பற்றி நடுங்கினேன்—மண்ணில்
அவமா வொழியா தடியேனை யாண்டான்
சிவசொருப மாந்தே சிகன்.

## ௯. உபசாந்தியுறல்

(குறள்)

1538. ஒருதற் பரமா வொளிற்சிற் பதத்து
மருவிற் றுபசாந்த வாழ்வு.

1539. பரதத் துவசொருபப் பார்வையா லுள்ளம்
மருவிற் றுபசாந்த வாழ்வு.

1540. தெளிந்த வுபசாந்தச் சீர்மையே யுள்ளத்
தளைந்தபே ரின்ப வருள்.

1541. மிக்கசிவ ஞான விபூதியா லுள்ளத்துத்
தொக்கதுப சாந்த சுகம்.

1542. வெளியா விளங்கு விசுத்தசிவத் தன்மை
யளைவா லமைந்த தறிவு.

1543. தெளிந்தசிவ ஞானத் திறத்தால் இதயத்
தளைந்தது சாந்தக் கடல்.

1544. ஒட்பநுட்ப மாக வுளம்பொங் குபசாந்தப்
பெட்புணர்வே பெற்றவருட் பேறு.

(வெண்பா)

1545. இருள்சே ரிருவினையால் யாப்புண் டிடர்ப்பட்
டருளே சரணு வடைந்தேன்—அருளாற்
களங்கமற வென்னுருவாக் கண்டு கொண்டே
விளங்குமுப சாந்த வெளி. [னென்னுள்

1546. தொல்லியல்பா மோனத் துரியவுப சாந்தி
புல்லியது போதவருட் பூரணத்தே—இல்லை
இதுவென் றதுவென் றெழுச்சிக்கு மோனப்
பொதுவன்றி மற்றோர் பொருள்.

1547. அருட்பார்வை யாலே யகண்ட சொரூபத்
திருப்பாத வுண்மை தெளிந்தேன்—விருப்பார
வுள்ளங் கிளர்மெய் யுபசாந்தி யானமகிழ்
வெள்ளங் கலந்த துயிர்க்கு.

1548. * பாதக் கருத்தாற் பளிச்சிட் டொளிர்கின்ற
போத சொரூபவருட் பூரணத்தில்—வேத
முடிபான வுண்மையா மோனநிலை கூடி
யடியே னமைதியுற் றேன்.

* பாதக் கருத்து - திருவடித் தியானம்.

1549. துப்பற் றெழுந்தவுயிர் துப்பறிவு சேரவுளத்
தொப்பற் றொளிர்சொருப வுண்மையால்—எப்பற்றும்
பற்று வொளிவெளியே பற்றாக நானமைதி
யுற்றே னுறுதியுற் றேன்.

1550. அறிவாலே தன்னையடைந் தன்புமயம் பொங்கச்
செறிவாலே சாந்தி திளைத்தேன்—குறியாகச்
சுட்டிலே னென்றைநான் சொந்த சொரூபமே
மட்டிலா தாரும் மனத்து.

1551. அறிவிற் றெளிந்த வமைதிசேர் மோன
நிறைவிற் றிளைக்குமென் னெஞ்சில்—பிறவற்
றுறவா லடைய வுறுவதொரு பேறு
சிறுதேனுந் தேர்கின் றிலேன்.

(கொச்சகக் கலிப்பா)

1552. ஏறுற் றுடலி லெழுந்தவகப் பேய்முனைப்பால்
வேறுற்ற மாயா விலாச விகற்பமறத்
தேறத் தெளிந்த சிவானுபவச் சீர்மையா
லூறிற் றுபசாந்தி யுள்ளமெழப் பொங்கவே.

1553. உள்ளமே யாக வுளத்தி லொளிர்சொரூபத்
தெள்ளமுத வாழ்வே சிவானந்த போகமெனக்
கள்ளமதே வெகக் கடுப்பற்ற வொட்பநுட்ப
வுள்ளுணர்வு தானு வுபசாந்தி யுற்றதே.

1554. சுத்தவறி வான சொரூபத் துலக்கத்திற்
பொய்த்திட நா னென்னுமனப் புன்கலக்கப்
[பேய்ச்சரிவை,
எத்தனைத்தைச் சாடி யிதயத் துபசாந்தப்
புத்தமுத வாழ்வியல்பாய்ப் பொங்கிப் பொலிந்ததே.

1555. கள்ளக் கலக்கமறக் காணும் குருபரனை
நள்ளவுற்றே னுத்தமெய்ஞ் ஞானானு பூதியாத்
தெள்ளத் தெளியத் திளைக்கவுளத் தூறியது
வெள்ளவெளி யாக விளங்குரூப சாந்தியே.

1556. கள்ள மயக்கக் கறைச்சேர விச்சையினின்
றுள்ளியனை யென்னை யுணர்த்திய நல் லாண்டவனே
டுள்ளமொன் றுக வொருப்பட் டொழுகலால்
வெள்ளவருள் வாழ்வா விளைந்ததுப சாந்தியே.

1557. எங்கும் பரந்தபே ரின்பவெளிச் செம்பதத்துக்
கங்கண் முதல்வனை வாதிக்கம் பெற்றதால்
மங்கலவாழ் வாக மடுத்ததென் னுள்ளுணர்விற்
மங்கமிலாத் துங்கப் பரமோப சாந்தியே.

1558. கர்த்தத் துவவகங் காரமுனைப் புக்கிடமில்
சுத்தப் பதமாத் துலங்கலுற்ற வுள்ளத்தில்
மத்தக் கலக்க மனேவியா பாரமறச்
செத்தொழிய வுற்றதருட் சித்தோப சாந்தியே.

1559. வானுக வைகுபர மாட்சிசேர் மோனநிலை
மானுபி மான மயக்கமறத் தீர்சொருப
ஞானானு பூதியா நண்ணலுற்றே னுள்ளத்திற்
றனேதா னுகத் தழைத்ததுப சாந்தியே.

1560. உள்ளதோ ருண்மையென் னுள்ளமே யாகமனக்
கள்ளமற்ற மோனங் கலத்தலுற்றே னுள்ளுணர்வில்
வெள்ளவருள் வாழ்வா விளங்கு சுவானுபவத்
தெள்ளமுத நீர்மைத்தென் சித்தோப சாந்தியே.

1561. கண்மயலா மாயை கழன்றொழியக் கைவல்ய
வுண்மையா வுள்ளத் தொளிர்சொருபச் சிற்பதத்தில்
வண்மைசேர் வாழ்வு வசீகரமாப் பொங்குமமுத்
தண்மதியே யாகத் தழைத்ததுப சாந்தியே.

1562. அத்துவித மான வருட்சிற் பதத்திலறச்
செத்தொழிந்த வாற்றுற் செகமயக்கந் தீர்ந்தொழிய
நித்தசித்த மாக நிகழ்சொரூ பானுபவ
மெய்த்தகவு வீடா விளைந்ததுப சாந்தியே.

1563. நானற் றெளிர்சொருப ஞானனு பூதியால்
ஏனைப் பிறநலங்க ளெல்லாஞ் சுவையொழிய
மோனப் பரமார்த்த முத்திப் பதத்திலெனக்
கூனமறப் பொங்கிற் றுபசாந்த போகமே.

1564. ஏன்றுகொண் டாண்ட விறைவனடித் தொண்டரோ
டான்றசிவ போத வருட்கடல்வா யாடிநான்
மான்ற மலாணவப்பாழ் மாசு கழியினேற்
கூன்றியதென் னுள்ளத் துபசாந்த போகமே.

1565. பொய்ம்மா லகன்றொளிர்சிற் பூரணமோ னனுபவம்
பெம்மான் சொரூபவருட் பேறு வினிதடைவால்,
எம்மா நிலத்துமினி யெய்தக் கடவதின்றிச்
சும்மா விருக்கலுற்றேன் சுத்தவருட் சிற்பதத்தே.

1566. மன்ற வகத்தியல்பா மன்னும் பரசொருபத்
தொன்றலுற்ற மோன வுணர்வா முபசாந்தி
துன்றவா வுள்ளமே சுத்தவருட் பாற்கடலா
என்றனியல் கண்டாங் கிகந்ததுமா யக் கனவே.

குறிப்பு :—மாயக் கனவு - அகம்புறம், இருவினை, இறல் ஜன்மம், இன்பு துன்பு, இருளொளி என்றுற் போன்ற மாயா விலாசமான மயக்க வியல்.

1567. ஏன்றகுரு மூர்த்தி யியற்சிற் பதத்திலெனக்
கான்ற சொரூபஞா னனுபூ தித்திறத்தால்
மான்ற வகந்தை மனக்கற் பனைமடிய
வூன்றியது வாழ்வா வுபசாந்த வுண்மையே.

1568. பிரிய வொளுதவியற் பெற்றியாத் தன்மெய்த்
துரிய சொரூபந் துலங்கலா வுள்ளத்
தரிய பரமா வனுபூதி யார்ந்தேன்;
விரிய மலர்ந்த விபூதியின்மாண் பென்னே.

1569. சிவமாக வென்மெய் திகழ்வால் மனப்புன்
கவல்சே ரகந்தைக் கலக்கங் கழன்றேன்;
விவசாய மில்லா விசிராந்தி யுற்றேன்
அவசான மற்ற வருட்சிற் பரத்தே.

குறிப்பு :—விவசாயம் - தொழில், முயற்சி; அவசானம் - முடிவு, எல்லை.

## ங. என் பேறு

(வெண்பா)

1570. பிறவனைத்துந் தன்மயமாய் பேணலுற்ற சுத்த
வறிவுண்மை யேமெய் யகமாய்ப்—பிறிவிலா
மோனவொளி விசு முகம்பொலிந்து நானொருமெய்ஞ்
ஞானரவி யா நடக்கின் றேன்.

1571. பொலிவிலே வாழ்வு பொருந்தினேன் பாத
நிலையிலே நெஞ்சமுழந்தி நின்றேன்—கலையிலே
சென்ற கருத்தகன்றேன் சித்தோப சாந்தவருள்
வென்றியிலே வீறுபடைத் தேன்.

1572. மானங் கழன்றேன் மதிகழன்றேன் கட்டுவிட்டு
வானங்க மாக மனமலர்ந்தேன்—மோனங்
கிளர்ந்தேன் சொருபவருட் கேவலங்கை கூடி
யளைந்தே னமுதத் துவம்.

## ச. நானடைந்த நலன்

(வெண்பா)

1573. துன்பவெள் ளத்தினின்று கைகொடுத்துத் [தூக்கிப்பே ப
ரின்பவெள் ளத்திலென்னை யிட்டபெம்மான்— [அன்புணர்ச்சி
யேன்மேல் வளர்சொருப விஞ்சைசேர் பாதபத்தி
நான்மே வியமெய்ந் நலன்.

1574. நாய்க்குப் பதமளித்த நாயகன்பின் னன்றியிந்
நாய்க்கடையேன் யாரையும்பின் னண்ணுகிலேன்— [நாய்க்கடையேற்
காண்டா னளித்த வருட்சிறப்பு வேறொன்றும்
வேண்டநா னோரா வெளி.

1575. புத்திக் கொளியான போதமா வென்னுளத்து
நித்தசித்த மான நிகழ்ச்சியால்—அத்தமியா
மோனப் பதமே முடிந்தவருட் செம்பதமா
நானடையப் பெற்ற நலன்.

1576. மன்னும் பரமார்த்த மாட்சிசேர் பாதவொளி
என்னுருவே யாக விதயத்தே—துன்னலுறக்
கண்டகுரு நாதனருட் கண்ணூர் கழலேநான்
கண்டசிவ ஞான கதி.

1577. மோனமே ஞான முதுமொழியா வென்னுளத்தூ
டூனமில்பே ருண்மை யுணர்த்தினான்—மோனவொளி
யார்ந்தகுரு மூர்த்தி யருட்பதமே யென்னறிவு
தேர்ந்தடைய லுற்ற திரு.

இ. ஐக்கிய மளித்தான்

(குறள்)

1578. அறிக்கையிட வொன்றுமின்றி யைக்கியமா மோனக்
குறிக்கணுறை வித்தான் குரு.

1579. அறிவில் விளைந்த வமைதிசேர் வாழ்வால்
இறைவனோ டொன்றலுற் றேன்.

1580. அறிவான வுண்மையிலே யாண்டானோ டென்மெய்
யுறவுகண்டே யைக்கியமுற் றேன்.

1581. காட்டியதே யன்றிக் கடவுளியல் யானதுவாக்
கூட்டினான் சற்குருக்கோ மான்.

1582. தனியனா வென்னைத் தனிக்கவாண் டானுக்
கனியனான் சற்று மலேன்.

(வெண்பா)

1583. அறிவிலே யென்னை யணைந்தான் சொரூப
வுறவிலே நான்கலப் புற்றே—பிறிவுற்
றகலாத மோன வமைதிசே ருண்மை
யகமாக நின்றே னவிர்ந்து.

1584. ஆண்டவன்சித் தத்தை யனுசரித்தே முற்றவெனக்
கீண்டுவதென் சிந்தை யியல்பென்றால்—ஆண்ட
வன்னியமா நானென் றலமரலென் யானவனா [வனுக்
மன்னியதென் போத வடிவு.

1585. உலப்பிலா மோன வொளியா வுலகிற்
கலப்பிலா னென்னுட் கலந்தான்—வெலப்படா
ஐயுணர்வா ஞ் சிந்தை யவிந்தொழியக் கைவல்ய
மெய்யுணர்வா வெங்கும் விரிந்து.

1586. உண்மை யுணர்வா மொளிசே ருபசாந்த
வண்மையுறு சிந்தா மணிரமணன்—கண்மணியாத்
தான்கலந்த வாற்றுற் சதிர்படமெய்ஞ் ஞானவருள்
வான்கலந்த தென்புன் மனத்து.

1587. உணங்கி யொழிந்த வுயிர்தழைப்ப வென்னோ
டிணங்கியபே ரின்ப விறைவன்—குணங்கடந்த
தற்பரமா முண்மை தலைப்படலாற் கேவலசச்
சிற்பரமா நின்றேன் செழித்து.

1588. ஏன்னினுமென் னுண்டா னெனக்கனிய ளைகவகந்
துன்னினன் சொந்த சொருபமா—அன்னியந்தா
னன்மையா லெண்ண லயர்த்தலற்ற மோனமாந்
தன்மையிலே சாந்திதழைத் தேன்.

1589. கண்ணுன தன்சொருபக் காட்சியா லென்னையருள்
விண்ணுக மாற்றியவென் மெய்யப்பன்—பெண்ணு
ணலிக்குறியொன் றற்ற வறிவுருவா வென்னிற்
கலக்கலுற்ருன் பேதமறக் காண்.

(கொச்சகக் கலிப்பா)

1590. வென்றிசேர் சுத்த வியன்பரமா மெய்ப்பதத்தூ
டொன்றினு லன்றி யுபசாந்த போகமுயிர்க்
கென்றுமே யின்றென் றெனைத்தெருட்டி யாண்டவன்பால்
ஒன்றினேன் சாந்தணர் வுள்ளமெழப் பொங்கியதே.

௬. ஏகத்துவம்

(வெண்பா)

1591. உயர்ந்தமெய்ஞ் ஞான வொளியுருவன் றன்னை
மயர்த்தவென் மோகமற மாற்றினுன்—பெயர்ந்துநான்
போகாது சுத்தவருட் போதமாந் தன்னுெடுநான்
ஏகான்மா வாக வொளிர்ந்து.

1592. முத்திப் பதவொளியின் மூழ்கலாற் பாசபந்தம்
பொய்த்தொழியப் பெற்றவருட் பூரணத்தே—புத்திக்
கலக்கத்தா லூற்றமனக் கற்பனு பேத
முலக்குற் றொருமையுற் றேன்.

1593. எண்ண மெனக்குமற் றெந்தை பிரான்பதத்தவ்
வண்ணவூக்கு மென்னிடத்தி லவ்வாறே—வண்ண
மிரண்டின்றி யொன்று விதயவொளி வீசித்
திரண்டதுமோ வனுபவச் சீர்.

1594. பழமுதலாய் நின்ற பராற்பரனைக் காணக்
கெழுமுதலாய் நானழிந்து கெட்டேன்—முழு [முதலோன்
நன்னுணர்வா நானெழிந்த தக்கணமே நான்காண
என்னுருவா நின்று னியைந்து.

எ. ஒருமையுணர்வு

(வெண்பா)

1595. சிவத்திலே சித்தந் திளைத்தலாய்த் தெய்வத்
தவத்திலே சீர்மை தழைத்தேன்—அவத்துவென்
றொன்றுமின் றுக வுளங்கிளர்மோ வனுபவத்
தொன்றுபட்ட துண்மை யுணர்வு.

1596. ஒருமை யுணர்ச்சியரு வுள்ளத்தா லண்டான்
பெருமையிலே யென்சிறுமை தீர்ந்தேன்—அருமை
மோகமற்ற மோன முழுமுதலா வுள்ளதுதன் [யாய்
னேக சொரூப வியல்.

1597. ஒருமைசேர் மோனவுணர் வூர்தலா லோவா
தருமைசேர் சாந்தி யடைந்தேன்—கருமயக்கக்
கற்பனையா வுற்றவுயிர்க் கண்கலக்கஞ் செற்றொளிர்
யப்பனையே பேணு மகத்து. [மெய்

1598. அருளின் குறியே யகத்தூடு பற்றி
மருளின் மயக்கமற வாழ்ந்தேன்—பொருள்வதாஞ்
சித்த விகற்பத் தெருமரல்போ யுண்டாயிற்
றொத்தமனப் பான்மை யுளத்து.

அ. ஒளிவெளி

(குறள்)

1599. ஒளிசேர் வெளியே யுளமாத் தெளிந்தேன்
விளிவா லகப்பேய் வெறி.

1600. களிவளர்மோ கப்புன் கலக்கமற வுள்ளத்
தொளிவெளியாப் பொங்கிற் றுணர்வு.

கூ. கிருத கிருத்திய தன்மை கிளத்தல்

(குறள்)

1601. பின்னமில்சற் போதப் பிரானநட்பே றுற்றவெனக்
குன்னவொன்று மில்லை யுளத்து.

(வெண்பா)

1602. அருட்பெருந் தன்மைசே ரானந்த வாரி
இருப்புணர்வாத் தங்கலா லென்பால்—விருப்பனைத்
ஈட்டேறப் பெற்றுங் கிதயநிறை வெய்தலுற்று [தும்
வீட்டே யடைந்ததுமண் மேல்.

1603. சிவபதத்திற் சிந்தை தெளிதலாற் போதச்
சுவசொருப வாழ்வே சுகமாய்த்—தவநியம
சாதனையாற் சாரத் தகுவதெனக் கேதுமற்ற
நீதநிலை யோங்கிற்று நெஞ்சு.

1604. தீர்வையா வுள்ளவருட் சிற்பரமா மோனவியற்
பார்வையகம் பற்றிப் படர்தலால்—வேர்வைசேர்
தாபமறத் தீர்ந்து சதாசிவமாச் சேர்பரம
லாபமுறப் பெற்ற தெனக்கு.

(கொச்சகக் கலிப்பா)

1605. சுத்த வுணர்வாத் துலங்கு சொருபவருள்
வித்தக வாழ்வு விளைத்தான் விழுப்பதத்திற்
புத்தமுத போகப் புணரிகாண் குற்றேனுக்
கெத்தலைய யத்தனமு மில்லா தொழிந்ததே.

1606. ஐயன் குருரம ணுரியன்கண் ணேக்கத்தால்
உய்யவென் னுள்ளத் தொளிர்பரஞ் சோதியாந்
தூய்யபர மார்த்தத் துரீய வருட்பதத்திற்
செய்ய வெனக்கோர் செயலற் ருெழிந்ததே.

1607. எண்ண வொணுத விறைவனெ னுள்ளத்து
நண்ணலா லான்றமெய்ந் ஞான சொரூபவருள்
வண்ணமா வாழ்வு மலர்தலுற் றேனுக்குத்
திண்ணமா யாதுமினிச் செய்யக் கடவதின்றே.

1608. பொய்ம்மா லகந்தையறப் பொங்குமியல் வாலறிவாச்
சும்மா விருந்தே சொரூபானு பூதியெழப்
பெம்மா னருளாற் பெருவாழ்வு பெற்றேனுக்
கெம்மா தவமுமினி யின்ரு முடிந்ததே.

## ௪௦. மனம் பழுத்தல்

(குறள்)

1609. இறைசிற் பதத்தி லியல்பா வொளிர்மெய்ந்
நிறைவிற் பழுத்ததென் னெஞ்சு.

## ௪௧. மாற்றமிலேன்

(கொச்சகக் கலிப்பா)

1610. கற்றுவக்க யாதோர் கலையுமின்றிக் காதலித்துப்
பெற்றுவக்க மற்றெனக்கோர் பேறுமின்றிக் காண்ப
[ணவாம்
மற்றனைத்து மோர்தன் மயமாக என்னியல்பு
முற்றமுழுப் பூரணமாம் மோனவெளி யானதே.

1611. தாழ்வோ வுயர்வோ தகைவோ விடுதலையோ
* மாழ்வோமா ழாமையோ யாதுமில்லை யானேனும்
பாழ்வா தனையாம் பசையற் றியற்பரமெய் [பொய்ப்
வாழ்வா வெனக்கு வளர்சிவமோ னப்பதத்தே.

* மாழ்வுமாழாமை - மாழ்கல் மாழ்காமை.

### கஉ. தன்னியல் சார்தல்

(குறள்)

1612. போதவருட் பார்வையாற் புத்தியிலே சந்தித்தேன்
ஏதமறப் பொங்கு மியல்.

1613. அருட்சிற் பரவெளியா வாண்டவனைப் பற்றிற்
றிருட்கற் பணைதீ ரியல்.

1614. சிற்பரமாப் பொங்கு சிவத்தில் விளங்கியது
தற்பரமெய்த் தன்மை தழைத்து.

(வெண்பா)

1615. ஒருமதியா லுள்ளத் தொளிர்சொருப மோனப்
பெருமுதலே வாழ்முதலாப் பெற்றேன்—தருமதயா
மூர்த்தியா வாண்ட முனிபுங் கவனருளா
லோர்த்துணர்ந்தென் னுண்மை யுளத்து.

1616. புத்த ரமணனருட் போதவொளி யென்னகத்தில்
வித்தகமாச் சேர்ந்து விளங்கலால்—எத்தகைய
கற்பனை மோகக் கலக்குமமற் றுள்ளபொருட்
சிற்பரமா மென்னியல்சேர்ந் தேன்.

1617. மாய வுலகை மதித்துண்மை யாகநான்
பேயனே யானேன் பிரமையால்—மாய
வுலகெனக்குத் தோற்ற வுடலுறவா லென்றோர்ந்
துலகொழித்தென் னுண்மையுணர்ந் தேன்.

1618. மிக்கவருள் வாழ்வா விளங்குவதோ ருண்மைநிலை
சிக்கெனவென் னுள்ளே சிறத்தலால்—தொக்கவருட்
பொன்னம் பலவடிவாப் பொங்குசிவ பூரணத்தா
டென்னியல்கண் டேமமுற் றேன்.

1619. பிரானருளப் பெற்றுப் பிறங்குவதாய்ப் பேசா
வொருமொழிருசொல் லான வொளியாய்ப்—பரானு
[பவம்
மூண்டொளிரப் பெற்றுநான் மோன சொருபமாய்
ஈண்டனையப் பெற்றே னியல்.

1620. புத்தியூ டாழ்ந்து புணர்வதாந் தன்சொருப
பத்தியூ டுண்மையொளி பற்றலாற்—சித்த
மலங்கெட் டகத்து மறப்பு நினைப்பற்
றிலங்குற் றதுதன் னியல்.

(கொச்சகக் கலிப்பா)

1621. துங்கப் பரமேயென் சொந்த சொருபமா
அங்கங் கலந்தொளிர்ஞா னுபவங் கண்டுகொள்
[ளேன்
அங்கனை லென்னையடிக் காண்டவருட் சிற்பரன்பார்
பொங்கியமெய்க் காதற் பொலிவுசே ருள்ளத்தே.

1622. மனக்கவலை யற்ற மகிழ்சேர் பெருவாழ்
வெனக்கினிது பாலித்த வெம்பிரான் றாட்கீழ்
உனற்கருமோ னுபவ முற்றேன் உளத்திற்
றனிக்கவொளிர் தற்பரமெய்த் தன்மைபெற் றேனே.

1623. கோளாம் பிரமாதக் கூற்றமறக் காண்குருவுக்
காளாகப் பெற்றே னருள்விளக்கத் தாலறிந்த
மாளாப் பரமார்த்த வாழ்வான தன்னியலே
மீளாப் பெரும்பதமா மெய்யறிஞர் தேறுவதோ.

1624. இம்பரும்ப ரெல்லா மிகப்பக் கடந்தொளிர்சித்
தம்பலமா வான்ற வனந்தானந் தானுபவச்
செம்பரவாழ் வுள்ளத்துத் தேக்கலால், எம்மனோர்க்
கெம்பரமன் றுன வியல்வாழ்வு சார்ந்தோமே.

குறிப்பு :—இம்பரும்பர் - இம்மை மறுமை; எம்மனோர்க் கெம்பரமன் றுன வியல் வாழ்வு - ஒருசொல் நீர்மைத்தான பெயர் சொற்றொடர்.

1625. சித்தமல மான செருக்கற் றொழியவிளங்
கத்துவித மோன வருட்சிற் பரசொருபம்
புத்தமுத வாழ்வாப் பொருந்தலுற்ற வுள்ளத்திற்
சொத்தநிலை யுற்றேன் சுபாசுபஞ்சார் கில்லேனே.

## ௬௩. தாபந் தணிதல்

(குறள்)

1626. உள்ளத்தே யென்னியல்பா வோர்ந்துணர்ந்த சுத்
வெள்ளத்தா லற்றேன் *விடாய். [தவருள்

* விடாய் - தாபத்திரயம்.

1627. உள்ளத் தியல்பா வொளிர்சொருப மோனவருள்
வெள்ளத்தி லற்றேன் *விடாய்.

* விடாய் - சம்சார தாபம்.

(வெண்பா)

1628. உள்ளத் தொளியா வொளிர்தருமெய்ஞ் ஞானவருள்
வெள்ளத்தே மோக விடாய்தணிந்தேன் — கள்ள
[மனப்
பொய்க்கலக்க மான புழுக்கந்தீர் சாந்திசுகம்
மிக்கவனு பூதி விளைந்து.

1629. உளத்தூ றுறுதியா லூன்றி யமர்ந்தென்
களத்தை யறுதியாக் கட்டான் — முளைத்த
தியானப் பயிர்செழிக்கச் சிந்தா குலஞ்சேர்
வயாவற் றுயிர்தழைத் தேன்.

(கொச்சகக் கலிப்பா)

1630. உள்ளம் மறக்கவோ வுள்ளவோ வொண்ணாதவ்
வுள்ளமே யாக வொளிர்சொருபப் பெம்மானைக்
கள்ள வகந்தைமனக் கற்பனைதீர் சுத்தவருள்
வெள்ளமா நான்குடைந்து வேறப் பெற்றேனே.

குறிப்பு :— வேசாறல் - பிறவித் துன்பமான தாபத்திரயம் தணிதல். [வேசு - வேது, வெய்து.]

1631. உள்ளத் தொளிசே ருணர்வால் விளக்கமுறத்
தெள்ளத் தெளிந்த சிவானுபவத் தீர்த்தத்திற்
குள்ளக் குளிரக் குளித்தேற் குபசாந்த
வெள்ளக் கடலில் விடாயற் றெழுந்ததே.

1632. மாறுந் நெடுந்த மனக்கா மகந்தெவ்வோ
ராறுக் கதிபதியா மனைவமே யணழியத்
தேறத் தெளிந்த சிவஞான சித்தியால்
ஆறித் தணிந்தனமே மாசாபா சங்களே.

1633. கள்ளச் செருக்கின் கடுமாயத் தின்மையுறல் செற்
றுள்ளத் தொளிர்சொருப வுண்மையே யுண்மையாத்
தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரமே யநுபவ
வெள்ளத் தழிழ்ந்தவா வேகவிடா யற்றதே.

1634. கூட்டுவித்தா லன்றித்தற் கூடவொண்ணு வென்
[னைத்தற்
கூட்டுவித்தாட் கொண்டவருட் கோமான்பால் என்
[மனத்தை
நாட்டியதாற் சேர்ந்தமெய்ஞ் ஞானானு பூதியாம்
வாட்டியமுத் தாப வறட்சியறக் கெட்டதே.

1635. வீறக் கருத்தில் விளைந்தவருட் சித்திரத்தா
றேறத் தெளிந்த சிவானுபவச் செம்பதத்தில்
ஊறக் கிளர்ந்தவுப சாந்தவூற் றுப்பெருக்கால்
பாறத் தொலைந்ததுவெம் பாச வழற்சியே.

1636. உள்ளங் குடிகொண்ட வொள்ளியோன் சுத்தவருள்
வெள்ளந் திளைத்து *விடாய்தீரப் பெற்றதாற்
கள்ளமில்லை வல்லக் கவைப்பான போனமாத்
தெள்ளத் தெளிந்த சிவானுபவ வாழ்வினிதே.

* விடாய் - சமுசாரதாபம்.

1637. சுவச்சமா வுள்ளந் துலங்கு சொரூப
சிவச்செம் பதத்திற் செறிந்த மனத்தால்
அவிச்சையா லுற்ற வகந்தை முளைப்போ
டவச்சுவை யானபா ழாசையற் றேனே.

### சச. தன்மயனுதல்

(வெண்பா)

1638. ஆண்டவன்பா லார்ந்த வனுபூதிப் பார்வையால்
ஈண்டவெனக் கெல்லாம்பே ரின்பமயம்—வேண்ட
[வெனக்
கன்னியமொன் றின்றி யகண்டவருட் பூரணமாந்
தன்னியல்பிற் றன்னியரு னேன்.

### சரு. நூலின்றி தத்துவ தரிசனம்

(வெண்பா)

1639. சுத்தவறி வான சொரூபநிறை வாகவொளிர்
மெய்த்தவமென் பாலே விளைந்ததால்—சத்தவகை
யாய்ந்தறிந்து சாதித் தடையக் கடவதின்றித்
தோய்ந்ததக மெய்த்தத் துவம்.

குறிப்பு:—சத்தவகை - சாத்திரத் தொகை; கடவது இன்றி - கடவது வேறென்றும் இல்லாத படி.

1640. கைவல்ய வுண்மையுருக் காண்டலுமென் னுள்ளத்
பொய்வல்ல மாயை புலம்பியதே—வைகுவதாய் [தந்
என்றுமுள்ள மோன வியற்செம் பொருளது நான்
என்றறிந்தேன் யானே யெலாம்.

### சசு. சுயேச்சை நிரம்பல்

(கொச்சகக் கலிப்பா)

1641. மாறுற் றெழுந்த மயக்கவகங் காரமறத்
தேறத் தெளிந்த சிவானுபவத் தேற்றத்தால்,
வேறுற்ற மாயா விலாசப்பாழ் வேட்கையற
வீறுற் றெழுந்தசுயா வேணவா மூற்றியதே.

### ௧௭. பரத்தி லடைந்தவை

(கொச்சகக் கலிப்பா)

1642. குருதத் துவமே குறிக்கொண்டு காணிற்
பரதத் துவமாம் பரிசாலே யென்னுட்
குருதத் துவமே குறிக்கொண்டேன் மோனப்
பரதத் துவமெய்ப் பயன்படைத் தேனே.

### ௧௮. பாழ் கடந்தேன்

(கொச்சகக் கலிப்பா)

1643. இருட்பா ழகந்தை யிறத்தலா லுள்ளத்
தருட்பூ ரணமே யகமா விளங்க
வெருட்பார்வை யான விகற்பமறு பேத
மருட்பாழ் கடந்தேன் மறப்புநினைப் பற்றே.

### ௧௯. பிரம்மானுபூதி

(வெண்பா)

1644. காணக் கிடையாக் கடவுட் பரசொருபம்
பேணக் கிடைத்தவருட் பெற்றியால்—மாணப்
பெருமிதமாப் பொங்கும் பிரம்மானு பூதி
யருமையாச் சேர்ந்த தகத்து.

1645. ஊனப் பழிசே ருடற்பிறவித் துன்பமகல்
வானப்பே ரின்பவருள் வாழ்வாக—ஞானப்
பெருமிதமா வோங்கும் பிரம்மானு பூதி
அருமையா வுற்ற தகத்து.

1646. காணக் கிடைத்தவருட் கைவல்யக் காட்சியன்றிப்
பேணக் கடவதொரு பேறில்லை—மாணப்
பெறுவதா மந்தப் பிரம்மானு பூதி
நிறைவதாற் பொங்குமென் னெஞ்சு.

1647. உற்றே னுறுதுணையா வுள்ளந் துணர்வொளியாற்
பெற்றே னியல்பாப் பிரமசுகம் — சற்றும்
பருவாற் சிந்தையறாப் பாலனஞ்செய் சுத்தத்
திருவருட் சத்தித் திறம்.

குறிப்பு: சத்தித் திறமே உறுதுணையாக வுற்றேன் எனக் கூட்டுக.

1648. வேட்கையறக் கண்டவருள் வித்தகமாஞ் சித்துருவே
பாட்கையரு முண்மைப் பரமபதம்—பூட்கைசேர்
கர்த்தத் துவங்கழியக் கற்பனைகாண் மோகமற்று
வர்த்தித் ததுதன் மயம்.

## உ0. பிறவியால் அடைந்த பேறு

(வெண்பா)

1649. கிடைத்தற் கரியவருட் கேண்மையா லேநான்
படைத்தற் கரியபயன் பெற்றேன்—அடுத்தற்
குரிய [illegible]ருப வொளிப்பிழம்பாந் தெய்வத்
துரியபரஞ் சோதியைத் தோய்ந்து.

## உக. புருஷார்த்தம்

(கொச்சகக் கலிப்பா)

1650. பெறக்கடவ வுண்மைப் பெரும்பேறு பெற்றே
னறக்கடையேன், ஆண்ட வருட்சிற் பிரானாற்
சிறக்க விளைந்த சிவானுபவ மோனத்
திறக்கலாற் சிச்சடப்பா ழீனவகப் பேயே.

## உஉ. பூரணத்துவம்

(கொச்சகக் கலிப்பா)

1651. எல்லாமொன் றான வியற்சிற் பரசொருப
நல்லான் றிருவடிமெய்ஞ் ஞானனு பூதிபெற்றேற்
கில்லாத தொன்றில்லை; இஃதஃதென் றேதுமில்லை
கல்லாத மோகமனக் கற்பனைதீர் நோக்காலே.

## உக. பேரின்பம்

(குறள்)

1652. உகக்கவென் னுள்ளத் துணர்வுருவா வுள்ள
*வகக்கருவே யின்பமெய் யன்பு.

*அகக்கரு - உள்ளக்கரு.

1653. உள்ளத்தே யென்மெய் யருவா வொளிர்வதருள்
வெள்ளப்பே ரின்ப வெளி.

1654. வெறுவெளியா வுண்மை விளங்கலா லுள்ளத்
துறுவதுபே ரின்ப வுணர்வு.

1655. பிரானருள்வாழ் வாகப் பிரங்குவதென் னுள்ளத்
தொராஞெருபே ரின்ப வுணர்வு.

1656. ஒழிந்த வகந்தை யுணர்வால் இதயத்
தெழுந்ததுபே ரின்ப வியல்.

குறிப்பு:—எழுதல் - விளங்குதல்.

1657. காமங் கழன்ஞெழியக் கைகூடப் பெற்றதுளத்
தேமஞ்சே ரின்ப வியல்.

1658. சிவத்திலே சித்தந் திளைத்தலாற் கண்டேன்
சுவத்தவாழ் வான சுகம்.

1659. புத்தமுத மோனப் பொலிவால் விளங்கியது
சுத்தமெயஞ் ஞான சுகம்.

1660. இயற்சிற் பரசுகவாழ் வேய்ந்ததுளத் தான
முயற்சியற் ஞேய்ந்த முகத்து.

1661. திருவருட்பே ரின்பந் திளைக்கின்ற வாற்ருல்
ஒருவிருப்பு மில்லை யுளத்து.

1662. தெளிந்தபர மார்த்தத் திருவருட்சீர் வாழ்வா
விளைந்ததகம் பேரின்ப வீடு.

1663. ஆண்டா னடிநிழற்கீ ழார்தலுற்ற சாந்தியால்
ஈண்டா நின் றேனின் பெலாம்.

1664. எல்லாமொன் றாக வியல்சொருப மோனத்தால்
எல்லாமுற் றின்புறுகின் றேன்.

குறிப்பு:—எல்லாம் உற்று - எல்லாமே உற்றுற் போல்; சொரூப மோனம் - சொரூப ஞானுனுபவமான மோனம்.

(வெண்பா)

1665. ஆரியனு மார்ந்த வனுபூதி யென்னையழித்
தோரியல்பா வுள்ளத் தொளிர்தலால்—கூருமயற்
பேதவுணர் வற்றுப் பிறங்குபே ரின்பமயப்
பாதவெளி யானேன் பரந்து.

1666. உள்ளாதே யுள்ளு முணர்வா மனுபூதித்
தெள்ளாறு பாய்தலாற் சித்தத்தே—உள்ளங்
குளிர்ந்துமனத் தாபமறக் கூட்டோ டெனக்கு
வளர்ந்ததுபே ரின்பவருள் வாழ்வு.

1667. வெற்றிசேர் சுத்தவருள் விட்புலமாங் கைவல்யப்
பெற்றியா லோங்கும் பிரம்மமே—முற்ற
வெனைத்தன் சொரூபத் திருத்தினுன் பாதம்
மனத்தினுள் வைகும் மகிழ்.

1668. பூண்டவருட் போத சொரூபப் புணர்ச்சியால்
ஈண்டிற் நிதயம்பே ரின்பநிலை—காண்டலரு
மோனவியற் சிற்பரமா மூண்டபரந் தாமவொளி
தானளவிற் றெங்குந் தழைத்து.

1669. மெய்தெளிந்து வாழ விதித்தவருட் சிற்பதத்திற்
பொய்தவிர்ந்து மோனம் புணர்ந்தாங்கே—உய்தி
[யெனத்
தேறும் பரசொருபச் சிந்தனையே தன்னியல்பா
வூறும்பே ரின்ப வுணர்வு.

குறிப்பு:—பொய் - தேகோகம் புத்தி வடிவான ஜீவ போதச் செருக்கு.

1670. பாவனமாம் போதவருட் *பாதமே யாரமுத
ஜீவனமா வென்னுயிர்க்குச் சேர்தலால்—சோபனமா
மோனப் பரபத்தி மூண்டதுளத் தின்பமய
வானப் பரமாய் வளர்த்து.

* பாதம் - பாதத்தியானத்துக்கு ஆகு பெயர்.

1671. திருத்தியுற்று வாழவென் சித்தத்தே யாண்டான்
பொருத்தியசற் போதானு பூதி—அருத்தியுற்ற
வென்னைபே ரின்ப வியல்வமவ மானசெழும்
பொன்னிற் பொலிவித் தது.

1672. நட்ட நடுவான நல்வருட் சிற்பரத்தோ
டொட்டவொழு குண்மை யுபாசனையிற்—சுட்டறிவற்
றன்புமய மாக வமர்தலால் வாழ்வேபே
ரின்பமய மாயிற் றெனக்கு.

1673. இன்பமே வாழ்வா வியல்வதா லென்னிகண்மற்
றுன்பமெனுஞ் சொல்லே தொலைந்ததால்—வன்புதீ
ரன்புமய மான வருட்பரநோக் காலேபே
ரின்பமய மாயிற் றெலாம்.

1674. என்னிலே யானு விருந்தொளிர்சற் போதவுருத்
தன்னிலே வாழ்க்கை தழைத்தலால்—துன்னிய
மோக வகந்தை முளைப்பற் றுருளிர்சொருப [பொய்ம்
போகம் புணர்ந்ததிப் போழ்து.

1675. உறவொருமை தேறவெனக் குள்ளுணர்வா மோன
நிறைவியல்வாழ் வாகவொளிர் நிஷ்டை—செறிவு
[படத்
தூண்டு சொரூபச் சுடரொளிசேர் மாண்பதத்தே
நீண்டதுபே ரின்ப நிலை.

குறிப்பு :—நீண்டது - நிரந்தரமாக நிகழ்ந்தது.

1676. நன்கெனக்கு வாய்த்தகுரு நாதனருட் பாதவொளி
என்கலியை மாற்றி யிதயத்தே—துங்கவியற்
பேரின்ப வாழ்வாப் பிறங்கலா லாதரங்கூ
ரார்வம் படைத்தே னவற்கு.

1677. ஈண்டுமனக் கற்பனையா மிவ்வுலகப் பொய்ம்மயல் [செற்
றுண்டவன்பே ரின்ப மனுபவித்தேன்—அண்டகுரு
வள்ளலருட் பாதமகிழ் வைபவமே யன்றிமற்றொன்
றுள்ளுவதற் கில்லை யுளத்து.

(கொச்சகக் கலிப்பா)

1678. தஞ்சமாச் சார்ந்தாரைத் தாங்கித் தலையளிக்குஞ்
செஞ்சரணச் செம்மல் சிவசிற் பரவெளியே
நெஞ்சமா வெண்ணை நிகழ்த்தினன் மோனவருள்
விஞ்சையிலே வாழ்வு விளங்கல்பே ரின்பமே.

1679. ஆன்ம சொரூப வறிவொளியா வுள்ளத்துத்
தான்மருவு சுத்த சதாசிவசாந் தானுபவத்
தேன்மதுரப் பாகுதித் திக்கலுற்ற வுள்ளுணர்வால்
யான்மகிழத் தக்கவயல் யாதுமில்லை யெங்குமே.

1680. கண்ணான சிற்பிரான் காட்டியதோர் செந்நெறியா
லுண்ணாட லுற்றேற் குபசாந்த மோனவருள்
விண்ணாடே மெய்ஞ்ஞான வீடா விளங்கிதயத்
துண்ணா ரமுத வுணர்வுசிவ போகமே.

1681. காணக் கடவவருட் கண்ண வொளிர்சொருபச்
சோணப் பிரான்பாற் றுரீயந் துலங்கலுற்றேன்
மாணப் படைத்தேன் மனக்கட் டவிழ்தலாற்
பேணப் பெரிதினிய பெம்மான்பே ரின்பமே.

1682. இரக்கவெனக் கொன்றுமே யின்று விதயம்
பரக்க வெழுந்தசிவ பாக்கியமா வுற்றன்
கரக்கலுற்ற சாந்த சொரூபப்பே ரின்பப்
பெருக்கிற் கரைந்ததென் புன்பிறவித் துன்பே.

1683. தெள்ளத் தெளிந்தசிவச் சிற்பிரான் சற்குருவாக்
கள்ளக் கலக்கமறக் கண்ணோக்கம் பாலித்த
வள்ளற் பிரான்சீர் வழுத்தலுற்றே னக்குபனங்
கொள்ளப் பெறுத குதூகல முண் டாயிற்றே.

1684. அத்தகநிற் கின்றஞா னன்ம நிஷ்டை நன்கருளும்
முத்தன் குருரமண மூர்த்தியைச்சார்ந் தேனுக்குச்
சித்தம் பரவசமாச் சேரத் திளைத்தலாற்
புத்தமுத போகமாப் பொங்கியதென் னுண்மையே.

1685. வெருவரல்சேர் மோக விகற்பமறத் துங்க
வருள்வெளியா வுள்ளத் தவிர்தலுற்ற வாண்டான்
பொருவருசற் போதானு பூதியாற் காணேன்
மருள்வளர்வெம் பாச மயக்கமனத் துன்பே.

1686. உண்ணெக் குருதவா ருள்ள முறையுளா
நண்ணிக் குலவுறுமென் னம்பனடிச் சேவமச்சீ
ரெண்ணிக் களிக்கலுற்றே னுள்ளத் திடைவிடா
தண்ணிக்க வூற்றதுநல் லாரா வமுதமே.

1687. புத்திக் கமுதமாப் பொங்கு சிவானுபவ
முத்திப் பெருக்கமா மூண்டொளிர்மோ னப்பிரான்
பத்திக் கனியான பாத ரசம்பருகித்
தித்திக்க வூற்றவென் சீவியம்பே ரின்பமே.

குறிப்பு :—பிரான் பாத பத்திக் கனிரசம் என்க.

1688. உன்ன வொணுமெய் யுடையான் சொரூபமாந்
தன்னந் தனிப்பரமெய்த் தத்துவத்தே சுத்தவருள்
வன்னந் துலங்கு வசீகரப்பே ரின்பநிலை
என்னதுநா னற்றெழிய வென்னியல்பா வெய்தியதே.

1689. பொன்னம் பலத்திற் பொதுநடஞ்செய் கின்றபிரான்
முன்னின் றெனையாண்ட மூர்த்தி குருரமணன்
வன்னம் பளிங்கேபோல் வாரொளிசேர் வாலறிவன்
றன்னன்பி லின்பந் தழைக்கலுற்ற துள்ளமே

1690. பரகதியா மோனப் பதவொளியாற் பாசக்
கரவுசேர் மாயமனக் கார்கரக்க வுண்மைத்
திரகதியா வென்னுட் சிறக்கலுற்ற வாழ்க்கை
இரவுபக லற்றபே ரின்பவியல் வீடே.

1691. வேண்டப் படுவதொரு வேட்கை யெதுவுமின்றும்
ஈண்டக் கிடைத்ததுபே ரின்பவியற் பூரணமெய்
காண்டற் கரியசிவக் காட்சியில்யா னென்னுமயற்
பூண்டற்ற வாற்றாற் பொலிந்ததுமெய்த் தன்மையே.

1692. மனத்தைக் கவர்ந்த மனோதீதன் என்பா
லினைத்தென வொண்ணாத வியல்பா லியைபால்
அனர்த்தக் கலக்க மறத்தெளிந்த சுத்தத்
தினித்ததுபே ரின்பவுணர் வெய்தியது மன்னே.

1693. பேரும் பிரியலகப் பேயுணர்வாம் பேதைமைதாந்
தேரும் பரிசுசிவன் சிற்பதமே யாகஅகங்
கூரன் புணர்வாற் குலவுசாந் தானுபவம்
பேரின்ப மானவருட் பெற்றியா முற்றியதே,

1694. நானென்னும் புத்தி நழுவலால் வேற்றுமைதீர்
மோனந் திளைக்க முகந்ததுபே ரின்பநிலை
ஆனந்த மென்பதுசுத் தான்ம சொரூபமே
தானென் றலர்ந்தவருட் சால்பான சாந்தியிலே,

1695. தன்னிலே தன்னைத் தவிரமற் றொன்றுமற
மன்னியசுத் *தான்ம வளாகத்தில் வாழ்வாகத்
துன்னியசற் போத சொரூபானு பூதியால்
என்னியலா நீடியபே ரின்பநிலை சார்ந்ததே.

* ஆன்மவளாகம் - ஆன்மலோகம், பிரம்மலோகம்.

1696. ஓதக் கடவதுமற் றொன்றுமற்ற கேவலமா
மேதக்க வுண்மை விளங்கவெனக் கான்றவருட்
போதக் கழல்விளக்கம் புந்தியிலே பற்றலால்
ஏதக் கலக்கமில்பே ரின்ப மெழுந்ததே.

1697. கள்ளங் கலந்தவிருட் காரவிச்சை பொய்த்தொழிய
வுள்ளங் கலந்தவரு ளொட்பத்தாற் பேரின்ப
வெள்ளவாழ் வாக விளைந்தமோ னனுபவத்
தெள்ளமுத முண்டு திளைக்கின்றேன் சிற்பதத்தே.

1698. என்றுமே நான்மற் றெதனிலுமே கண்டறியா
நன்றிசேர் மோன நலஞ்சேர்பே ரின்பமுற்றேன்,
மன்றவென் னுண்மையா மாண வுளங்கிளரத்
துன்றுசற் போத சொரூபவருள் வாழ்விலே.

1699. மாசிலாத் துங்க மணியா வொளிர்சொருபத்
தேசிலே பாசத் தெருமரல்சே ராசையற
வாசிதீ ருண்மை வளம்பொங்கு சாந்தியாற்
பேசிலா மோனவருட் பேரின்ப முற்றதே.

### உ௪. வேண்டாமை நிறைவு

(கொச்சகக் கலிப்பா)

1700. ஆண்டா னருட்பே ரமுதக் கருந்திலெனக்
கீண்டாத தொன்றுமெங் கெங்குமிலை—ஈண்டே நா
னுண்டடைவ தானபிரம் மானுபவம் பெற்றதால்
வேண்டுவதொன் றில்லை பிறிது.

### உ௫. அடங்கல் ஒடுங்கல்

(குறள்)

1701. ஆண்டவன்சிற் பாதத் தடங்கலுற்றேற் கியான்யா
னீண்ட விளங் கிற்றென் னியல், [னொன்

(கொச்சகக் கலிப்பா)

1702. அறிவாக வென்னை யறியா துடலோ
டுறவாடி நானாவா லுய்த்தொழிந்தேன்; சற்றுஞ்
சிறவாத மோகச் செருக்கை விழியா
லறவே யடர்த்தா னருட்சிற் பரனே.

1703. புத்தகஞா னத்தாற் புணரவொ ளுறைத் தன்சொருப
வித்தகஞா னந்துவங்க மித்தையே யுள்ளுணர்வு
டத்தகவே நிற்குமான் மானுபவ நிட்டையெனக்
குய்த்தபிரான் பாதத் தொடுங்கலுற்ற துள்ளமே.

1704. அளவிலா மெய்யநள்வாழ் வாக வகத்துத்
தளர்வறவே யென்னைத் தடுத்தாண்ட பெம்மான்
பிளவிலா வத்துவிதப் பெட்பான மோன
வுளவிலே யோமென் றொடுங்கலுற் றேனே.

1705. அடங்கலுற்ற வையுணர்வா லார்வமிகப் பொங்க
வொடுங்கலுற்றேன் கண்டாய், ஒடுங்கலுற்றார் தம்
கொடுங்கலியா மோகக் குடிலமுனைப் போய [பாற்
நடங்குயிற்று கின்றமெய்ஞ் ஞானப் பிரானே.

1706. ஓர்க்கவோ வன்றிமற் றோர்த்தோர்த் துணர்ந்
[துணர்ந்து
நோக்கவோ நானார்? நுணுக்கரிய நுண்ணுணர்
[வாத்
தாக்கினா னென்னையருட் சத்தியா லென்னகத்திற்
பாக்கியமா வுற்ற பரங்கருணைப் பெம்மானே.

1707. கல்லாதே னுள்ளத்திற் கைவல் லியவுண்மை
நல்லாங் குணர்த்தியமெஞ் ஞான சொரூபன்பாற்
பொல்லா வகந்தையறப் புக்கொடுங்க லுற்றேனுக்
கெல்லா மவனுருவா வேய்ந்தொருங்க லுற்றனவே.

1708. நிட்டரா மெய்யன்பர் நெஞ்சிற் பிரியாதான்
பட்டனை வென்னைப் பரிந்தருளி யாண்டதனுற்
பிட்டனு நானெங்கும் பேரா தெனையிறுகக்
கட்டினான் சுத்தவருட் கைவல்யச் செம்பதத்தே.

1709. தோன்று விகற்பமனைச் சூநிலே தன்னடியேன்
மான்ற வகந்தையான் மாழ்கிக் கலங்காது
மூன்றவித்த வாலறிவன் மோனனு பூதியா
லூன்றுவித்தா னென்னைத்தன் னொட்பநுட்பச் சிற்
[பதத்தே.

1710. ஒன்றாக வுள்ளதோ ருண்மையே தானாக
நன்றாய்ந் தமுந்தலே ஞான சமாதியென்பர்
பொன்றாத சுத்தவருட் பூரணத்தே யென்னையடர்ந்
தொன்றுனே மோனவுணர் வூட்டினா னண்டவனே.

## உக. அத்துவித அடைவு

(குறள்)

1711. ஓர வொன்றாஞ் சிவாத்துவித மோனவருட்
பாரவியல் பற்றிற் றுணர்வு.

1712. இருமைதீ ருண்மையே யென்றுருவா வுள்ளத்
தொருமைசேர் வுற்ற துணர்வு.

1713. ஒன்றுமல் லாததோ ரொன்றாக வெல்லையுணர்ந்
தொன்றலுற்றே னுண்மைப் பரம்.

குறிப்பு:—ஓரொன்று - ஓரே ஒன்று, இரண்டற்ற ஒன்று.

1714. தன்னந் தனிப்பரமாத் தங்குசிவத் திற்கரைவால்
என்னறிவொன் றிற்றவ் வியல்.

1715. அறிவு தெளிந்ததால் அன்னியமா மற்றே
றுறவெனக்கு நா[illegible]லேன்.

1716. தொந்தத்தூ னூசலா டுற்றமனம் பொன்ற நிர்த்
தொந்தத்தே தோய்ந்ததென் னெஞ்சு.

1717. ஒன்றான வுண்மையென் னுள்ளத் தொளிர்தலால்
இன்று வொழிந்த திரண்டு.

(வெண்பா)

1718. அஃதேநா னாக வமைந்த வருட்பதத்தின்
எஃதேனு மில்லையவ் வென்னையன்றி—இஃதஃதென்
றெண்ணுவகைக் காட்சி யெதிரிட்டுக் காணுமனக்
கண்ணளவே யாமோர் கனு.

1719. எங்கு(ம்) நிரம்ப விதயத்தே தன்மயமாப்
பொங்குசிவ ஞானனு பூதியால்—அங்கமகம்
புத்தியயல் போயொழியப் பூரணசுத் தாத்துவித
சித்தியியல் சேர்தலுற் றேன்.

1720. நானெனும்பொய்ம் மோக நசித்ததான் மெய்யுணர்
யானவனென் னும்பேத மின்றியே—ஊனமற [வின்
நானடிமை யாக நடப்பனடிக் கன்புபட்டுத்
தானெடுநா ளென்றுந் தழைத்து.

1721. அத்துவித மான வருட்பதத்து நானழிந்த
வித்தகமே மெய்ஞ்ஞான வெற்றியாய்—முத்திநிலை
தன்னியல்பா வுள்ளவொரு தற்பரமோ னனுபவம்
மன்னியது வாழ்வா மனத்து.

1722. அத்துவித மான வருட்கலப்பா லன்புகிளர்ந்
துத்தமசற் போகவுணர் வூற்றெடுத்து—வித்தகமா
மோனம் விளைந்து விளங்கு சொரூபவியல்
வானங் கலந்தது மன்.

1723. அத்துவித மாக வருட்சிற் பரத்தூடு
நித்தமா நின்று நிகழ்வதென்று—சற்றும்
தனக்குவமை யில்லாத் தலைவனுற் கண்டே
னெனக்குந் தனக்கு மியைபு.

1724. கிடைக்க வொணாதவருட் கேவலமா மோனம்
படைக்கலுற்றே னுண்டான் பதத்தே;—துடைக்க
[வொணா
மோக வகந்தை முனைப்பறவாற் பேதமகன்
றேகமே யாயிற் றியல்.

1725. யோகமெனக் கொட்பநுட்ப வுள்ளுணர்வே யாக
[வுளத்
தேகசொரூ பான்ம வியல்விளக்கி—மொகமனக்
கற்பனை சத்தியறக் கண்டவருட் கண்ணுமெய்
யப்பனின்வே றல்லனே நான்.

1726. ஊன மயலற் றுளிர்சொருப வாழ்வுபர
வானமா மோனவருள் வாழ்வாக—நானெனும்பொய்ம்
மானுபி மானமற மன்னினேன் மன்னுசிவந்
தானென தன்மை தழைத்து.

1727. கற்பனை சத்தியுமெய்க் கண்ணுறு வொளிர்சொருபச்
சிற்பரத்தின் வேருத் தெரிவதன்று—அற்புதமெய்ஞ்
ஞான விலாச நடனமாங் காட்சியென்
மோனக் கொலுவரசின் முன்.

1728. சொந்த சொரூபமாத் தோய்வதெனக் கென்றென்றும்
அந்த வியல்பேதா னதலால்—முந்தெனக்குப்
பற்பலஜன் மங்கள் படர்ந்தாலே போன்றதெல்லாம்
கற்டனையா வுற்ற கனு.

1729. சுத்தவித்தை யான சொரூபவருட் பார்வைவளர்
வித்தகத்தி லுண்மை விளங்கலாற்—பொய்த்தகத்திற்
கற்பனு பேதங் கழன்றொழிய வார்ந்ததுசச்
சிற்பரமே தானுந் திறன்.

1730. அவனே யுயிர்க்குயிரா யத்துவித வுண்மை
சிவனவனுந் தெய்வத் திறத்தால்—அவன்மெய்
யுருவாலே யன்றி யுயிர்க்கிலே யுள்ளக்
கருவுளருக் கன்னுன் கழல்.

1731. அவனே யவளே யதுவே யெனவிவ்
வவனியாத் தோன்று மகிலம்—சிவசொருபச்
சிற்பரமே யான சிவானுபவங் கூரவெனக்
கப்பரமே யாயிற் றகம்.

1732. அவனாலே யென்னை யறிந்தே னறிந்தாங்
கவனே நானுக வமைந்தேன்—அவனே
யனைத்துந்தா னுக வவிர்கின்ற னென்றுந்
தனைத்தவிர வின்றுத் தழைத்து.

1733. அவனருளே பூற்ற வடைக்கலமாச் சார்ந்தேன்
சிவனவனைச் சித்தந் தெளிந்தேன்—அவனில்
அனைத்து மவன்மெய் யறிவுருவே யாயிற்
றினித்தமியேன் மட்டு மெவன்.

1734. அநட்பரமாந் தனைா [illegible] டைந்தார்க் கன்றி
மநடபுலமாங் கற்பனைகள் [illegible]—வெநட்படர்சாய்த்
தொன்றாகத் தன்னை யுணா வித்தா னென்னுளத்தா
டின்றாகத் தன்னி னினன்.

1735. அரியா னொரியா னிரண்டுமன்றி யென்று
முரியனு வுள்ளா னுளத்தே [illegible]
விரண்டற்ற வொன்று [illegible] நுள்ளுருந் தன்னை
மருண்டு [illegible]

1736. அத்துவித மெய்யன் பருள்வாக்க மாகவகத்
திந்துமிசைப் கண்டா [illegible] —
[பொய்த்துவித
வாழ்வாங் கனைமயின் மாசபடு மாசைகெட
வாழ்வதுயிர் தன்சின் மயத்து

1737. சொருபவாழ் வான சுகானுபவஞ் சேர்ந்து
வெருவுவார் மோகமகி வினார்—பருவரல்சேர்
பொய்த்துவிதந் தேரகந்தைப் பூண்டொழியக்
யத்துவித வுண்மை யடைவு [கீண்டவே

(கொச்சகக் கலிப்பா)

1738. ஒன்றான வுண்மையாந் தன்னை யொழிந்துமற்றென்
றின்றாக வுள்ளத் திருந்தொளிரவ் வுண்மையைவிட்
டென்று மினுநா னிரண்டா விருந்ததின்மை
நன்று வறிந்தேன்மெய்ஞ் ஞானனு பூதியிலே.

1739. வெளிவொளி யாக விளைந்த வுளத்திற்
றெளிவளர் சுத்த சிவந்தே ரடியேற்
கிளிவளர் பாச மிகுத்தலின் முற்றத்
தினைதலுற்றேன் மிக்க சிவோகத் திறமே.

1740. பீதியறுப் பொய்த்துவிதப் பீடைசேர் மோகவகச்
சூதியன்ற கற்பனு சொப்பனவாழ் வாசையறக்
கோதகல்வாழ் வானவருட் கோமளஞா னுனுபவச்
சீர்திகழச் சித்தஞ் சிவோகமாச் சேர்ந்ததே.

1741. தன்மயமாக் கண்டேன் சதாசிவமெய்த் தத்துவச்சீர்
உன்மனி பாவ வுணர்வா லுளத்தூடு
துன்மதியாற் சேர்பொய்த் துவிதமில்லை; கண்டேன்
என்பதுப சாரம்; இருந்தொளிர்வ தேகமே. [யான்

குறிப்பு:—உணர்வா லுளத்தூடு துவிதமில்லை யென்பதேயன்றிக் கண்டே னெனவுமாம்; ஏகம் - ஞான சொரூபம்.

1742. அளவிலா வுண்மை யறிவான மோனத்
தெளிவிலே யத்துவிதச் சீர்மை திகழ்வால்
இளிவில்பே ரின்ப வியற்பரமாய் உள்ளம்
பிளவிலா முற்ற முழுப் பெட்புறப்பெற் றேனே.

1743. ஒளிவிளக்க மான வுளத்திலே யூனக்
களிமயக்க மான கருத்தற் றொழியத்
தெளிதலுற் றேன் சுத்த சிவாத்துவித வுண்மை;
விளிதலுற்ற தீன வெறிசேர் முனைப்பே.

1744. பின்னமற்ற சுத்தப் பிரம்மவியல் யானெனதென்
றுன்னலற்ற வொட்பநுட்ப வுண்மை யுணர்
[வொளியே;
வன்னமற்ற சுத்தவருள் வானமா மோனநிலை
என்னதியல் பாக விதயத் தொளிர்ந்ததே.

1745. களங்கமிலா மோனவருட் கைவல்ய நீதி
விளங்கலா லுள்ளத்தில் வேறுபா டற்றேன்;
துளங்குமகப் பேய்முனைப்பாற் சுட்டுணர்வு முற்றக்
களங்கலந்த மோக கனுக்கா ணறிவே.

குறிப்பு:—கனுக்கா ணறிவு என்பது சுட்டுணர்வுக்குப் பெயர்ப் பயனிலை

1746. உன்ன வொணாதவோ ருண்மைப் பரசொருப
நன்னலவாழ் வானசிவ ஞானானு பூதியால்,
பின்னபின்ன மாகப் பிதிர்படவாங் காங்கு நுகர்
பன்னலமுங் கற்பனையாப் பாழ்பட் டொழிந்
[தனவே

1747. என்றுமே மற்றொன் றிலாதசுத் தாத்துவித
வென்றிசே ருண்மை விசுத்த சொரூபமா
மன்றவென் னுள்ளத்தில் வாய்த்தநா னனுபவத்
தோன்றியது பல்வே றுணர்வுமொருங் கொப்பவே.

1748. அருமைசேர் மோன வருட்கே வலமா
வொருமைசேர் மோன வுணர்வே சொரூபப்
பெருமைசே ருண்மையாம் பெற்றி தெளிந்தேன்
இருமைசேர் பேத மெதிர்கின் றிலேனே.

1749. என்னியல்பா வுள்ளத் தியைந்த சதாசிவத்துத்
துன்னியவே கான்ம சொரூபானு பூதியால்
உன்னுகிலேன் யாதோ ருபாசனைமற் றுன்னிடிலோர்
தன்னையே தானிரண்டாச் சேதிக்குந் தற்கொலையே.

1750. நேதியா லெல்லாமே நீங்கியபின் வேறற்ற
மீதியா வுள்ளவவ் வெற்றறிவே தன்னுண்மை;
போதியா வுள்ளவருட் பூரணசுத் தாத்துவித
நீதியா நின்று நிலாவியதென் னெஞ்சமே.

1751. யானெனதை யெள்ளியிகழ்ந் தென்றுமொன் று
மோன வெளியே முடிந்த சொரூபமா [வுள்ளசுப
ஊனமற்ற சுத்தவுணர் வொட்பநுட்ப மாவொளிர்
ருனதுவா மத்துவிதத் தன்மை தழைத்ததே. [வாந்

1752. ஊறு படாததோ ருண்மையே யென்னுருவா
வேறு படாத விசுத்தசிவந் தேறலுற்றேன்
ஏறுமா றக வியன்றிடுபொய்ம் மோகமனக்
கூறுபா டெல்லாங் குலைந்தொழியச் சிற்பதத்தே.

1753. வெளியாக வுள்ள விசுத்தப் பரந்தன்
னொளியா லிதயத் தொளிர்வுறலால் ஊனக்
களிசே ரகந்தைக் கலக்கமற வுண்மைத்
தெளிவான சுத்த சிவோகந்தேர்ந் தேனே.

1754. சித்திர மாகத் தெரியலுற்ற முப்புடிகள்
பொய்த்திற மாயைப் புணர்ப்பா வறிந்தேனுக்
கத்தகநிற் கின்ற வருட்கேவ லானுபவ
மெய்த்தகவுள் ளத்தில் விசைத்தியல்பா விஞ்சியதே.

1755. வேறற் றொளிர்சொருப மெய்ப்பதத்தில் வேறுபோற்
றேறுற்ற யாவுமந்தச் சிற்பரமே யாவறிந்தேன்;
வீறுற்ற சுத்தவருள் வெற்றியால் யானெனும்பொய்ம
மாறற்ற வத்துவித மாண்பு மடுத்ததே.

1756. எள்ளளவு மில்லை யிரண்டுபட்ட பேதமெனக்
குள்ளவோ வன்றி யுணரவோ, ஊனமனக்
கள்ளமற்ற சுத்தவருட் கைவல்யக் காட்சியா
லுள்ளமா வுள்ள வுரஞ்சால் சொருபத்தே.

1757. தன்னருளா லத்துவிதத் தத்துவஞா னப்பதங்கண்
டென்னதுநா னற்றபே ரின்பவாழ் வெய்தலுற்றேன்;
அன்னியமொன் றற்ற வருட்சிற் பரவெளியாத்
துன்னியவவ் வாழ்வு சொருபத்தின் வேறன்றே.

1758. அற்பமா மோக வசந்தைதமனச் சுட்டுணர்வாங்
கற்பனைதீ ரொட்பநுட்பக் கைவல்யங் காண்டலாற்
கற்பதற்கு நானென்றுங் காண்கிலேன், சுத்தவருட
சிற்பரமா வோங்கு சிவச்செம் பதத்திலே.

1759. தன்னினிரண் டற்றொளிர்மெய்த் தத்துவஞா
[னானுபவத்
தென்னதுநா னற்றொழிந்தே னெல்லாமல்
[வொன்றேயா
அன்னதே யென்னுண்மை யாக வவிர்தலால்
என்னின்வே றில்லைமற்றவ் வெல்லாமோ ரென்மயமே.

1760. ஒன்றே யலான்மற் றிரண்டற் றொளிர்சொருப
வென்றிசேர் வாழ்வு விளைதலா லுள்ளத்திற்
கன்றியநா னென்னுமகங் கார முனைப்போடு
பொன்றியது சுத்தவருட் பூரணத்தில் யாவுமே.

1761. வென்றிசே ருண்மை விளக்கமா வுள்ளத்துத்
துன்றுமே யான்ம சொரூபானு பூதியால்
அன்றிமற் றொன்றில்லா வருட்பரமே யென்னுநல
மன்றவியல் கின்றேன் மனோதீத மாண்பதத்தே.

1762 சிற்பதத்தே யென்னுண்மை தேறலாற் சுட்டறிவாய்
கற்பதற்கோ வன்றிமனக் கற்பனையிற் சுற்றுது
நிற்பதற்கோ வேறோர் நிலையுமிலாக் கைவல்யத்
தற்பரமா மத்துவிதச் சார்புதலைப் பட்டதே.

1763. ஊனமற்ற சுத்த உணர்வான மெய்ப்பதத்திற்
போனதுமுன் மெய்போற் புலனான முப்புடிகள்;
யானிதுவென் றற்போ லிரண்டுபட யாதுமில்லை;
மோனவியன் சிற்பரங்காண் முக்காலு முள்
[பொருளே.

## உஎ. அத்துவிதானு பவம்

(குறள்)

1764 யாதுமே யல்லேன்மற் றென்னையன்றி யாதுமில்சத்
போதமா வுள்ளேன் பொலிந்து.

## உஅ. அஸ்பரிச யோக அடைவு

(கொச்சகக் கலிப்பா)

1765. பாண்டிய நாட்டுப் பரம சிவமிதயத்
தீண்டிய வாற்று விதயம் பரசிவமாய்
மூண்டில்வாழ் வானபர முத்தி சொரூபமாய்த்
தீண்டியது *தீண்டாச் சிவஞான யோகமே.

* தீண்டாச் சிவஞான யோகம் - சிவஞான வடிவான அஸ்பர்ச யோகம்.

1766. வேண்டாமை யென்ற விழுச்செல்வச் சீர்மையளித்
தாண்டானை வேண்டிமெய் யன்படைந்தே னுள்ளத்
தீண்டாத யோகந் தெளிய விளைந்தியல்பா [திற்
றீண்டா லதன்பின் னிகழ்த்தவென் னுள்ளமே.

குறிப்பு:—தீண்டாத யோகம் - தீண்டாமையாகிய யோகம், அஸ்பரிசம் என்னும் ஞான யோகம்; நீளல் - நிரந்தரமாக நிகழ்தல்; நிகழ்த்தல் - இயற்றுதல் தன்னை யழித் தெழுந்த தன்மயா னந்தருக் கென்னை யுளதொன் றியற்றுதற்கு - உள்ளது நாற்பது (31); நிகழ்த்துதல் கூறுதலு மாம். சகஜஸ்திதிச்சார்பிற் சாற்றுவதற்கு யாதுமில்லை என்பதாம். நானென் றொரு முதல் என்ற பாடலில் மோனந்தனை விளைத் தால்இனி யாது மொழிநவது எனத்தாயுமானவர் கூறியாங்கே ஆசிரிய ரும் இவ்வாறு கூறினாராம்.

## உகூ. அமரத்துவம்

(குறள்)

1767. அறிவைக் குலைத்த வருட்சிற் பரன்றுட்
குறவுபூண் டுய்ந்த துயிர்.

குறிப்பு:—அறிவு - மனவறிவு, சுட்டறிவு.

1768. அறிவுண்மை யாக வகந்தெளிந்தாங் குள்ளத்
திறவு தவிர்ந்த திகத்து.

குறிப்பு:—இறவு - இறப்பு.

1769. உள்ளத்தே வாழ்வா வுயிர்க்குமுணர் வாலிதயத்
தெள்ளினேன் மோக விறப்பு.

குறிப்பு:—மோக விறப்பு - பிரமாத வடிவான மரணம்; மாய விறப்பு எனவும் பாடம்.

1770. நிலைக்களமா முண்மை நிறைவுணர்வாற் சாவாக்
கலைக்கனலா மென்றன் கருத்து.

1771. பாசப் புணர்ப்பறலாற் பற்றிற் றிதயத்து
நாசமற்ற வுண்மை நலன்.

(வெண்பா)

1772. ஒரேதமற வாண்ட வுடையா னருளாற்
றிரோதமறச் சித்தந் தெளிந்தே—சொரூபத்
துயிர்த்தெழுநான் பெற்ற வுணர்வாலே சாவா
வியற்றகைமை யார்ந்த தெனக்கு.

1773. சுத்தவறி வான சொரூபா னுபூதியொளி
வித்தகமா வாழ்வில் விளங்கவே—ஒத்த
சமரசமா மோன சகஜ நிலையிற் சார்பால்
அமரநிலை கூடிற் றகத்து

1774. நேரான மோன நிகழ்ச்சியா லென்னுளத்திற்
பேரா தொளிர்சொரூபப் பெட்புறவே—ஆரா
வமுத சொரூப வருள்வாழ்வாற் சாவா
வமரநிலை கூடிற் றகத்து

1775. அமைதியுற்ற வாழ்வை யமுதவாழ் வாக
வமைதலா லோர்ந்தே னகத்தே—அமுத
சொரூப வுணர்ச்சிகூர் சுத்தவருட் போகப்
பராஅமிரு தானு பவம்

1776. ஓங்குசிவ ஞானி யொளிப்பிறை யாந் தெய்வவருட்
பாங்குபெறு மோனப் பதத்திலே—ஓங்குசுப
சாந்தானு பூதி தழைத்தலா லன்புருவா
வார்ந்தே னமுதத் துவம்.

1777. சுத்தவறி வாகத் துலங்கலா லென்சொருபம்
புத்தமுத போகமுள்ள பொங்கியதே—சித்தத்
தெளிவான வுண்மைத் திகழ்ச்சிசேர் சாந்தி
விளைவாலே வெப்பந் தணிந்து.

1778. மறப்பிலா மோனவருள் வாழ்க்கையுண் டாகச்
சிறப்பா வமுதநிலை சேர்ந்தேன்—மறப்பால்
வருமரணம் போக வடுத்ததா லென்றுட்
குருரமண போதக் குலா.

1779. ஊழிகளுக் கூழியா முண்மைப் பரவொளியில்
வாழ்வை பெற்றவருள் வைபவத்தால்—பாழிற்
பிறந்திறந்து சோர்ந்தவகப் பெட்பிழைப்புத் தீரச்
சிறந்தசிரஞ் சீவியா னேன்.

(கொச்சகக் கலிப்பா)

1780. கோகம் விசாரவாளுட் கூர்மையால் வஞ்சவியா
மோக மறலி முடிந்தொழியச் சிற்பரமா
வேக சொரூப வியல்வாழ் வியைதலாற்
சாகலற வாழ்கின்றேன் சாவா விழுப்பதத்தே.

### ௯௦. வைராக்கியம்

(கொச்சகக் கலிப்பா)

1781. ஆண்டா னருளே யடியனேன் வாழ்வாக
மூண்ட வியற்பர மோனானு பூதியால்
வேண்டா தொழிந்தேன் விகலபே தங்களாப்
பூண்டமனே மாயா விலாசப் புலன்களே.

### ௯௧. உள்ளத்துறைதல்

(வெண்பா)

1782. ஒருவாத் தியானவுணர் வூற்றெடுக்க வுள்ளக்
கருவாக் கருத்துட் கலந்தான் — குருவாப்
பரமார்த்த மோனவருட் பண்புணர்த்து ஞானத்
திருவார்த்தை யாடுஞ் சிவன்.

### ௯௨. கைமாறின்மை

(வெண்பா)

1783. தன்னைநா னேருந் தரத்தேனோ வோர்தலுற்ற
வென்னையே நானறியா வேழையேன் — மன்னியமெய்
யன்பறிவா வென்னா டகமகமென் றாண்டவனுக்
கென்கடவே னேழையேன் யான்.

### ௯௩. நைஷ்கர்மிய சித்தி

(குறள்)

1784. செய்யவொன் றில்லாத் திதியிலே வைத்தென்னை
யுய்யக்கொண் டானுடை யான்.

(வெண்பா)

1785. கண்ணலா வில்லையருட் காட்சியென மோன நிலை
நண்ணலாய் நானற் றெழுந்ததாற்—பண்ணலாங்
கன்மாதி சாதனையெக் காலுமெனக் கின்றியொரு
தன்மாத் திரநிலைசார்ந் தேன்.

(கொச்சகக் கலிப்பா)

1786. ஆண்டவனை யெண்ணி யனவரதம் போற்றலன்றி
ஈண்ட வெனக்குமற் றேதுங் கருமமில்லை
பூண்ட சிவானுபவம் பொங்கமேன் மேலகத்துத்
தூண்டலுற்ற வாண்டவன்பாற் சொக்கலுற்ற
வாற்றாலே

௨௪. குறைவின்மை

(குறள்)

1787. அறிவான வுண்மையா வான்ற சொரூப
நிறைவாற் குறைவகன் றேன்.

1788 அறிவாக வுள்ளத் தவிர்சொரூப வுண்மை
நிறைவாற் குறைவொன் றிலேன்.

1789. யாதே யுளதுமற் றென்னை யிறைவனருள்
போதானு பூதிபுணர்ந் தேற்கு.

1790 குருபர னுள்ளான் குறைவறக் காக்க
வொருவரல் வேண்டா வெனக்கு.

(வெண்பா)

1791. சுட்டற்ற மோன சொருபானு பூதியருள்
சிட்டன் சிவசொருபச் சீராளன்—பட்டனு
வென்னையாட் கொண்டான்பே ரின்பவருட் பேறு
பின்னையெனக் கென்னே பிழை. [பெற்ற

1792. தன்பார மாவனைத்துந் தாங்கும் பராசத்தி
நம்பான் சிவனை நமோநமவென்—றன்பா
லடுத்தலா லென்பா லவலமிலே னென்னைக்
கொடுத்தலா லில்லேன் குறை.

1793. குறைப்பட்ட நான்போற் பரிவுகொள் கின்றார்
நிறைப்பட்ட நெஞ்சனு மென்னை—உறைப்ப
வருட்கருவுற் றான்றவோ ரம்மையப்பன் சேயா
யிருக்குமெனக் கென்னோ குறை.

1794. யாண்டுநான் யாண்டுநா னேகினே னென்னின்முன்
னாண்டுதா னாண்டுதா னாகினான்—ஆண்டா
னருட்பாத தூளி யடியேன் றலைமே
லிருப்பதா லில்லேன் குறை.

1795. அகத்தே யருவா மறிவுண்மை தானுப்
புறத்திலருட் போத குருவா—மிகத்துலங்கி
என்னையாட் கொண்ட விறைரமணன் சேவடியிற்
மன்னியேற் கில்லை மலைவு.

1796. மயக்கறுதி யாக மடிந்தொழிய வுள்ளத்
துயிர்க்குறுதி யான வொளியாற்—செயக்கடவ
வெல்லா மியற்றிமுடித் தின்பவியல் பற்றலா
லில்லாமை யில்லை யெனக்கு.

1797. அம்மையப்ப ரான வருட்பரம ரென்னகத்திற்
செம்மையப்ப ராகத் திகழ்தலால்—இம்மையொப்ப
வெம்மையுமென் னெஞ்சத் தினிதொளிரும் பேரின்ப
நன்மையன்றித் தீமை யிலை.

1798. போத சொரூபப் புகல்காட்டி யென்னகத்திற்
பேதமறக் கண்டவருட் பெற்றியான்—பாத
வொளியிலே வாழு முழையேற்கு மோக
விளிவரலெஞ் ஞான்று மிலை.

1799. கள்ளக் கரவாங் கருத்துத் திருத்தமுறத்
தெள்ளத் தெளிந்து சிவமாக—உள்ளத்
துறுதிபெறச் சேர்ந்தே னொருகுறையு மில்லா
நிறைதிருவா முண்மை நிலை.

1800. சிற்றம் பலமே சிவசொருப மாகமிகக்
கற்றும் பாவியுங் காதலித்தும்—பற்றுசிவ
பத்தியுணர் வான்றபெரும் பாக்கியமாச் சேர்ந்த
கெத்தனைய நல்குரவு மில். [வெனக்

1801. புத்தியிலே நின்றவருட் போத சொருபமே
சித்தியாத் தேறத் தெளிதலாற்—புத்தியிலே
யூனமுனைப் பற்ற வுதாரவருட் பூரணத்தில்
யானுடைய மற்றொன் றிலேன்.

1802. குருமணியைக் கூடிக் குலாவலுற்ற நான்மற்
றொருமணியை யாசித் துழலேன்—குருமணியின்
பார்வையா லெங்கும் பரந்தவருட் பூரணத்தே
தேவையொன்று தேர்கின் றிலேன்.

1803. தேவையொன்று தேறேன் சிவசொருபப் பூரண
பார்வையுளம் பற்றிப் பரமாகக்—கூர்வயிரக் [மெய்ப்
காட்சியே மோனவருட் கற்பகமாப் பொங்கு
லாட்சிசெய்வ தாலென் னகத்து. [செங்கோ

1804. குருவருளான் மோனக் குலாநிலா வாகப்
பொருவருசாந் தானுபவம் பொங்கும்—சொருப
[வொளிச்
சிந்தா மணியிருக்கச் சித்தத்தே தைனியத்தாற்
சிந்தாது சீர்னத மெனக்கு.

1805. பஞ்சமே யாயினுமிப் பாரகத்திற் செம்மைசேர்
நெஞ்சமே யின்றுகுறை நின்றனக்கே—பஞ்சமற
வற்றுப்பே ரின்ப வளஞ்சுரக்குந் தெய்வவருட்
பொற்றாட் சரண்புக்க தால்.

1806. குறையே குறுகா சுதாகலந்தேர் சாக்கி
நிறையுணர்வா மோன நிலையிற் —சிறிதுந்
துவித மிலாத சொரூபமா வாழ்வோர்
கெவித மெளிமையுண் டாம்.

1807. நிற்ப தகந்து நிறைபரமா மோனவருட்
கற்பகமே நானேர் கவலிலேன் —சிற்பரமாத்
துன்று சிவானுபவச் சூழலிலே வாழ்வேனுக்
கென்றுமொரு பேரின்ப மே.

(கொச்சகக் கலிப்பா)

1808. இறக்கமில்பே ரின்ப வியல்வெளியே வாழ்வா
மறக்கலுற்ற வொட்ப மனத்தால் அளர்த்த
மறக்கவொணா மோனநா னனுபவம் பொங்க
நடக்கலுற் றேனுக்கு நலிவொன்று மின்றே.

1809. சித்தம் பரவசமாச் சேரவென் னுள்ளத்துத்
தித்திக்கும் பாதந் தியான வுணர்வுறவாம்
பத்திக் கொழுமல் படைக்கலுற்றே னுக்குமற்
றெத்தகைய சிந்தையுமே யின்றிக் கழிந்ததே.

1810. இருட்களி சேர்ந்த வியற்குறை பொன்ற
வருட்கட லாடி யமைந்த திருத்திப்
பெருக்கமார் சுத்தப் பிரம்மானு பூதி
யிருக்கலா லென்னகத் தேக்கமொன் றின்றே.

குறிப்பு:— இருட்களி - இருள் சேரியற்கையான யானென்னுஞ் செருக்கு. இயற்குறை - ஜீவப் பிரகிருதியான மனக்குறை.

1811 நண்ணக் கிடைத்தமெய்ஞ் ஞானநாட் டத்திலெனக்
கெண்ணக் கிடவது யாதுமில்லை, யானெனுமவ்
வெண்ணப் பிறப்பே யிலாத வகண்டவருள்
வண்ணமப் பிழம்பா வளர்தலா லென்வடிவே.

1812. யாதொரு பேதமு மில்லா வியற்பரசற்
போதமே கைவல்ய பூமியா வைகுவேற்
கேத வகந்தையில்லை யிச்சையோ டச்சமில்லை
மேதகவா மோன வியோமப் பரமலாதே.

1813. எத்தாலும் யாதோர் குறைவில்லேன் சுத்தசச்
சித்தாக வென்னுருவு தேறத் தெளிதலால்;
* அத்தா மலகஞா னனுபவத் திவ்வுலகு
வித்தார மானமஞ்ஞே மாயா விலாசமே.

* அத்தாமலக ஞானனுபவம் – உள்ளங்கை நெல்லிக் கனிபோலத் தெளிந்த உண்மை ஞானனுபவம்.

1814. பற்றற் றொளிர்சொருபப் பற்றே யலாதுமற்றெப்
பற்றுமில்லை யூனப் பசுபாசப் பற்றொழிவால்;
வெற்றவெளி யான விசுத்தவருட் சிற்பரவாழ்
வுற்றொளிர வுள்ளத் துளேனுக்கோ ரூனமின்றே.

1815. ஊதியமா வாருயிருக் குள்ளவுண்மை சுத்தவருட்
போதியா யுள்ளம் புணர்தலுற்றே னுக்குமற்
றேதிலவை யின்மையால் யாதுகுறை, இன்பவருட்
சோதியா வுள்ள சொரூப விலாசத்தே.

1816. களிசே ரகப்பேய் கழன்றொழிய வுள்ளத்
தொளிவெளியா வுற்ற வுதார சொரூபத்
தெளிவே சிவானுபவச் சீர்மையாச் சேர்வால்
இளிவரவா மோக விடர்ப்பா டிலேயே.

1817. தடையான பாசந் தகர்ந்தொழியக் கண்ட
வுடையான் திருவடியே யுண்மைப் பொருளா
வுடையேன் உணர்வா லொருகுறையு மில்லேன்
படையாநின் றோங்குசிவ பாக்கியவாழ் வாலே.

1818. ஆண்டகுரு பாத வருள்விலா சத்திலகத்
தீண்ட விளங்கலா லேக சொரூபவுண்மை
வேண்டவோ வன்றி வெறுக்கவோ யாதுமில்லை
ஈண்ட லிலாமையால் யானெனுமப் பொய்மனமே.

1819 அடிகளா வெம்மைநன் காண்டான் அடிக்கீழ்க்
குடிகளா வுற்ரோருங் குறைப்படா வாறு
மிடியளா வூன வெறும்பா ழுவாவைக்
கடியலா லின்மைக் கவல்கடந் தோமே.

1820. ஓலமிட் டக்கா லுதவவென் றெல் லோரகத்துஞ்
சால வியைந்தசிவ தத்துவனைக் கண்டுகொண்டேன்;
ஓலமிட்டுக் கூறயா தோர்குறையின் ருகவகஞ்
சாலவருட் பூரணமாந் தன்மைசார் வுற்றதே.

1821. தன்மையா லாண்ட சதாசிவன்பா தத்திலெனக்
கின்மையொன் றில்லை யியல்பான வுண்மையன்றி
அன்மைசேர் நானெனுமோ காணவப்பா ழுற்றதாம்
பன்மைசேர் பேதப் படரற் றொழிந்ததே.

1822. நேசமுற்ருர் நெஞ்சமே நீங்கா துறைசொந்த
வாசமா வைகி வளஞ்சுரக்கும் மன்னனருட்
பாசமே யன்றியயற் பாசமோ ராமனத்தேற்
கேசறவொன் றில்லையே ரின்பவியற் செம்பதத்தே.

குறிப்பு :— வாசம் - இருப்பிடம்; ஏசறவு - துன்பம், வருத்தம்

1823. வெருக்கொளா வாறுவெம் பாச விலாசத்
தருக்கனு மோக வகப்பாழ் செகுப்பாற்
குருக்களா வாண்டவருட் கோமானுக் காளா
யிருக்கலால் யாதோ ரிகம்பரங்கா ணேனே.

குறிப்பு :— பாச விலாசத்து வெருக்கொளாவாறு என வியையும்.

1824. ஆண்டவன்சற் போத வருள்விளக்கக் கண்கூடாக்
காண்டலுற்ற மோனவியற் கைவல் லியபதத்திற்
பூண்டசிவ போகப் பொலிவா விளங்கலுற்றேன்
வேண்டவெனக் குண்மையா வேறொன்று மில்லையே.

1825. ஆண்டவன்மெய்ஞ் ஞான வருள்வெற்றிச் சின்னமா
வீண்டலுற்றே னுள்ளத்தில் யாதுங் குறையில்லேன்;
ஆண்டவனுக் காளா வடைந்தாங் ககந்தையற
மூண்டதுமோ ரனுபவ முத்திப் பெருவாழ்வே.

1826. வெருக்கொள் செருக்கான மித்தியா புத்தி
யுருக்குலைந்து போக வுடையான்கண் ணேக்கா
அருக்கனு வுள்ளத் தவிர்சொருப வுண்மைப்
பெருக்கமுற்றே னுக்குச் சிறுக்கமொன்று மின்றே.

1827. உள்ளத்தி லென்னை யொடுக்கியே என்னு
[டொன்றுத்
தெள்ளத் தெளியத் திகழ்சொருபச் செம்மலருள்
வெள்ளக் கடலில் விகசித்தமோ னனுபவத்
தெள்ளமுத முண்டு திளைக்கின்றேற் கென்குறையே.

1828. வெளியாக வுண்மை விளங்கவென் னுள்ளத்
தொளிசேர் சொருபமா வுற்ற பிரான்பாற்
றெளிவான மோனஞ் செழிக்கலுற் றேனுக்
கிளிவரலென் றென்றுமோ ரெட்டுணையு மின்றே.

1829. ஆனந்த மோன வருட்செம் பதத்தில்என்
னூனந் தவிர்ந்தேன் உறுதிசேர் வாழ்வுபெற்றேன்
வானந் தவிர்ந்துலகு வற்கடமே யாயிடினும்
யானந்த மில்லா திருப்பேன் செழிக்கவே.

1830. யானு தரித்த வெலாங்கனவாத் தாங்கழன்று
போனலும் போக்காடாம் பொல்லாங் கெனக்கில்லை
யானனை வுண்மை யிதய வருள்வெளியிற்
றுனேதா னுனபரந் தாமமாப் பொங்கியதே.

1831. உராத்துணைத்தே ராம்பொய் யுலக மயக்கம்
ஒராத்துமஞா னத்தா லொழிந்துவிளங் குள்ளத்
தொரார்த்தியாற் சிந்தை யுகைப்புண்டு செய்யும்
பிரார்த்தனைக்கோர் சற்றும் பிரமேய மின்றே.

1832. ஒப்பமா வுள்ளதன் னுட்ப வுணர்வொளிச்
செப்பந் தெளியவென் சித்தத் தொளிருமெய்
யப்பனுர் மோன வருட்பத வாழ்வில்வின்
ணப்பமா னு*னென் றறிந்திலே னேதவே.

* ஒன்றறிந்திலேன் என்றது குறையொன்றுமில்லேன் என்றவாறும்.

1833. யாமா விதயத் திலகு சொரூபவருட்
கோமான் பதமே குறிக்கொண் டொழுகலால்
ஏமவாழ் வான வியற்பரமெய்த் தன்மைசார்ந்
தேமாக்க லுற்றேனுக் கென்ன குறையுமின்றே.

## கூக. கைவல்லியம்

(குறள்)

1834. கண்டுகொண்டேன் சுத்தவருட் கைவல்ய பூமியகத்
தண்டருந்தாங் காணு தது.

1835. அண்டருந்தாங் காண்ட லருஞ்சிற் பதவொளியாக்
மண்டியதென் னுள்ளம் மலர்ந்து.

1836. கடந்தவருட் கைவல்யக் காட்சியா வுள்ளத்
தடைந்ததொட்ப நுட்ப வருள்.

1837. காண வொணுதவருட் கைவல்யத் தற்பரமா
மாணவிளங் கிற்றென் மனம்.

1838. மனத்தியல்பா நன்கு மலர்ந்த சொரூபத்
தினித்தலுறக் கண்டே னியல்.

1839. காண்குற்ற தெல்லாந்தன் காணியாக் கைவல்ய
மாண்புற் றொளிரும் மனம்.

1840. காண்டல்கா ணுமை கடந்தவருட் கைவல்ய
மாண்பா லொளிரும் மனம்.

1841. காண்டலருந் தன்மையொன்று கண்டேன்கை
*பூண்டவெறும் போதப் புலம். [வல்லியமாப்

* பூண்டவருட் எனவும் பாடம்.

1842. காணப் படைத்தவருட் காட்சியாற் கைவல்யம்
மாணவிளங் கிற்று மனத்து.

1843. அற்புதவாழ் வான வருட்கே வலங்கண்டேன்
சிற்பரமா வுள்ள சிவத்து.

1844. கற்பனைதீர் சுத்தவருட் கைவல்யங் கூடியது
சிற்பரமா வுள்ளந் தெளிந்து.

1845. திருவருட்கை வல்யச் சிறப்பா லகத்து
மருவலுற்ற தின்ப மகிழ்.

1846. முற்றக் கடந்த முழுமுதற்கை வல்லியவாழ்
வுற்றுக் களித்த துணர்வு.

1847. காணக் கிடைத்தவருட் கைவல் லியபதத்தே
மாணத் துலங்கியதென் வாழ்வு.

(வெண்பா)

1848. ஆண்டவன்சா தித்த வருட்காட்சி யாலெனக்குத்
*தீண்டலரு யோகசித்தி சேர்தலாற்—காண்டலரு
சிற்கனமா மோன சிவானுபவக் கைவல்யத்
தொற்கமற வுள்ளே னுறைத்து.

* தீண்டலருயோகம் - அஸ்பர்ச (மானஞான) யோகம்

1849. வண்ணமா மோனவருள் வாழ்க்கையிலே கைவல்யந்
திண்ணமாத் தேறத் தெளிதலால்—எண்ணுமனக்
கற்பனை பேதங் கழன்றொழியத் தானகிலத்
தொப்பமா வுள்ள துணர்வு,

1850. பிறப்புரிமை யான பிரம்ம சொரூப
முறப்புணர்வ தாமெய் யுணர்வால்—பிறப்பிறப்பாத்
துன்று மயக்கச் சுழற்சிதீர் கைவல்யக்
குன்றமா நின்றேன் குவர்.

1851. காண்பதற்கே கேட்பதற்கே காதலாய்ப் பாசபந்தம்
பூண்புலத்தூ டாடிப் புழுங்காது—மாண்புடைத்தாக்
காணக் கிடைத்தவருட் கைவல்யக் காட்சிநான்
பேணக் கடவபெரும் பேறு.

1852. உண்மை யொளியா லுலகமுற்றப் போர்த்தகுரு
வண்மைசேர் சுத்தவருள் வல்லபத்தால்—நுண்மை
[சேர்
கைவல்ய வாழ்க்கையகங் கைந்நெல்லி யிற்றெளிவாக்
கைவந்த துள்ளங் கலந்து.

குறிப்பு :—அகங்கை - உள்ளங்கை

1853. எண்ணமறச் செற்ற விறைவன் சொருபவருள்
வண்ணமே யென்மனத்தின் வண்ணமாய்—உண்
[ணவா
வோங்குகை வல்ய வுணர்ச்சிப் பெருக்கவொளி
யாங்கும் பரந்த தெழுந்து.

1854. அலவலுற்றுச் சிந்தை யழிந்தே னருளிற்
குலவலுற்று நெஞ்சங் குளிர்ந்தேன்—அலவலுற்ற
சிந்தையும்போய் யாகத் தெரிந்தவருட் கேவலத்திற்
புந்தியமைந் தின்புணர்ந் தேன்.

1855. யானேயா னாக விருந்தொளிர்பே ரின்பமய
மோனனு பூதி முகத்தலாற்—றானே தா
னாகவியல் கின்ற வதனோ டனனியமா
மேகவியல் கண்டுகொண் டேன்.

1856. சற்குருவா வாண்ட சதாசிவமாம் போதமே
தொக்குருவா வுள்ளந் துலங்கலாற்—கற்குமுயர்
கல்விப் பொருளான கைவல்யந் தானேயாப்
புல்லியதென் வாழ்க்கைப் புலம்.

1857. மோன நிலையே முடிவா வொளிர்சொருப
ஞானந்தா னேயிமையா நாட்டமாய்—வானவரின்
மிக்கபெரு வாழ்வெனக்கு மேவவகத் தென்னியல்பாய்ப்
புக்கதுகை வல்யப் புலம்.

(கொச்சகக் கலிப்பா)

1858. உள்ளவோ வன்றி மறக்கவோ வொண்ணாது
துள்ளு மகந்தை யெனச் சூதறநா னென்று
தெள்ளத் தெளிவாத் திகழ்வதென் னுள்ளுணர்விற்
கள்ளமற்ற சுத்தவருட் கைவல் லியசிவமே.

1859. உள்ளதைப் பற்றியே உள்ளதுபோ லிவ்வுலகு
கள்ள மயக்கக் கருத்தர்முற் றோன்றுவது;
துள்ளுமனக் கற்பனை சொப்பனமா மாய்மாலக்
கள்ளமற வுள்ளங் கலந்ததுகை வல்லியமே.

1860. இருணலியப் புக்க விறைவன்சீ பாதப்
பொருணலமே சுத்தவருட் பூரணவாழ் வாகக்
கரணங் கலத்தலாற் கைவல்ய வுண்மைத்
தரணமார் சாந்த சதாசிவஞ்சார்ந் தேனே.

1861. அவத்தைசேர் மோக வகந்தையைச் சாடிச்
சிவத்துவ மாகச் செழித்து விளங்கு
சுவத்த வியல்பே சொருபவாழ் வாக
விவத்தைசேர் கைவல் லியமெய்கண் டேனே.

1862. சீரார்ந்த சுத்தவருட் செல்வஞ் செழிக்கவெனக்
கேரார்ந்த நோக்கா லிதயம்புக் காண்டபிரான்
கூரார்ந்த ஞானக் குலாவால் அடியனேன்
காரார்ந்த பாசமறக் கைவல்யங் கண்டேனே.

1863. ஊனக் கலக்கமற்ற வொட்பநுட்ப மாட்சிசேர்
மோனப் பதமா முகத்தலுற்ற தென்னுணர்வு
யானுட் படமற் றெதுவுமற்ற சுத்தவருள்
வானத் துரிய வளஞ்சேர்கை வல்லியமே.

1864. எங்குமாப் பொங்கு மியற்சிற் பரசொருபத்
துங்கமோ னத்தாற் சுடர்தலுற்ற வுள்ளத்திற்
றங்கலாற் கண்டுகொண்டேன் சச்சிதா னந்தசுப
மங்கலவாழ் வான வளங்கிளர்கை வல்லியமே.

1865. ஒன்றுபட்ட மோன வுணர்வா லிதயத்துத்
துன்றலுற்ற வாழ்வு சொருப சுவானுபவம்;
தொன்றுதொட்ட வுண்மைத் துலங்கமா வுள்ளவருள்
வென்றியிற்காண் குற்றேன் விசுத்தக்கை வல்லியமே.

1866. அருட்போக வாழ்வா வகத்தே சிவச்செம்
பொருட்போக சாந்தி புணர்த்தினேன் மோனத்
திருப்பாத வுண்மைத் தெளிவிலே பாசங்
கரப்பால் விளங்கியது கைவல் லியமே.

1867. மோன வருள்வெளியே முத்தி சொரூபமா
நானடைந்த சுத்தமெய்ஞ் ஞானனை பூதியாற்
றீன மயக்கச் செருக்கான வாணவப்பா
ழீனமற வுள்ளத் தியன்றதுகை வல்லியமே.

1868. விட்டொழிவி லாதவருள் வித்தகப்பே யாகிவென்னை
ஒட்டறவுட் பற்றியொளி ரொட்பநுட்ப வுண்மையாற்
சுட்டறிவாம் பொய்த்துவித சொப்பனமாங் கற்பனை
கட்டறிவெங் கெங்குங் கலந்ததுகை வல்லியமே. [யின்

குறிப்பு:—பேய்த்தனம் விடவிடாப் பேயாய்ப் பிடித்து என்னும் அட்சர மணமாலை (71) நோக்குக,
ஒட்டற–யானென தென்னும் அகந்தை மமதைகளின் தொடக்கற.

1869. புத்தியிற்புக் காண்டவருட் புண்ணியன்சீ பாதவொளி
சுத்தத் துரியமாச் சூழத் துலங்கலான்
மத்தமனக் கற்பனு மாயா விலாசமா
அத்தனையும் பொய்க்க வவிர்ந்ததுகை வல்லியமே.

1870. நயக்கலுற்ற சுத்தமெய்ஞ் ஞானப் பிரான்றுள்
உயிர்க்குயிரா வுள்ளத் தொளிர்தலாற் கண்டேன்,
மயக்கமா வுற்றமனே மாயா விலாசக்
கயக்கமில்பே ரின்பவருட் கைவல் லியமே.

1871. நன்னயமார் தன்னடிக்கோர் நாயேனை யாண்டு [கொண்டான்
தன்னையே யன்றிமற்றோர் தத்துவமுந் தானறியான்
சன்னிதியிற் சார்த்தசாட் சாற்காரத் தாலடைந்
மன்னியபே ரின்ப வளஞ்சேர்கை வல்லியமே. [தேன்

1872. கெட்டழியப் பெற்ற கிரந்தியாற் பேதமயற்
சுட்டொழியப் பெற்ற சொரூபத் துலக்கத்தால்
தட்டுப் படாத சதாசிவமாய் நானெனும்பொய்க்
கட்டழிய வாழ்கின்றேன் கைவல்யச் செம்பதத்தே.

1873. வெளிறனேன் சுத்தவருள் வெற்றித் திறத்தா
லிளிவரல்சேர் பாச மிகந்தொழிய வுள்ளத்
தொளிபெறவாழ் கின்றேன் உபசாந்த போகக்
களியமுதுண் டொட்பநுட்பக் கைவல் லியத்தே.

1874. பேணக் கடவசிவம் பெட்புறவென் னுள்ளத்து
மாணத் துலங்கலால் வாழ்வு வசீகரமாய்த்
தாணிழலின் மோன சமாதிசார்ந் தேனுக்குக்
காணியா வுள்ளவருட் கைவல்யந் துன்றியதே.

1875. பூண்டவறும் பாசப் புணர்ப்பாலே சிச்சடமா
மூண்டவகங் கார முனைப்பை யொடுக்கியகத்
தீண்டியது யான்யானென் றின்ப வியற்பரமாக்
காண்டலரு மோனவருட் கைவல்யக் காட்சியே.

1876. மூண்டெழுந்த நானெனும்புன் மோகமுனைப் [பற்றொழிய
வாண்டவன்கண் ணோக்கா லருட்சிற் பரவெளியா
வீண்டவிளங் குற்ற வெனுது சொரூபத்திற்
காண்டலுற் றேன் சித்தசிவக் கைவல்ய மாட்சியே.

1877. ஆண்டவனின் மிக்க வருந்தெய்வ மில்லையெனக்
காண்டவனே யெல்லா வருநலமும்; பாழகற்றி
யாண்டவன்சற் போத வருள்விளக்கத் தாலகத்திற்
காண்டலுற் றேன் காண்டலருங் கைவல்ய பூமியே.

1878. கேழ்வளர்மெய்ஞ் ஞானக் கிளரொளியிற் பாசவகப்
பாழ்கரந்த வாற்றற் பராற்பரமா மோனவருள்
வாழ்வுவெளி யாக மலர்ந்தவகம் முற்றமுற்றக்
காழ்வயிர மானவியற் கைவல்ய மானதே.

1879. சிற்பரமாத் துன்று சிவானுபவத் தாலகத்துத்
தற்பரமெய் வாழ்வு தலைப்பட் டொளிர்தலால்
அற்பவகங் கார வசட்டுமனப் பாழ்மயக்கக்
கற்பனு பேதமறக் கைவல்யங் கண்டதே.

1880. சொற்பனத் தோற் றத்திற் சுழன்றே துயர்வுறுமிவ்
வற்பனேற் காண்டா னருளியதோர் சுத்தவருட்
சிற்பரா னந்த சிவத்திலே மோகமனக்
கற்பனைதீர் வாலகத்திற் கைவல்யங் கண்டதே.

1881. நெஞ்சிலே மோன நிறைவெளியா நீடலுற்ற
விஞ்சையாற் பேரின்ப வீடா விளைந்தபிரான்
செஞ்சரண வாழ்வாச் சிறக்க விளங்குவது
செஞ்சவே யூன்று சிவாத்துவிதக் கேவலமே.

1882. தன்னை யலாம லெனக்கோர் சரணில்லை
என்ன வறிந்தாங் கிதயத் திருகிருகத்
தன்னையே பற்று சமாதியிலே தன்னையன்றி
யன்னியமொன் றின்ற வவிர்ந்ததருட் கேவலமே.

1883. கள்ளமன மாயைக் கலக்கமென் றென்றுமற்ற
வுள்ளமே கைவல்ய வொண்பதமாக் கண்டுகொண்
தென்னியவவ் வுண்மைச் சிவபதமே தாரகமா [டேன்;
வுள்ளதுமற் றெல்லா வுலகங் களுக்குமே.

1884. தலைவன் சொரூபமே தன்சொருப மாக
நிலைபெறக்காண் மோனமெய்ஞ் ஞேயநிஷ்டை யாலே
அலைவுறுசிந் தாகுலஞ்சே ராணவப்பாழ் மோகங்
கலைய விளைந்ததருட் கைவல்ய மாண்பே.

1885. உளைச்சலுற்ற மோகப்பா ழுத்தையகங் காரத்
தளைச்செருக்கு மாயமாத் தட்டழிந்து போகத்
தளர்ச்சி வளர்ச்சியறத் தங்குமதிஷ் டானக்
கிளர்ச்சிசேர் மோனவருட் கேவலமா னேனே.

1886. பரம பரம்பரன்மெய்ப் பாதமே பாவித்
தொருமைசே ருண்மையுணர் வுள்ளங் கிளர்வாற்
றருமங்க ளெல்லாந் தணந்தொழிந்தேன் மோனப்
பெருமைசேர் கைவல்யப் பேறுபெற் றேனே.

1887. பிறந்துழல்யா னென்னுமகப் பேய்க்கலக்கம் பேரத்
திறந்தவெளி யாகத் திகழ்சொருப மோனத்
திறந்த மனத்தாற்பே ரின்பவியல் பாகச்
சிறந்தவருட் கைவல்யச் சீர்மைகண் டேனே.

1888. இம்பரும்ப ரான வெலாவுலக வாழ்வுகளும்
வம்புறுபொய்ம் மாய மனோமயமா மங்கவியற்
செம்பரமா வுள்ளசிவச் சிற்பரமாங் கைவல்யம்
மொய்ம்புறுவாழ் வாகவகம் மூண்டதனு பூதியே.

1889. பொய்யாக வென்னைப் புறந்தள்ளிச் சித்துருவ
மெய்யான தன்னியலே யென்னியலா விஞ்சலால்,
உய்யா மயக்கமற வொட்பநுட்பக் கைவல்யங்
கையா மலகக் கனியா விளங்கியதே.

குறிப்பு:—உய்யா மயக்கம் = உய்யாமைக்கேதுவாகிய மயக்கம்.

1890. துளங்கலற்ற வுண்மைத் துரீயமா மோன
வளங்குலவு வாழ்வு மடுத்த மனத்தாற்
களங்கமற்ற சுத்தவருட் கைவல்யங் கண்டேன்
உளங்கலந்த மோக வுறக்க முணர்ந்தே.

1891. உண்மைக் கடவுளா வுள்ளத் தொளிர்சொருப
வண்மைசேர் வாழ்வே மகிழ்வா மநுபவமா
நுண்மைசேர் சிற்பரமெய்ந் நோக்கங்கூர் சாந்தியாற்
றிண்மைசேர் கைவல்ய சித்தி யடைந்ததே.

1892. சுட்டறிவா மோகச் சுழற்சிசே ராணைவத்தா
லெட்டவொணு வுண்மை யியற்பரமாய்ப் பேரின்பக்
கட்டழகா வுள்ளசிவக் கைவல்ய மாட்சியெனக்
குட்டெளிவா மோன வுணர்வொளியா லுற்றதே.

1893. அண்மையிலே வாழு மனுக்கரோ டென்னையுஞ் [சேர்த்
துண்மைத் திருவருளா லுள்ளத் தொளிர்சொ [ருபன்
வண்மைசேர் சாந்தியே வாழ்வா மலர்தலுறத்
திண்மைசேர் கைவல்ய சித்தி விளங்கியதே.

1894. சித்தமல மான செருக்கறவென் னுள்ளத்து
முத்த சொரூப முனீந்திரன்காட் டிக்கொடுத்த
வித்தகமெய்ஞ் ஞான வெளியின்மற் றத்தனையும்
பொய்த்தொழியக் கைவல்யம் பூமாவாப் பொங்கி [யதே.

1895. சாந்தி தவழ்சொருப சந்நிதியா(ம்) மோனவுணர்
வார்ந்த வகத்தே யகந்தைமனக் கற்பனைதீர்ந்
தார்ந்தேன் சொருபவியல் பானவருட் கைவல்யம்
பேர்ந்தொழிய மாயமா மோகவகப் பேய்க்கூத்தே.

1896. கண்டுகொண்டே னென்சொருபக் கண்மணியை
[யென்னகத்து
மண்டிவந்து தானே மடுத்தலான் மாயமா
மிண்டுசெய்ய லுற்றபுல் வீணர் கரந்தொழியக்
கண்டதுபே ரின்பவியற் கைவல்யத் தன்மையே.

குறிப்பு :—புலவீணர் – புலன்களாகிய வீணர்.

1897. சிற்பரமாத் துன்று சிவக்கே வலநிலையிற்
கற்பனைதீ ருண்மைக் கடவுளியல் கண்டுகொண்
டிற்பதன்றித் தான்றானே ஞேயமா மந்நிலையிற் [டேன்
கற்பதற்கங் கில்லைமற்றோர் கற்பனை பேதமே.

1898. இனமேது மில்லா விறைவனையென் னுள்ளம்
கனமேவ வைத்தவருட் காட்சியாற் பொல்லா
மனமாயை யான மயக்கமற்றே னுக்குக்
கனவுநன வெல்லாங் கடவுட் பரமே.

1899. சித்தக் கலக்கமறத் தேறத் தெளிந்தவருள்
வித்தகத்திற் கைவல் லியவுண்மை மேவலுற்றேன்;
புத்திக் கமுதமாப் பொங்குமக் கைவல்ய
சித்தியிற்காண் குற்றேன் சிவாத்துவிதச் சீர்மையே.

1900. காண்டல்கா ணாமை கடந்தவருட் கைவல்யத்
தீண்டுவதொன் றில்லைமற் றீண்டா ததுமில்லை;
பூண்ட சொரூபவருட் போதானு பூதியால்
வேண்டுதல்வேண் டாமையற விஞ்சியதென்
[னுண்மையே.

1901. வேறுபா டான விகற்பசங் கற்பமனக்
கூறுபா டெல்லா குலையவகத் தான்றவருள்
வீறுசால் சுத்தவெளி விஞ்சலாற் கைவல்யப்
பேறுசால் சித்தி பிறங்கலுற்ற துள்ளுணர்வே.

1902. அற்பனேன் மோக வகப்பா முறத்துலங்கு
சிற்பரமா வுள்ளசிவச் சீர்மையிலே யோர்மையாற்
கற்பனைதீர் சுத்தவருட் கைவல்யங் கண்டுகொண்
[டேன்
பொற்புறுமோ னானுபவம் புந்தியிலே பொங்கவே.

1903. அடிப்படையா வுள்ளசுத் தான்ம சொரூபக்
கடைப்பிடியா லுள்ளத்திற் கைவல்யங் கண்டேன்;
படைப்பெனத்தோன் றுங்கற் பனையிலே நான்முப்
புடிப்படையாற் சற்றும் புலம்பலில் லேனே.

1904. பற்பலவா றாகப் படர்கற் பனைபேதம்
சிற்பரமா வுள்ள சிவத்திற் கரந்தொழிவாற்
சொற்பனமாத் தோன்றுலகச் சூதின்று சுத்தவருட்
பொற்பதமாங் கைவல்ய பூமியில்வாழ் கின்றேனே.

1905. தொக்க சொரூபத் துரீய வருள்வெளியா
வொக்க விளங்கு முதாரஞா னானுபவத்
தெய்க்கவோ வெண்ணவோ வென்னினயல் யாதுமில்
[லேன்,
பொக்க வகந்தைமயல் பொன்றவுற்ற வாற்றலே.

1906. மாண்டொழிய நானெனும்பொய்ம் மாயக் கலக்கமகத்
திண்டலுற்ற சிற்பரத்தில் யான்சொரூப வாழ்வடைந்
[தேன்;
காண்டலறு சுத்தவருட் கைவல்ய பூமியா
விண்டியது காணா வெதிர்தோன் றுலகமே.

1907. தன்னையே தானெனக்குத் தந்த தயாளுபால்
என்னைநான் முற்ற விழந்தொழிந்தே னுக்குமற்
றன்னியமா யாதோ ரறிவுமில்லை கைவல்யவாழ்
வென்னியல்டாத் துன்றிற் றிதய வெளியிலே.

1908. உய்வுள்ளி நானே ருபாயமுஞ்சா திக்கிலேன்;
பொய்வல்ல மாயைப் புணர்ப்பறத்தன் கண்ணோக்கா
லொய்யும் பிராணருளா லுண்மையுணர் வுள்ளமுறக்
கைவல் லியபூமி கைவந்த தாயிற்றே.

1909. கண்ணோக்க லுற்றனைக் கண்ணோக் கியவெனக்குள்
விண்ணோக்க மான விபூதி விளைதலால்
மண்ணோக்க மான மயற்கற் பனைபேத
மன்னனைக்கை வல்லியஞா னானுபவந் துன்றியதே.

### கக. எல்லாப் பேறும் பெற்றேன்

(வெண்பா)

1910. தேர்ந்தேன் சிலசொரூபம் சிற்பரமாந் தன்பதத்தூ
டார்ந்தே னடியே னருளமுதம்—சார்ந்தேன்
அருட்குலமா நீடுமெய் யன்பரினம் பெற்றே
னுருக்கமா மெய்யன் புளத்து.

## 28. ஞானம்

### க. ஞானக் கனியருந்தல்

(கொச்சகக் கலிப்பா)

1911. எட்டாக் கனியெனக் கெட்டியது மெய்ஞ்ஞான
நிட்டானு பூதி நிரம்பலா லுள்ளத்திற்
கொட்டாவி விட்டுக் குலைந்தமனத் துன்பமறப்
பெட்டாங் கியல்பாப் பெரிதுநுகர் கின்றேனே.

### உ. ஞான சமாதி

(கொச்சகக் கலிப்பா)

1912. கடவதெனக் கொன்றுமறக் கர்த்தத் துவப்பொய்ம்
மட்வுணர்வை மாற்றியே வாழ்வுசிவ மாகத்
தொடர்வுறுமெய்ஞ் ஞானத் துரிய சமாதி
யடர்வதா லற்றதுகா ராணவப்பாழ்ம் பேயே.

### ௩. ஞான சித்தி

(வெண்பா)

1913. பேரின்ப மோனவருட் பெற்றிசேர் சிற்சொரூபத்
தோரன் புளத்தியல்பா வூறலால்—கோரங்
கலந்த வகந்தைமயற் கர்த்தத் துவங்கெட்
டலர்ந்ததுஞா னானு பவம்.

1914. சுடந்தவொளி யானவருட் கைவல்ய வுண்மை
படர்ந்தொளிர்சற் போதப் பதத்தே—தொடர்ந்தியல்
வான சொரூபஞா னானுபவ மாட்சி யெனக் [வாழ்
கூனமற வோங்கிற் றுளத்து.

1915. பிரியலற்ற மோனவருட் பெட்பா லுளத்திற்
பெரிய பரம்பொருளைப் பேணித்—துரியமா
மப்பொருளை நாளு வகந்தெளிந்த ஞானசித்தித்
துப்புரவா லார்ந்தேன் சுபம்.

(கொச்சகக் கலிப்பா)

1916. உண்மையா வுள்ளத் தொளிர்சொருபன் சுத்தவருள்
வண்மைசே ரன்பு மலர்த்தபே ரின்பமா
நுண்மைசேர் கைவல்ய நோக்கங் கிளர்தலாற்
றிண்மைசேர் மெய்ஞ்ஞான சித்தி விளைந்ததே.

1917. யானதுவென் றெண்ணி யிடர்ப்படா தொட்பநுட்ப
மோனவுணர் வாலகத்து நானதுவா மூண்டொழிந்
[தேன்
ஊனவுடற் பாழுணர்வா மூத்தை யகந்தையறத்
தானெனைநன் காண்டுகொண்ட சற்குருஞா
[னத்தாலே.

## ௪. ஞானமுறல்

(வெண்பா)

1918. சாந்தசிவ மாகத் தழைத்த சொருபவருள்
பாய்ந்தமைந்த சுத்தமனப் பான்மையிலே—ஓய்ந்
[தொடுங்கிச்
சுட்டறிவா மோகச் சுழற்சிசேர் பாழகந்தை
கெட்டதுமெய்ஞ் ஞானங் கிளர்ந்து.

(கொச்சகக் கலிப்பா)

1919. முற்ற முழுமுதலா(ம்) மோனப் பரவடிவே
அற்றமரு ஞான வருட்பிழம்பாந் தன்னதியற்
பெற்றியால் வீற்றிருக்கப் பெற்றதா லென்னகத்தில்
வெற்றறிவா லிவ்வுலகு வெற்றிகொளப் பட்டதே.

1920. சிந்தையற்ற வாழ்வு சிவானுபவச் செல்வமா
விந்தைசேர் மோனவருள் வெற்றியா லுற்றதால்
பந்தமுத்தி யாவும் பகற்கனவாங் கற்பனையாச்
சிந்தவே தாந்தச் சிறப்புவெளிப் பட்டதே.

1921. கன்றியே புன்புலத்திற் கட்டுண் டழுங்காது
நன்றிசே ரொன்றன்மெய்ஞ் ஞானக்கால் நல்லிதய
மன்றிலே யென்னை மலரவைத் தாண்ட அருள்
வென்றியே போற்றி விளங்குவதென் சிந்தையே.

1922. அறிவிற் பிறந்தே னறிவில் வளர்ந்தேன்
அறிவே சொரூபமா வார்ந்தே னகத்தே
அறிவன்றி மற்றொன் றறியா வறிவே
யுறவாக வுள்ளத் துறப்பெற்ற தாலே.

1923. *துன்றுமதி சுட்டறத்தற் சோதனையா லுள்ளாழச்
சென்றுசென்று நுண்ணுணுகித் தேய்ந்துதேய்ந்
[தற்றொழிவால்
ஒன்றியா வுள்ளவோ ரொன்பொருளே தானென
வென்றிசேர் ஞான விளக்கமகம் பற்றியதே.

* துன்றுமதி - தேகவடிவாகத் துன்றிய நானென்னும் அகந்தைமதி.

1924. திரோபவப்பொய்ம் மாயச் செருக்கொழியப் பொங்கு
சொரூபவருட் பார்வைச் சுடர்வாளாற் காமக்
குரோதமுத லான கொடும்பகையுந் தொந்த
விரோதமனக் கற்பனையும் வெற்றிகொண் டேனே.

குறிப்பு:—தொந்த விரோத மனக்கற்பனை—மனக் கற்பனை தொந்த விரோதம் என மாற்றிக் கொள்க; தொந்த விரோதம் இன்பு துன்பிருளொளி என்றாற் போன்ற இரட்டைகளின் மாறுபாடு

1925. என்றென்று மின்றாக வெங்கெங்கு மிங்காக
வொன்றலுற்ற மோன வுணர்வா வுளம்பொங்கத்
துன்றலுற்ற சுத்தத் துரியசொரூ பானுபவ
வென்றியிலே தோற்றதுபல் வேற்றுமைசேர்
[கற்பனையே.

## ௫. ஞான வெற்றி

(குறள்)

1926. துன்றுமே கான்ம சொரூபப் பரமார்த்த
வென்றியால் வீறுபடைத் தேன்.

குறிப்பு:—வென்றி கண்டு ஞானவெற்றி.

(வெண்பா)

1927. கொடியமோ கப்பாழ்ங் குழிதூர்ந் தொழிய
அடியனே னுண்டா னருளால்—விடியவா
மேற்கதியின் மேவினேன் மாயா விஜயமறத்
தோற்கலுற்ற தென்கண் ணெதிர்.

1928. புத்திக் கமுதமாய்ப் பொங்குசொரூ பானுபவ
முத்தித் துலக்கமுறு மோனமே—சித்தத்
துருவாக் கலத்தலா லுற்ற துளத்தா
டொருவாக் கியமெய் யுணர்வு

1929. பொய்ஞ்ஞால மோகமறப் பொன்றப் புலங்கடந்த
மெய்ஞ்ஞான வென்றியே வென்றியன்றி—அஞ்ஞான
மோகக் கறைப்புணரி மூழ்கிக் கலங்குமதி
வேகமுனைப் பன்று விறல்.

## ௬. ஞான அருள் வெற்றியும் பயனும்

(வெண்பா)

1930. மிகத்திகழ்மெய்ஞ் ஞானவருள் வெற்றித் திறத்தால்
அகத்தே தடுமாற்ற மற்றேன்—மகத்தா
நடப்பவையா வேணு(ம்) நடக்க வவற்றால்
இடர்ப்படுவே னல்லே னினி.

குறிப்பு:—மெய்ஞ்ஞான வடிவான அருள் வெற்றி.

## ௭. ஞான சொரூப வெளி

(வெண்பா)

1931. அனுபவமாத் தேறினே னுபாச மான
மனவுணர்வின் மாயங் கழன்றேன்—தனுகரணம்
நானன் றெனதன்று ஞான சொரூபவருள்
வானெனன் றெனது வடிவு.

## ௮. ஞான நோக்கால் மெய்த்தன்மை யுற்றது

(வெண்பா)

1932. மருள்வளர்வாழ் வான மயக்கமற்ற நோக்கால்
அருள்வெளியே நானு வமைந்தேன்—இருள் வழியாம்
பற்பல் கதிகளும்பாழ் பட்டொழியப் பற்றியது
தற்பரமெய்த் தன்மை தழைத்து.

## கூ. ஞான வாழ்வு

(வெண்பா)

1933. நிலைக்கழிவோ வில்லை நிழல்போலுந் தோற்றத்
தலைக்கழிவு மில்லை யறவே—கலைக்கழிவா
முண்மைஞா னானுபவ முள்ளத் துறுதலால்
வண்மைசேர் வாழ்வு மடுத்து.

## க0. ஞான வித்தை

(குறள்)

1934. சுத்தவறி வாகத் துலங்குமென் னுண்மையன்றி
வித்தைநான் வேறுதே றேன்.

## கக. ஞானானந்தம்

(கொச்சகக் கலிப்பா)

1935. துயர்ச்சிசேர் கற்பனா சொப்பனவெம் பாச
மயற்கட் டறிவா மனப்பாழுக் கப்பால்
அயர்ச்சியின் றாக வவிர்சிற் சொரூப
வியற்செம் பதத்திலெனக் கின்பங்கண் டேனே.

## கஉ. ஞான நவநிதி

(வெண்பா)

1936. மோனத் திருவாய் மொழிப்புலவோன் கூட்டிய [மெய்ஞ்
ஞானமே நல்ல நவநிதியாய்—ஊனமனக்
காட்சியாம் பொல்லாக் கலக்கமறச் சிற்பரமா
மாட்சிசேர் வுற்றது வாழ்வு.

## கங. ஞானானுபூதி

(குறள்)

1937. பரசிவஞா னானுபவம் பற்றலா லற்றேன்
பருவரல்சேர் மோகப் பதைப்பு.

1938. கல்வியமோ கப்பாழ்ங் கலக்கமறக் கூடியது
செவ்வியமெய்ஞ் ஞானத் திறன்.

1939. பாச வுலகமயற் பார்வையறக் கூர்ந்தது பாழ்ங்
கோசமற்ற வுண்மைக் குலா.

(வெண்பா)

1940. அருட்பத்தி சான்றமெய் யன்ப ரினத்தில்
விருப்பொத்த வாழ்வெனக்கு மேவக்—கருப்பட்டி
நாவிற் கலந்தாங்கு ஞானானு பூதியென்
ளுவிக்க ஞானூறுகின்ற தால்.

(கொச்சகக் கலிப்பா)

1941. உள்ளப் படாதபர வுண்மையே யென்னுருவாக்
கள்ளப் படாதவருட் காட்சியாற் கண்டுகொண்டேன்
உள்ளத் தியல்கின்ற தொட்பநுட்ப மோனமா
நள்ளற் கினியமெய்ஞ் ஞானானு பூதியே.

1942. இருளை விளக்கு மியல்வெளியா(ம்) மோனப்
பொருளிலே ஞானாநு பூதிநலன் பெற்றேன்
மருளா வியன்ற மனக்கற் பனைதீர்
அருளாந் தெருளி லகந்தைமுனைப் பற்றே.

1943. வான வியற்கே வலமா மனங்கிளர்வால்
ஏனை யுடலுலகோ டெத்தொடர்பு மின்றாக
நானற் றெழுகுசிவ ஞானானு பூதியே
மோனப் பரசொருப முத்தியா மூண்டதே.

1944. அண்ணாத மோன வருட்பரத்தை ஆருயிரு
டெண்ணும வெண்ணி யிதயத் திதயமா
நண்ணுநின் றூர்சொருப ஞானானு பூதியெனக்
குண்ணா ரமுத வுணர்வொளியா வுற்றதே.

குறிப்பு:— இதயமா எண்ணி எனக் கூட்டுக.

1945. எண்ணலரு மோன வியற்செம் பிரான்சொருப
வண்ணமா வுள்ளம் மலர்தலால் வாழ்தலுற்றேன்
பண்ணவொன்று மற்றவருட் பாரப் பரவெளியா
நண்ணுமியற் கைவல்ய ஞானானு பூதிபெற்றே.

1946. சூதான மோகமனச் சூழலிற்கண் டுஞ்சலுற்றேன்
மீதார்வம் பொங்கவருள் வீட்சணஞ்செய் தாண்
[டபிரான்
பாதார விந்தவொளி பாய்தலா லுள்ளத்திற்
போதானு பூகி புணர்ந்தியல்பாப் பொங்கியதே.

1947. போக சொரூபவருட் பூரணமாப் பொங்குகுரு
பாதமே சற்கதியாப் பற்றலுற்றே னுள்ளத்து
மேதகுவாழ் வாக விளைந்ததுகா ணிஞ்சிலுமோர்
பேதமற்ற சுத்தப் பிரம்மானு பூதியே.

1948. அன்பே சொரூபமா வாண்ட விறைரமணன்
றன்பெயரே மிக்கபெருந் தாரகமாச் சார்தலுற்றுங்
கின்பவுணர் வூறவுளத் தெய்தியது சுத்தசிவ
நன்பதப்பே றுனமெய்ஞ் ஞானனு பூதியே.

1949. உண்ணெக் குருகவெனக் குண்ணு ரமுதமா
வண்ணிப்ப தாக வகங்கிளரப் பொங்கியது,
நண்ணக் கடவதுமெய்ஞ் ஞான சொரூபவருள்
வண்ணப் பதமென்று மாமறைநூல் சாற்றுவதே.

கஎ. ஞானகாசமானேன்

(வெண்பா)

1950. மூன்று கழற்றி முடிந்தியல்சற் போதவொளி
சான்றவனு பூதியுளஞ் சார்தலால்—ஊன்றுபரந்
தானேதா னாகத் தழைத்தவருட் சிற்கனவா
னானே னசங்கமா னேன்.

* மூன்று கழற்றி - சரியை கிரியை யோகக் கழற்றிகள்.

## 29. சுபம்

(வெண்பா)

1951. எவ்வமெனக் கில்லேன்பே ரின்பவருட் செம்பொரு [ளென்
கைவளர்நெல் லிக்கனியிற் கைவரலால்—ஒவ்வவியல்
சிற்பரமா மோனச் செழும்பதத்தண் ணீழலின்பத்
துப்புரவா வார்ந்தேன் சுபம்.

1952. வித்தாக முத்திக்கு மிக்கவருட் கேவலசச்
சித்தாக வென்னுட் செறிந்தபிரான்—பொய்த்தோட
மாயப் பிறவி மயக்கறுக்குஞ் சோதிபதந்
தோயப்பெற் றுய்ந்தேன் சுபம்.

1953. ஆண்டானை நன்று வறிகின்றே னன்பினுவந்
தீண்டாநின் றுனிதயத் தென்னுருவாப்—பூண் [டார்வம்
பொங்கமேன் மேலும் புளகித் துயிர்தழைப்பத்
துங்கவாழ் வுற்றேன் சுபம்.

1954. ஞானவெளி யாக நடக்குங் குருபாத
மோனவுணர் வேசொருப முத்தியாய்—ஊனமாம்
பந்தமுத்தி யெண்ணுமனப் பாசமகன் றென்று [முள்ள
சொந்தவியல் சார்ந்தேன் சுபம்.

ஸ்ரீ ரமணார்ப்பணமஸ்து